கழக வெளியீடு: உஎ௪

# அகநானூற்றுச்
# சொற்பொழிவுகள்

[பேராசிரியர் அறுவர் சொற்பொழிவுகள்]

ச. அ. இராமசாமிப்புலவர்,
கருப்பக்கிளர். ([illegible])
கோட்டூர் வழி, தஞ்சை மாவட்டம்.

சென்னையில் 15-12-40-ல், நிகழ்ந்த அகநானூறு மாநாட்டில் நிகழ்த்திய தலைமையுரையும், சொற் பொழிவுகளும் அடங்கியுள்ளன.



திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி. :: சென்னை-1.

# பதிப்புரை

நமது கழகத்தின் சார்பில் நடைபெற்று வருகின்ற அறநிலையங்களுள் ஒன்றான தென்னிந்திய தமிழ்ச் சங்கத்தின் ஆதரவில், பல இலக்கிய மாநாடுகள் தொடர்பாக நடந்துவருதல் நேயர்கட்குத் தெரிந்ததேயாம். இதற்குமுன் 'கலித்தொகை மாநாடு', 'குறுந்தொகை மாநாடு' என்னும் இரண்டு மாநாடுகள் நடைபெற்றிருக்கின்றன. இப்போது அகநானூறு மாநாடும் நடைபெறுகின்றது.

மாநாட்டில் நிகழுஞ் சொற்பொழிவுகள் நிலையான இலக்கிய ஆராய்ச்சிகளைச் சேர்ந்தவை; சிறந்த பெரு நூல்களைப்பற்றியவை; ஆராய்ச்சியாளர்க்கும் மாணவர்க்கும் என்றும் உதவக்கூடியவை. ஆதலால், அவற்றைச் 'சிலையி லெழுத்துப்' போல நிலைபெறுத்த வேண்டுவது இன்றியமையாததா யிருக்கின்றது.

மாநாட்டுச் சொற்பொழிவுகளை உடனுக்குடன் நூலாக அச்சிட்டு அவ்வம் மாநாட்டிலேயே குறைந்த விலைக்கு வெளியிட்டு வருகின்ற எங்கள் முறைமைப்படி, இப்போதும், இவ் அகநானூற்றுச் சொற்பொழிவுகள் என்னும் நூல் வெளிவருகின்றது.

குறுந்தொகை மாநாடு நடைபெற்ற இரண்டு கிழமைகளுக்கெல்லாம் அடுத்து இவ் அகநானூறு மாநாடு நடைபெறுகின்றது. இதற்குள் இந் நூல் உருவா யிருக்கின்றது. தலைவர்களும் சொற்பொழிவாளர்களும் இவ்வளவு சுருங்கிய காலத்திலும் இந் நூல் இந்த அளவுக்கு உருவாகும்படி உதவிய அருஞ் செயல் பெரிதும் பாராட்டற்பால தொன்றாகும். எங்கள் உளமுருகிய நன்றியை அவர்களுக்குப் பேரன்புடன் தெரிவித்துக்கொள்ளுகிறோம்.

வழக்கம்போலவே தமிழ்ப் பெரியோர்கள் இத்தகைய நன் முயற்சிகளுக்குத் தக்க ஆதரவுகள் நல்கி மேன்மேல் மாநாட்டு நிகழ்ச்சிகளுக்கு ஊக்கமூட்டுவார்களென்று பெரிதும் எதிர்பார்க்கிறோம்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# உள்ளுறை



கரந்தைக் கவியரசு,

R. வேங்கடாசலம் பிள்ளை

# தலைமையுரை

[கரந்தைக் கவியரசு R. வேங்கடாசலம் பிள்ளை.]

“முருகனே செந்தில் முதல்வனே மாயோன்
மருகனே ஈசன் மகனே—ஒருகைமுகன்
தம்பியே நின்னுடைய தண்டைக்கா லெப்பொழுதும்
நம்பியே கைதொழுவேன் நான்.”

பெரியீர்! சால வணக்கம்

அமிழ்தினும் இனிய நம் செந்தமிழ்மொழிக்கு, இத் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகமும், இதனைச் சார்ந்த தமிழ்ச் சங்கமும் இயற்றிவரும் நற்றொண்டுகள் அளப்பில. இக்கழகம், பாலர்கள் பாடம் முதல், பண்டைத் தமிழ் நூல்கள்* வரை எண்ணிறந்த நூல்களை இனிது அச்சிட்டு வரும் பேருதவி தமிழ்மக்கள் ஒவ்வொருவராலும் போற்றிப் புகழப் பெறுவதொன்றாகும். இங்ஙனம் பண்டை நூல்களை அச்சிற் பதித்து அவற்றிற்குப் புத்துயிர் அளித்து வருதலோடமையாது, இதுபோது, இக் கழகமும், சங்கமும் ஒரு புது முறையில் இறங்கி, அந் நூல்களின் அருமை பெருமைகளை மக்கள் உளத்தேயும் பதித்து அவர்கட்கும் பெரும் பயன் அளிக்க முன்வந்

* தமிழில், இலக்கியங்கட்குச் செய்யுள் என்பதும் இலக்கணங்கட்கு நூல் என்பதும் பெயர். என்றாலும், இக்கால வழக்கு நோக்கி, இங்ஙனம் நூல் என்பது அவ்விரண்டற்கும் பொதுவாகக் கூறப்படுகின்றது.

திருப்பது, மிக மிகப் போற்றிப் புகழப் பெறுவதொன்றாகும். என்னை? பண்டைத் தமிழ் நூல்களை அச்சிற் பதித்து வெளியிடும் அளவானே, அவை, கற்று வல்ல தமிழ்ப்புலவர், அத் தமிழ்ப் புலமை குறித்துக் கற்கும் மாணவர் என்றின்னோர்க்குச் சிறப்பாகப் பயன் படுதலேயன்றிப் பொதுவாக யாவர்க்கும் ஓராங்குப் பயன்படுதல் இல்லையாகலின், அவற்றின் சிறப்புக்களை யாவரும் எளிதின் உணர்ந்து, தாம்தாமும் பயின்றுணர அவாவி, அங்ஙனமே நாளடைவிற் பயின்று பயனுறுமாறு, ஒவ்வொரு நூற் பெயரானும் ஒவ்வொரு மாநாடு கூட்டி, அந் நூல்களின் பொருட் சிறப்புக்களைக் கற்றுவல்ல புலவர்களைக் கொண்டு விரிவுரைகள் செய்வித்தும், அவ்விரிவுரைகளை இனிது அச்சிட்டு மாநாட்டிலேயே வழங்கி யாவரும் எளிதிற் பெறச் செய்தும் வரும் இவ்வரிய பெரிய புதிய தொண்டு, ஒப்புயர்வற்ற சிறந்த தமிழ்த் தொண்டன்றோ! இதுபற்றி, நாம், அவர்கட்கு நமது நன்றியினை முதற்கண் தெரிவிக்குங் கடப்பாடுடையோம். இக் கழகமும், சங்கமும் இவற்றின் நற்றொண்டுகளும் நீடுவாழிய என நாம் இறையனை வேண்டுவோமாக.

பெரியோர்களே!

இதற்குமுன் நடைபெற்ற கலித்தொகை குறுந்தொகை மாநாடுகட்குப், புலவர் உலகம் போற்றும் திருமிகு நாட்டார், நகரத்தார் (பண்டித மணி) என்றின்னோர் தலைமை ஏற்றுள்ளார். ஆனல், எச் சிறப்பும் மேவாதயான் அவ் வுயர் பதவியை ஏற்குமாறு பணிக்கப் பெற்றுளேன். தமிழுலகிற்குச் சிறந்த பல தொண்டுகள் ஆற்றி வரும் இக் கழகமும் சங்கமும் பணிக்கும் எப் பணியினையும், எந்தத் தமிழ் மகனும் எத்தகைய தடையுங் கூறாது

ஏற்று, இயன்ற தொண்டுகள் செய்யும் கடப்பாடுடைமை யுணர்ந்து, யானும் பணிவினுலேற்கும்படி நேர்ந்ததேயன்றி வேறில்லை. நிற்க.

## க. பண்டை இலக்கண இலக்கியங்கள்

பெரியோர்களே!

ஒரு நாட்டின் மக்களது வாழ்க்கையில் அவ்வக் காலத்தே எய்திய உயர்வு தாழ்வுகளைக் காட்டுவது அந் நாட்டில் அவ்வப்போது வழங்கிய நூல்களே யாகும். பண்டைக் காலத்தே நம் முன்னோரது வாழ்க்கை, உலகில் ஏனையர் வாழ்க்கைகளினும் எத்துணையோ சிறந்தது எனலைக் காட்டவல்ல பழைய நூல்கள் எண்ணிறந்த எழுந் தன. ஆயிரக் கணக்கான ஆண்டுகளிருந்த மூன்று சங்கங் களின் வாயிலாக அவைகள் ஆயிரக் கணக்கில் வெளிவந்து மிளிர்ந்தன. அவையெல்லாம் ஒரு காலத்து நிகழ்ந்த கடல்கோளின் வாய்ப்பட்டொழிந்தன. என்றாலும் நமது நல்லூழின் பயனாக அவற்றுட் சிற்சிலவேனும் எஞ்சியுள் ளன. இச் சில நூல்களே நம் முன்னோரது வாழ்க்கைச் சிறப்பினை உலகிற்கு நன்கு எடுத்துக்காட்டப் போதிய சான்றுகளாகவுள்ளன. ஒரு மொழியில் உள்ள இலக்க ணங்கள் அம் மொழியின் எழுத்துக்களின் பிறப்பு, ஒலி, உரு, அவை தனித்தோ இயைந்தோ சொற்களாக அமையும் நெறி என்றின்னவற்றைக் கூறும் எழுத்து இலக்கணமும், சொற்களின் வகை, சிறப்பிலக்கணம், பொதுவிலக்கணம், அச் சொற்கள் இணைந்து தொடர்ந்து முடியும் உரைநடைச் சொற்றொடர் என்றின்னவற்றைக் கூறும் சொல்லிலக்கண மும், செய்யுட்கள், அவற்றிற் காணலாகும் பல்வகை அணி கள் என்றின்னவற்றைக் கூறும் யாப்பு அணி இலக்கணங் களும் என நான்கு வகையாகும். நமது தமிழ் மொழியிலோ

இவற்றுடன் இவற்றின் வேறாகிய பொருளிலக்கணம் என்ப தொன்றுஞ் சிறப்பாகவுள்ளது. இங்ஙனம், தமிழ் இலக் கணத்தே பொருளிலக்கணமென ஒன்று மேவியதின் கார ணம், தமிழ் இலக்கியங்களிலே வேறு எம் மொழியிலக்கி யங்களிலும் காணப்பெறாத ஒரு சிறந்த பொருட் பகுதி யிருந்ததலே யாகும். இலக்கியங்களிற் பரந்து விரவிக்கிடக் கும் பொருட் பகுதிகளைத் தொகுத்து வகைப்படுத்தி வரை யறுப்பதே இலக்கணத்தின் செயலாகலின், தமிழ் இலக் கியம் பொருட் பகுதியென ஒன்றைச் சிறப்பாகக்கொண்டி ருக்க, தமிழ் இலக்கணத்திலும் பொருளிலக்கணம் என்ப தொன்று சிறப்பாக வந்தெய்துவ தாயிற்று.

பண்டைத் தமிழ் மக்களிடத்தே அவர்தம் வாழ்க்கை யில் இயற்கையாக நிகழ்ந்தனவாகிய வழக்க ஒழுக்கங் களையே தமிழ் இலக்கியங்கள் பாராட்டிச் சிறப்பித்தன. இவ் விலக்கியங்கள் என்றும் எங்கும் நிகழாதனவாகிய செயல்களை மக்கள் தலையில் ஏற்றிச் சிறப்பித்தல் இல்லை. இவ் வழக்க ஒழுக்கங்களே மேற்கூறிய பொருட் பகுதி யாகும். அன்புநெறியில் ஓர் ஆண்மகனும் பெண்மகளும் கூடி இன்புற்று வாழ்வதைப் பற்றியன வெல்லாம் அகப் பொருள் என்று கூறப்பெற்றன. இவ் வாழ்க்கையின் முடிந்த பேறாகிய வீடுபேற்றைப் பற்றியதும், அதற்குக் கருவியாகிய அறஞ் செய்தல், அவ்வறத்திற்குக் கருவியாகிய பொரு ளீட்டல், அவ் வாழ்க்கையின் கருவிகட்கு இடையூறு மேவிய வழிப் போர் செய்து வெல்லுதல்-இவைகளைப்பற்றி யதும் ஆகிய செய்திகள் புறப் பொருள் என்று கூறப்பெற் றன. மேற் கூறியவற்றுள் இவ் வகமும் புறமும், அறம் பொருள் இன்பம் வீடு எனவும் விரியுமாயினும், மக்கள் வாழ்க்கையின் அறச் செயல்களையும் மறச் (வீரச்) செய லினையும் அவற்றின் முதன்மை நோக்கி, அகம்புறமெனக்

கிளந்து நிறீஇ. அவற்றின் பயனாய் வழிநிற்கும், அறம் பொருள் வீடுபேறுகளை, அவற்றின் வேறாக்காது இணைத் துரைக்கும் தமிழ் இலக்கிய நுட்பம் பாராட்டற் குரியது.

இவ் விலக்கியங்களிற் காணப்பெறும் அகப்பொருள், புறப்பொருள்கள் பலவகையிற் பகுக்கப் பெற்று மிகப் பலவாக விரிந்து விரவிக் கிடப்பவாயின. அகப்பொருளில் ஒரு தலைவனுடைய கூற்றுக்களும் செய்திகளும் பலவகை யாகிப் பல செய்யுட்களில் வேறு பலருடைய கூற்றுக்கள் செய்திகளோடு விரவிக் கிடக்கலாமல்லவா? இங்ஙனமே போர்ச் செயலினும் வெட்சியார் எனும் ஒரு பகுதியினர் செயல்கள் பல செய்யுட்களில் வேறு பலவற்றோடு விரவிக் கிடக்கலாமல்லவா? இவற்றையெல்லாம் தனித்தனி பிரித்து வகைப்படுத்தி வரையறை செய்வது இலக்கணத் தின் செயலாகலின் அங்ஙனமே நம் தமிழிலக்கணங்கள் மக்களுடைய அகம்புறமெனும் பொருள் நிகழ்ச்சிகளை வகைப்படுத்தி வரையறை செய்துதந்து சிறந்து விளங்கு கின்றன. இங்ஙனமாகிய நம் பண்டை நூல்களின் சிறப்பு அளவிடற்பாலனவல்ல.

இவற்றுள், பண்டை இலக்கியங்கள், பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண் கீழ்க்கணக்கு எனும் இவை முதலியவாகும். கணக்கு என்பது நூல் எனும் பொருளில் பண்டும் இன்றும் கற்றோர் நூல் வழக்கினும், கல்லார் உலக வழக்கினும் பயின்றுவரும் தூய தமிழ்ச்சொல். நாட்டு மக் கள் அடிக்கடி 'கணக்கு வழக்கின்றி' என்ற சொற் றொடரை வழங்குமிடத்து, அவர்கள் அறிந்து கூறு வோம். அத்தொடர், 'நூல் வழக்கு உலக வழக்கு இன்றி' எனும் பொருளில் தொன்று தொட்டு வருவ தென்பதை அறிஞர் அறிவர். பத்துப்பாட்டும் எட்டுத்

தொகையும் மேற்கணக்கு என்று கூறப்படுமாகலின் கீழ்க் கணக்கே போல் இவையும் பதினெட்டாயின. அடியளா வால் சிறுமை பெருமை கொண்டு நிற்கும் இந் நூல்கள், எண் அளவால் பதினெட்டுப் பதினெட்டாக ஒத்து நிற்றல் ஒரு வியப்பைத் தருவதாகும்.

இச் சங்க இலக்கியங்கள் அவற்றிற் பயிற்சியில் லார்க்கு ஏதோ ஒரு புதுமொழி போன்று காணப்பெறு மேனும், அவை வழங்கிய காலத்து அவை எளிதே புலனாகக்கூடிய நிலையிலுள்ளனவே. வேற்றுமொழிப் பயிற்சியால் ஒடுங்கிவரும் இக் காலத்துத் தமிழ் மொழி நடையினை அளவு கருவியாக்கிப், பண்டைத் தமிழ் நடை யினை அழித்தல் ஒல்லாது. இங்ஙனமே இக் காலத்து மக்கள் நிகழ்ச்சிகளைக் கொண்டு, அவ் விலக்கியங்களிற் காணும் மக்கள் நிகழ்ச்சிகளை அளந்தறிந்து, அவற்றுட் சில பல இல்லன புனைந்துரைத்தல் என்று மதித்திடலும் ஒல்லாது. உலகத்தே இயற்கையில் நிகழும் நிகழ்ச்சிகளை நிகழுங் காலத்தே விடாது படம் பிடித்துக் காட்டும் செயலை ஒத்த சிறப்பின, இவ் விலக்கியத்திற் காணும் ஒவ்வொரு செய்யுளும், அவற்றின் ஒவ்வோரடியும். இங்ஙனமாகிய இலக்கியங்களுட் சிறந்ததாகிய அகநானூறு எனும் அரிய நூலின் சிறப்பே, நாம், இங்குக் கல்வி யாராய்ச்சிகளில் வல்ல விரிவுரையாளர்களாகிய நம் அன்பர்களின் வாயிலாகக் கேட்டு மகிழவிருப்பது. திணை, திணையாகப் பகுத்துக்கொண்டு செய்யுள் செய்யுளாகவும் பொதுவாகவும் அவ்வத்திணைச் சிறப்புக்களை எடுத்துக் காட்டும் அவ் விரிவுரையாளர்களின் பேறு, எனக்குக் கிட்டவில்லையாகலின் யான் ஏதோ, பொதுவகையில் அதன் சிறப்பினை ஈங்குக் குறிப்பேன்.

## உ. அகநானூறும் அதன் சிறப்பும்

இவ் அகநானூறு மேற்கூறிய எட்டுத் தொகையுள் ஒன்றாகும். எட்டுத் தொகை இவை எனலே,

"நற்றிணை நல்ல குறுந்தொகை யைங்குறுநூ
றொத்த பதிற்றுப்பத் தோங்கு பரிபாடல்
கற்றறிந்தோ ரேத்துங் கலியோ டகம்புறமென்
றித்திறத்த வெட்டுத் தொகை."

எனும் செய்யுளால் அறியலாம். இவற்றுள் நற்றிணை குறுந்தொகை, ஐங்குறுநூறு, கலி, அகம் எனும் இவை அகப்பொருள் நூல்கள். பதிற்றுப் பத்து, பரிபாடல் புறம்- இவை புறப்பொருள் நூல்கள். அகப்பொருளைக் கூறும் நூல்கள் பிறவுளவாகவும், இதற்கு அகம் என்றே குறியிட்டிருப்பது, இதன் தனிச் சிரினைக் காட்டுவதாகும். மேற் செய்யுளில், 'கற்றறிந்தோர் ஏத்தும் கலியே யகம்புற மென்று' எனச் செய்யுளியற்றினும் அமையுமேனும், கலி யோடகம் என ஒடுக்கொடுத்து அகத்திணையும் சேர்த்துக், கற்றறிந்தோர் ஏத்தும் சிறப்பிற்கு உரியதாக்கி யிருத்தலுங் காண்க. இத் தொகை நூல்களுள் அடி வரையறையால் நீண்டன பிறவும் உளவாகவும், இதற்கே நெடுந்தொகை யெனப் பெயர் எய்தியுளதை நோக்க, இது செய்யுளானன்றிப் பொருட் சிறப்பானும் நீண்டுளதெனும் முன்னோர் குறிப்புப் புலனாகும்.[1]

பேராசிரியர் தொல்காப்பிய உவம இயலின் இறுதியில், ஆனந்த வுவமை என்பதொன்றை மறுத்துக் கூறுவார், "ஆனந்த வுவமை என்பன சில குற்றம் அகத்திய

1. ஆசிரிய அடிகளானுய அகப்பொருள் நூல்களுள் இஃது அடிவரையறையான் நீண்டிருத்தலின் இப் பெயரெய்திற்று என்றும் பிறவாறும் கூறுநரும் உளர்.

ஞர் செய்தாரெனக் கூறுபவாகலின் அவையிற்றை அவ்வாறு கோடுமெனின், அவைகள்தாம் அகத்துள்ளும் பிறசான்றோர் செய்யுளுள்ளும் வருதலிற் குற்றமாகா" என்று முடித்துழி, அவர் இதனை ஏனையவற்றிற் பிரித்துக் கூறி இதற்குத் தலைமை தந்திருப்பது நன்கு உணரலாகும்.

அகப்பொருள் முதல், கரு, உரி என்ற மூன்று பிரிவினையுடையது. தலைவன், தலைவி, முதலாய மக்களுடைய கூற்றுக்களைச் செய்திகளுடன் புலப்படுத்துவது உரிப்பொருளாகும். அவை நிகழும் தேயம், காலம், அங்குள்ள ஏனைப் பொருள்கள் முதலியவற்றைப் புலப்படுப்பன, நிலமும் பொழுதுமாகிய முதற்பொருளும், விலங்கு, பறவை, மரம், நீர்நிலை முதலாய கருப்பொருளு மாகும். இவற்றுள் உரிப்பொருள் சிறந்தது; உயிர்நிலையாயது. ஏனையவை அதற்குத் துணை நின்று அதனைச் சிறப்பிப்பன; உடல் நிலையாயவை. இக் காலத்தே நிகழும் 'சினிமா' என்னும் ஒளிப்படங்களில், மக்களுடைய கூடுதலின்பம், பிரிதற் றுன்பம் முதலாய நிகழ்ச்சிகளை, இடம், காலம், அங்குள்ள ஏனைப் பொருள்களோடு இணைத்துக் காட்டலின், அக் காட்சிகள் சாலச் சிறப்புறுகின்றன. அங்ஙனமே, அகப் பொருட் செய்யுட்களிற் காணும் கூட்டம், பிரிவு முதலாய உரிப்பொருள்கட்கு, முதற்பொருளும் கருப்பொருளும் இணைந்து நின்று, அவற்றைச் சிறப்பிக்கும். இவற்றுள் உரிப்பொருள் இன்றியமையாத தொன்றாகலின், அகப் பொருட் செய்யுட்கள் அதனொடு தத்தம் அடியளவிற் கேற்ப, முதல் கரு எனும் பொருள்களையும் ஏற்ற பெற்றி கொண்டு வரும். மிக விரிந்த நிலையில், முதலுங் கருவும் கொண்டு, உரிப்பொருளாற் சிறப்பெய்தி நிற்கும் பெரு நலம் வாய்ந்த செய்யுட்களை எடுத்துக்காட்ட வந்த தொல் காப்பிய உரைகாரர்களாகிய இளம்பூரணரும், நச்சினார்க்

கினியரும், முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலை— எனும் ஐந்து திணைக்கும் இந்த அகநானூற்றி லிருந்தே செய்யுட்கள் எடுத்துக் காட்டியுள்ளனர். (அகம். க, ௬, ௬௦, ௬௯, ௫௯., உகஅ) இங்ஙனம் அகப்பொருள், வளங்களை யெல்லாம் முற்றக் கொண்டுவரும் செய்யுட்கள் இதன்கண் மிகபபல.

இனி, இவ் அகநானூற்றின் செய்யுட் சுவைகளை ஆய்ந்து மகிழ்ந்த சான்றோர் இதன் செய்யுட்களை மூன்று வகை யாக்கி அவற்றிற்குக் களிற்றியானை நிரை, மணிமிடை பவளம், நித்திலக் கோவை எனப் பெயர் அணிந்துளார். இவை செய்யுட் சுவைபற்றி எழுந்த பெயரென்பது நன்கு புலனாதல்போல, இவை எவ்வெக் காரணத்தான் எய்திய பெயர்கள் என்பதும், இப் பெயர்கட்கும் இவற்றிற்குரிய செய்யுட் பகுதிகட்கும் உரிய இயைபு இன்ன வென்பதும், நன்கு புலனாதலில்லை. இந் நூலின் இறுதியிலுள்ள "நின்ற நீதி" என்று தொடங்கும் பாயிரச்செய்யுளை யடுத்துள்ள உரைநடைச் சொற்றொடர்களுள், இப்பெயர்களின் பொருட் காரணங்கள் ஒருவாறு கூறப் பெற்றுள எனினும் அவைகளும் அவற்றை நன்கு தெளிவிப்பனவாக இல்லை: இவை எங்ஙனமாயினும், 'தோள்கண்டார் தோளேகண்டார்' ரென்றாங்கு நெடியவாகி நிமிர்ந்தொழுகும் அடியினைக் கொண்டு செருக்குற்றுச் செல்லும், செய்யுட்களின் சொல் நடை யொன்றே கண்டு மகிழ்வுழி, இச் செய்யுட்கள் யாவும், களிற்றியானை நிரையெனக் காணப்பெறுகின்றன. அன்றி, வெண்ணிலவின் கதிரினும் தண்மையும் ஒண்மையுமுடைய நன்முத்தின் ஒளியெனச் செல்லும் பொருட்சிறப் பொன்றே கண்டு மகிழ்வுழி, இச் செய்யுட் பொருள்கள் நித்திலக் கோவையெனக் காணப்பெறுகின்றன. இனி, இத்தகைய செய்யுளையும் பொருளையும் ஒருங்கு நோக்கி

மகிழ்வார்க்கு, அவை யிரண்டும் மணியும் பவளமும் மிடைந்தாற் போன்ற காட்சி யளித்து மகிழ்வூட்டுகின்றன. இப்பெயர்க ளெல்லாம், இந் நூற் பாயிரத்துட் காணப்பெறு மாறு, "வான்றோய் நல்லிசைச் சான்றோர் குழீஇ,—அருந் தமிழ் மூன்றுந் தெரிந்த காலை" வைத்த பெயர்களே யாகும். பண்டை இலக்கண உரைகாரர்களெல்லாம் இப் பெயர்களை எடுத்தாளுகின்றனர். இங்ஙனம் தொன்மை வாய்ந்த இப் பெயர்களும் இந் நூலிற்கேயுள்ள தனிச் சிறப் பினைக் காட்டுவனவாகும்.

இனி, இந் நூலிலுள்ள செய்யுட்களின் முறை வைப் பும் ஒரு தனிச் சிறப்பினதாகும். ஒவ்வொரு பத்து செய் யுட்களிலும் உள்ள ஒற்றை எண்கள் பாலையாகும்; இரண் டும் எட்டும் குறிஞ்சி; நான்கு முல்லை; ஆறு மருதம்; பத்து நெய்தல். எனவே பாலைக்கு இருநூறும், குறிஞ் சிக்கு எண்பதும், ஏனைய முல்லை மருதம் நெய்தல்கட்கு நாற்பது நாற்பதுமாய செய்யுட்கள் உள்ளன. இவ் வைந்திணைகளிலும் உள்ள செய்யுட்களிலெல்லாம் ஊடுருவி நிற்கும் பொருள் அன்பாகும். 'அன்பின் ஐந்திணை' என்பது இறையனார் அகப்பொருள். 'அன்பொடு புணர்ந்த ஐந் திணை மருங்கு' என்பது தொல்காப்பியம். இவ் வன்பின் வெளிப்பாடு, அன்பர்கள் கூடி வாழும் நிலையினும், பிரிந்து துயருறும் நிலையிற்றான் மிகுதியாகக் காணப்பெறும். கதைகள் நாடகங்கள் முதலாய வெல்லாம் கூடி நிற்கும் நிலையினைச் சுருக்கியும், பிரிந்து நிற்கும் நிலையினை விரித்தும் கூறியிருத்தற்குக் காரணம் இதுவே. ஐந்திணைப் பொருள் களில் குறிஞ்சி யொன்றே கூடுதற் பொருளைப் பற்றி வருவ தாகும். இதுதானும் கூடலும் கூடல் நிமித்தமும் என இரு கூறுபடும். இங்குக் கூடல் நிமித்தம் என்பதும் ஒருவகை யிற் பிரிந்து நிற்கும் நிலையினைக் கூறுவதேயாகும். இக்

குறிஞ்சி யொழிந்த ஏனைய திணைகளெல்லாம் முற்றும் பிரிந்த நிலையினைக் கொண்டு வருவனவே யாகும். இப் பிரிவுகள் வெவ்வேறு வகையின. பொருள் தேடல் முதலாய காரணங்களால், ஒரு தலைவன் தன் தலைவி யிடமோ அவள் தோழியிடமோ கூறி விடைபெற்று, ஆற்றொணு வெப்பம் மிக்க காலத்து, செலற்கரிய அருஞ் சுரமாகிய பாலை வழியே நாளும் நாளும் தொலைவிற்கேக, அவன் தலைவியும் இல்லிருந்து வருந்தல் பாலையாகும். அங்ஙனம் சென்றவன், சென்ற வினையினை முற்றி மீளத் தொடங்கி நாளுக்கு நாள் அண்மையில் வாரா நிற்க, தலைவி எதிர்நோக்கி ஆற்றியிருத்தல் முல்லை. பன்னூடுகள் கடந்தோ, கடல் கடந்தோ சென்ற தலைவன் குறித்த காலத்தும் வாராதொழிய, தலைவி ஆற்றுமை கைமிக்கு வாய்விட்டும் புலம்பும் அளவிற்கு வந்து இரங்குதல் நெய்தல். இங்ஙனமெல்லாம் அன்றித், தலைவன் பரத்தையர் இன்பம் காரணமாகத் தலைவியைப் பிரிந்தொழுகும் வழி, அத் தலைவிக்குப் புலவி, ஊடல் முதலியன நிகழ்வது மருதம். இங்ஙனம் குறிஞ்சியின் ஒரு பகுதியும் உள்ளிட்ட ஐந்திணைகளிலும் எய்தும் பிரிவு நிலைகளும் அவற்றைக் கூறு முகத்தான் வரும் அன்பு வெளிப்பாடும், வேறு எந் நூலகத்தும் இல்லாத அளவு, நமது அகநானூறு கொண்டு நிற்றல் இதன் தனிச் சிறப்புக்களோடு இணைந்து நிற்கும் மற்றொரு சிறப்பாகும். இங்ஙனமாகிய இதன் தனிப் பெருமைகளை யெல்லாம் எடுத்து விரிப்பின் மிகமிக விரியும். எட்டுத் தொகையுள், வேறு அகப்பொருள் நூல்கள் எவையும் இதற்கு முன் உள்ளனவாயின், இதற்கு அகம் எனப் பெயர் அமைத்தல் சாலாது. அகம் என்ற பெயருடன் இது முன் தோன்றி யிருத்தலானே, பின்னர்த் தோன்றிய நூல்கட்கு நற்றிணை முதலாய வேறு பெயர்

இடுவாராயினர். இதனால் ஏனைத் தொகை நூல்களினும் இதன் கால நெடுமையும் உணரப்படும்.

இவ் அகநானூற்றின் சிறப்புக்களை, இதன்கண் காணப்பெறும், தலைமகன், தலைமகள் முதலிய உறுப்பினர் சிறப்புக்கள், செய்யுளின் பொருட் சிறப்பு, உவமை, உள்ளுறை முதலிய சிறப்புக்கள், வரலாறுகள், சில அரிய செய்திகள் என்றின்னவாறெல்லாம் பகுத்துக் கூறலா மெனினும், முன்னுரையின் அளவிற்கேற்ப அவ்வவற்றுட் சிறிது சிறிது கூறி முடிப்பேன்.

## ௩. நற்றாய்

அகப்பொருளிற் காணும் வாழ்க்கையின் தொடக்கம், ஒரு தலைவனும் தலைவியும் தாமே ஒருவரை ஒருவர் ஆய்ந்து தேர்ந்து கொள்வதாக விருத்தலின், அந் நெறியில் அவர்கள் தேர்ச்சி, பொருத்தமானதா என்பதை ஈன்ற தாயாகிய நற்றாயும், வளர்த்த தாயாகிய செவிலித் தாயுங் கூர்ந்து ஆய்ந்து வருவார். இவ் வுண்மையினை உணர மாட்டாத தலைவியர், தமது போக்கிற்கு இத் தாய்மார் தடையாக நிற்கின்றனர் எனப் பிழையாக உணர்ந்து மனம் நோதலுறுவர். இன்னோர் இத் தாய்மார்கட்கு 'வல்லுரைக் கடுஞ்சொல் அன்னை,' 'பிணிகோளருஞ்சிறை அன்னை,' என்றின்னவாறெலாம் பட்டம் அளிப்பதுண்டு. தலைவியர், தமக்குத் தக்க தலைவராவாரைத் தாமே தேர்ந்துகொள்வது தாயார்க்கு உடன்பாடே யாயினும், இவர்கள் உடனே வரைந்துகொண்டு வாழ்க்கை நிகழ்த்த வேண்டுமென்பதே அவர்கள் எண்ணமாகும். இத் தலைவியரது களவொழுக் கத்தை அவர்கள் ஒருவாறு ஓர்ந்துணர்ந்து கொண்டிருத் தலேயன்றி ஒரோவழி வெளிப்பட உணர்ந்து விடுதலும்

உண்டு. அந் நிலையினும், அவர்கள், 'கடுஞ்சொல் லன்னை' யெனத் தமக்கிட்டுள்ள பெயர்க்குரிய செயலைக் காட்டுவ தில்லை.

ஒரு தலைவன் தலைவியைக் கண்டு மகிழ அவள் இல் லத்தைச் சார்ந்து ஓர் இடத்தின்கண் வந்து நிற்கின்றான். அதனை நற்றாய் கண்டு கொண்டாள். அங்கு, அவ் வன்னை கூறியது, 'நல்லைமன்' என்பதே. செய்தது, நகைத்து அகன்றது. இவ்வளவே அங்கு நிகழ்ந்தன!

"இல்வந்து நின்றோற் கண்டனள் அன்னை
வல்லே யென்முக நோக்கி
நல்லை மன்னென நகூஉப்பெயர்ந் தோளே."

(அகம் : உ௪அ)

இங்கு, இத் தாயர் நக்கது என்ன நகை, என்பதை மெய்ப் பாட்டியலிற் பேராசிரியர் விளக்குகின்றார். "இது பிறர் எள்ளியது பொருளாகத் தன்கண் நகை பிறந்தது. என்னை? தன் மகள் தன்னை மதியாது இகழ்ந்தாளென நக்கவாறு. இது வெகுளிப் பொருளாக நக்கதன்றோ வெனின், அது வீரர்க்கே உரித்தாகல் வேண்டும். இவள் அவனை வெகுண்டு தண்டம் செய்வாளல்லள். அதற்கே உவப்பினல்லது என்பது." இதனால் அத் தாயரது பெருந் தன்மை புலனாகுமன்றே!

இனி, அகநானூற்றில் காணும் ஒரு செய்யுளை நான் முதன் முதற் படித்த காலத்தே, இத் தாயரை—'நற்றாய்' எனக் கூறுவதின் கருத்து இதுவே போலும் எனப் பெரு வியப்புற்றேன். அச் செய்யுளின் பொருளை இக் காலத்து நிகழும் படக்காட்சி முறையிற் காண்போம்.

"ஒரு தாயினிடம், ஊர்ப் பெண்டிர்கள், பலகாலம் நாளும் நாளும் ஓய்வு ஒழிவின்றி வந்து, நின்மகள் இன்ன தலைவனைக் காதலிக்கின்றாள், இன்ன இன்னவா றெல்லாம்

ஒழுகுகின்றாள், என அலட்டுகின்றனர். அத் தாய, அந நிகழ்ச்சிபற்றி உளம் மகிழ்வதோ, நெகிழ்வதோ, என்செய லன்றே, இவர்கட் கென்னையோ கேடு என எண்ணி அவர் களை உள்ளத்தே வெறுக்கின்றாள், இவ்வூர் அலர்களைத் தன் மகட்குக் கூறின், உள்ளம் நாணி வருந்துவளென எண்ணி மறைத்துவருகின்றாள்.—(விரைவில் அம்மகட்கு அவள் காதலனோடு மணம் நிகழ்விப்பதில் ஊக்கம்கொண்டு ஆவன செய்து வருகின்றாள்.) இஃது அவள் மகளுக்குத் தெரிவதில்லை. தன் களந்துறை யொழுக்கம் அன்னைக்குச் சிறிதும் தெரியாதெனவும், தெரியின் இங்குச் சிறிதும் தங்க இயலாதெனவும், ஒரோவழித் தன் காதலன் கூட்டு றவு கிட்டாதொழியினும் ஒழியும் எனவும் எண்ணி மயங் கிக் காதலனோடு அவள் இல்லிற் கேகி அங்கு மணம் செய்துகொளத் துணிந்து, தாயறியாதொழிய இரவில் அவனோடு வெளிப்பட்டுச் செல்கின்றாள். இதனை அறிந்த தாய், இரங்கிக் கவன்று, "அந்தோ! என் உள்ளம் அறிந் திலளே; அவள் கருதியது பிழையெனலை அவள் உணரச் செய்வேன்" என்று, அவர்கள் செல்லும் நெறியில் உள்ள ஒரு சிற்றூர்க்கு வேறு வழியிற் சென்று, அவர்களறியாத மாற்றுருக்கொண்டு, அவர்கட்கு வேண்டும் உதவிகள் செய்தனுப்ப எண்ணுகின்றாள்." (எண்ணி அவ்வாறே செய்யவும் செய்தாள். பின்னர், தனக்கு அங்ஙனம் உதவி செய்தனுப்பினாள் தன் நற்றாயே என உணர்ந்து, தலைவி களிபெரும் மகிழ்ச்சிக் கடலுள் ஆழ்கின்றாள்) என்று இங் ஙனம் ஒரு படக் காட்சியினைக் காண்போர், அதிற் காணும் நற்றாயின் பெருந்தகை யுள்ளத்தினை எத்துணைப் பாராட் டுவர்! இக் காட்சியினை,

"உவக்குந ளாயினும் உடலுந ளாயினும்
யாயறிந் துணர வென்னார் தீவாய்

அலர்வினை மேவல் அம்பற் பெண்டிர்
இன்னள் இனையளின் மகளெனப் பன்னாள்
எனக்குவந் துரைப்பவுந் தனக்குரைப் பறியேன்
நாணுவள் இவளென நனிகரந் துறையும்
யானிவ் வறுமனை யொழியத் தானே
அன்னை யறியி னிவணுறை வாழ்க்கை
எனக்கெளி தாகல் இல்லெனக் கழற்கால்
மின்னொளிர் நெடுவேல் இளையோன் முன்னுறப்
பன்மலை யருஞ்சுரம் போகிய தனக்கியான்
அன்னேன் அன்மை நன்வா யாக
மானதர் மயங்கிய மலைமுதற் சிறுநெறி
வெய்திடை யுறாஅ தெய்தி முன்னர்ப்
புல்லென் மாமலைப் புலம்புகொள் சீறூர்ச்
செல்விருந் தாற்றித் துசசி விருந்த
நனைகுழைத் தலமரு நொச்சி
மனைகெழு பெண்டியா னாகுக மன்னே" (அகம், உ௫௩)

என்னும் செய்யுள் நமக்குக் காட்டுகின்ற தன்றோ!

பெற்று வளர்த்த தம்மைப் பிரிவால் வருந்தவிட்டொழியும் தலைவியரை, அச் செயலால் வெறுத்தொழியாது, அவர் செல்லும் வழி யருமையினை எண்ணி எண்ணி வருந்துவதும் அவர் தம் மணச்சிறப்புத் தம் இல்லில் நிகழக் காணப் பெரிதும் அவாவுவதும், அங்ஙனம் நிகழப் பெரு முயற்சிகள் செய்வதுமே நற்றாயின் செயலாகும்.

இத்தகைய நற்றாயின் சிறப்புக்களை நம் அகநானூற்றில் இடந்தொறும் கண்டு மகிழலாம்.

## ௬. தோழியர்

அகப்பொருளுட் காணும் உறுப்பினருள் மிக்க பொறுப்பினை வாய்ந்தவள் தோழியே யாவள்; தலைவன், தலைவி, நற்றாய், செவிலி, பரத்தை, பாணன் என்று இன்

ஞோர்க்கெல்லாம், அவரவர்கட்கு அமைவன அறிவுறீஇ வாழ்க்கையைச் செப்பஞ் செய்யும் திறத்தினள்; தலைவனைக் கண்டவுடன் மயங்கிவிடும் தலைவி போலாது பன்னாளும் அவன் குணங்களை ஆய்ந்து தேர்ந்து முடிவில் தலைவியிடம் கூட்டுவிப்பவள்; தலைவனுடைய பிரிவுகளின் பொருத்தங்களை ஆய்ந்து ஒப்பித் தலைவியும் ஒப்புமாறு வற்புறுத்துபவள்; பிரிந்து வருந்தும் தலைவியைப் பல்லாற்றானும் தேற்றுபவள்; ஒரோவழித் தலைவன்பாற் குறைகள் காணின், கழறியுரைத்துத் திருத்துபவள்; நற்றாய் செவிலித் தாயர்க்குத், தலைவன் தலைவியர் கூட்டுறவுகளைத் திறம்பெற வுரைத்து உடன்பாடு பெறுபவள்; களவு, கற்பு என்னும் இரு கைகோள்களினும் இத்தோழி தொடர்பு இல்லாத இடனில்லை என்றுகூறத் தக்க முதன்மை வாய்ந்தவள்.

இத் தோழியின் திறனெலாம் இவ் அகநானூற்றில் யாங்கணும் பரவி மிளிரும்.

தலைவன் தலைவியரிடத்துப் பொதுவாக ஒரு காதல் தோன்றி வளர்ந்து வருதலை நுண்ணிதின் உணர்ந்த தோழி, அத் தலைவனை ஆய்ந்து அவன் குணச் சிறப்புக்களை உணர்ந்து கொள்கின்றாள். தலைவன் தோற்றத்தால் ஒரு புரவலன் போன்றவன்; எனினும் செருக்குடையன் அல்லன்; யாவரிடத்தும் யாசகர்களைப் போலப் பணிந்த மொழியுடன் பழகும் பெருந்தகையாளன் என்பதை,

> "புரவலன் போலும் தோற்றம் உறழ்கொள
> இரவன் மாக்களிற் பணிமொழி பயிற்றி"

எனத் தலைவன் சிறினைத் தலைவிக்கு உரைக்கின்றாள்.

இங்ஙனமெல்லாம் தலைவன் சிறினை எடுத்துத் தோழி கூறத் தனக்கு உள்ளுள்ளே பெருமகிழ்ச்சி ஓங்கவும் புறத்தே அத் தோழி கூற்றிற் கருத்தில்லாள்போலப்

பொய்த் தோற்றம் காட்டிக்கொள்ளும் தலைவிக்கு, தலைவன் பொருட்டு நட்புரிமையால் தானே அரிது முயன்று முடித்த ஒரு செயல் பயனற்றது பற்றி வருந்துவாள் போலத் தானும் ஒரு பொய்த் தோற்றம் காட்டி யுரைக்கும் உரையால், அத் தலைவியைத் திடுக்கிடச் செய்து இணக்கும் திறனை,

"நாணும் நட்பும் இல்லோர்த் தேரின்
யானல தில்லையிவ் வுலகத் தானே"

என்னும் இவ் வடிகளாற் கண்டு வியக்கின்றோம். இது எத்துணை நயமான கூற்றாகும்?

ஒரு தலைவன் தன் வேண்டுகோளின்படி உடன் வரைந்து கொள்ளாது நீட்டித்து வருங்கால், அவன் சிறைப்புறமாய மறைவிடத் திருக்க, அவன் கேட்டு நாணி உடன் வரைந்து கொள்ளுமாறு மழையை நோக்கிக் கூறும் நெறியில் கூறிய தோழியின் கூற்றொன்றினைப் பின்னர்க் காண்க.

"பெருங்கடன் முகந்த இருங்கிளைக் கொண்மூ!
... ... ... ... ...
போர்ப்புறு முரசி னிரங்கி ... ...
மின்னுடைக் கருவிய ஆகி நாளும் ...
கொன்னே செய்தியோ அரவம்
குறமகள் காக்கும் ஏனற்
புறமும் தருதியோ வாழிய மழையே" (அகம் : கஅஅ)

என்று மேகத்தை நோக்கிக் கூறினள் போன்று, தலைவன் பெருங்குடிச் செல்வனாயிருந்தும், தலைவியை வரைந்து கொள்ளப்போதலை ஊரார்க்குப் பலவழியாகப் புலப்படுத்தி விட்டும், வாளாது காலந் தாழ்த்து வருதலை அத் தலைவற்குச் சுட்டிக் காட்டி, இனியாதல் விரைவில் வரைந்து கொண்டு அரிதின் ஓம்பிவரும் உங்கள் காதல் வாழ்க்கை உருப்பெறப் பயன் எய்துவிப்பாயா? அன்றி இவ் வாழ்க்கை

முற்றுப்பெறாது ஒழிந்துபோகக் கைவிட்டு விடுவாயா? என்று கேட்டுத் திடுக்கிடச் செய்வதனை அத் தலைவன் நன்குணர்ந்து கொண்டு, துயிலுணர்ந்து, தன் கடமைகளை உடன் செய்து முடிக்கத் தூண்டிய திறலினை இச் செய்யுள் எடுத்துக் காட்டுகின்றதன்றோ! இது, எத்துணை நுட்பமான கூற்றாகும்!

இனி அறிவும் ஒழுக்கமும் நிரம்பப் பெற்றானாகிய ஒரு தலைவன் மயங்கியவழி, அவனைத் தெருட்டும் தோழியின் கூற்றாகிய

“.............................. தண்டுறை யூர
விழையா வுள்ளம் விழையு மாயினும்
என்றுங், கேட்டவை தோட்டி யாக மீட்டாங்
கறனும் பொருளும் வழாமை நாடித்
தற்றக வுடைமை நோக்கி மற்றதன்
பின்னா கும்மே முன்னியது முடித்தல்
அனைய பெரியோ ரொழுக்கம் அதனால்
அரிய பெரியோர்த் தெரியுங் காலை
நும்மோ ரன்னோர் மாட்டு மின்ன
பொய்யொடு மிடைந்தவை தோன்றின்
மெய்யாண் டுளதோவில் வுலகத் தானே”
(அகம் : உஅசு)

என்ற செய்யுளை நோக்கின், சிறந்த உள்ளமும் ஒரோவழி மயங்கலும் மயங்கின் மீட்கும் நெறியும், அறம், பொருட் சிறப்புக்கள் அழிய வரும் இன்பத்தின் இழிவும், வாய்மையின் சிறப்பும் ஆகிய இன்னவற்றை எடுத்துக் காட்டித் தலைவன் கருத்தினை மீட்கும் தோழியின் திறன் எத்துணைச் சிறப்பாக விளங்குகின்றது!

இச் செய்யுளின் முற்பகுதியில்,

இளம் பெண்கள், கரும்பாகிய உலக்கையால் வெண் மணலை நெல்லாகக் கொண்டு குற்றுவதும், அவர் பாடல்

கேட்டு, வரால் மீனை யருந்திய சிறு சிரல் மருத மரத்தின் கிளைகளிற் றுயில்வதும் ஆய தலைவன் நாட்டு வளம் கூறப் பெறுகின்றது. அது வருமாறு:

"வெள்ளி விழுத்தொடி மென்கருப் புலக்கை
வள்ளி நுண்ணிடை வயின்வயின் நுடங்க
மீன்சினை யன்ன வெண்மணற் குவைஇக்
காஞ்சி நீழல் தமர்வளம் பாடி
ஊர்க்குறு மகளிர் குறுவழி, விறந்த
இருஅல் அருந்திய சிறுசிரல் மருதின்
தாழ்சினை யுறங்கும் தண்டுறை யூர!"

(அகம் : ௨௮௬)

இதனுள் ஊர்ச் சிறுமியர் தமரைப் பாடி விளையாடும் விளையாட்டில் எழும் இன்னொலியைத் தனக்குக் கூறும் தாலாட்டாகக் கொண்டு, (தன் வயிற்றை நிரப்பிக் கொண்ட) சிரல், தன்னை எதிர்நோக்கிப் பசித்து வருந்தும் தன் பேட்டினை நினையவுஞ் செய்யாது, சிறார்களும் அலைக்கும் தாழ் சினையில் உறங்குதல், தலைவன், பாணன் முதலோர் தத்தம் நலங் கருதித் தலைவனைப் புகழும் நெறியில் ஈடுபட்டு உணவின் இன்பெனச் சிறிது பொழுதே இன்புறுத்திக் கழிவதன்றி, அறம் பயத்தலில்லாத பரத்தையரின் இடையூறுகள் மிக்க இன்ப ஒழுக்கத்திற் றுஞ்சித் தலைவியை மறந்தொழுகும் நெறியினை அத் தலைவற்குப் புலப்படுத்தும் உள்ளுறை யுவமத்திறன் தெள்ளிதின் உணரக் கிடத்தல் காண்க. இங்ஙனமே உள்ளுறை உவமம் என விதந்து கூறப்பெறும் இடங்களி லெல்லாம் இத்தோழியின் திறன் ஆங்காங்கு மிளிர்தல் காணலாகும். இத் தோழி தலைவிக்கும் பிறர்க்கும் உயிரினும் சிறந்த நட்பினள் எனலைத் தோழமை மிக்க எவர்க்கும் எய்தாத 'தோழி' என்ற சிறப்புப் பெயரே காட்டுவதாகும்.

## ௫. பரத்தையர்

இவ் அகப்பொருள்களிற் கூறப்பெறும் பரத்தையர் என்பாரைப் பற்றி ஒரு சிறிதளவேனும் ஈண்டுக் கூறு தொழிதல் நடுநிலையின்பாற் படுவ தன்றாகும். பண்டைக் காலத்தே, இங்ஙனம் ஒரு வகையார் உளராய உண்மையினை, மறைக்காது எடுத்துக் காட்டிய ஒரு சிறப்பினானே, நாம், நம் பண்டை நூல்களிடத்தே, அவை கூறும் ஏனைத் தலைவன் முதலோர் பெருமைகளும் உள்ளதை உள்ள படியே கூறும் உண்மைக் கூற்றுக்களாகத் தெளிந்து, ஒரு தனி மதிப்புக் கொள்கின்றோம். உரையாசிரியர்கள் தாமும், இப் பரத்தையர், இவ்விக் காரணங்களாற் படைத்து மொழியப் பெற்றவர்; உண்மையில் இல்லா தவர் என்று எளிதிற் கூறி ஒதுக்கிவிடாமல், இவர்களை யும், இவர்களோடு ஒரோவழிக் கூட்டுறவு கொள்ளும் தலைவர்களையும், இயன்றவா றெல்லாம் போற்றி எழுதிச் செல்வா ராதலும் காண்க. நெருப்போ ரன்ன நீதி நூல் உடையோர், இத்தகையோரை இறப்பவும் வெறுத்துக் கூறுதல் சாலுவதே யாகும். ஆயினும், நம் இலக்கண இலக்கிய நூலோரும், அவற்றின் உரையாளரும், இவர்பால் இரக்கமுடையராகி, இவர்கள் படிப்படியாக உயரும் நிலைகளை அமைத்துக் காட்டுகின்றனர். பரத்தையர் எனப் பொதுவாக நிற்றலினும், காதற் பரத்தையர் ஆவதற்கும், அதன்மேல், காமக் கிழத்தியராக, இற் கிழத்தியராக வரைந்து கொள்ளும் நிலை மேவற்கும், இடம் அமைத்துச் செல்லு கின்றனர். பரத்தையர் என்பார் பலர்க்கும் உரியர் எனும் நிலையிற் கூறப் பெறினும்,[1] அங்ஙனம் நின்ற வழி

1. 'பரத்தையராவார் யாவரெனின், ஆடலும் பாடலும் வல்லராகி, அழகும் இளமையும் காட்டி, இன்பமும் பொருளும் வெஃகி ஒருவர் மாட்டும் தங்காதார்.' (இளம்)

ஒரு காலத்தே ஒரு பரத்தையை நாடும் ஆடவர் தமக்குள் மேவ வல்ல பகைமை, கொடுமைகளைக் குறிக்கும் கூற்றுக்கள், அகத்தினன்றிப் புறத்தினும் காண்டற்கில்லை. இப் பரத்தையர் கூட்டுறவினால், தலைவன் தலைவியர் மாட்டு ஊடல் நிகழ்வதே நூல்களுட் காணப் பெறுதலின், அகப் பொருளிற் காணும் பரத்தையர் எல்லாம், காதற் பரத்தையர் முதலியோராகி, ஒவ்வோர் தலைவனையே பற்றி நின்றவர் என்று கொள்ளலாம். இளம்பூரணர், "காதற்பரத்தையர் கூட்டம் ஒத்த காம மாகியவாறு என்னை எனின் அவரும், பொருளானாதல், அச்சத்தானாதல் அன்றி, அன்பினாற் கூடுதலின், அதுவும் கந்தருவப் பாற்படும். அவ்வாறின்றி, அவரைப் பிறிது நெறியாற் கூடுமாயின், இவன் (தலைவன்) மாட்டுத் தலைமையின்றா மென்பது உணர்ந்து கொள்க" என்று காதற் பரத்தையரின் சிறப்பினைக் கூறுகின்றார்.

இக் காதற் பரத்தையர், தலைவியோடு எத்தகைய பகையும் கொள்ளாது, இயலும் இடங்களில் அவர்களோடு நெருங்கிப் பழகவும் முயல்வர். நம் அகநானூற்றின் செய்யுள் ஒன்றில், ஒரு காதற் பரத்தை தலைவியை அணுகி,

"மையீர் ஓதி மடவோய் யானுநின்
சேரி யேனே அயலி லாட்டியேன்
நுங்கை யாகுவென் நினக்கெனத் தன்கைத்
தொடிமாண் மெல்விரல் கண்ணெனத் தைவர
நுதலும் கூந்தலும் நீவி" (அகம் : ௩௮௬)

சென்ற செய்தி காணப் பெறுகின்றது. இன்னோர்தாம் ஆண்டின் முதியராயின், தலைவன் தலைவிக்குள் நிகழும் பிணக்குகளைத் தீர்த்து வைக்கவும் முன்வந்து, தலைவிக்கு நன்மதி கூறி, அவளைத் தலைமகனோடு கூட்டி வைத்து மகிழ்வதும் உண்டு. இதனை,

"காதற் சோர்விற் கடப்பாட் டாண்மையிற்
றாய்போற் கழறித் தழீஇய மனைவியைக்
காய்வின் றவன்வயிற் பொருத்தற் கண்ணும்"

என்னும் கற்பியற் சூத்திரப் பகுதியான் உணரலாம். இங்குக் "காதற் சோர்வின்" என்பது தானுங் காதற் பரத்தை இளையளாங் காலத்துத் தலைவியை நெருங்கி அறிவுரை கூறலும், இயலுவதன்மையின், அவளது பருவ முதிர்ச்சியைக் காட்டவந்ததேயாகும்; அன்றித் தானும் இளையளாயிற் கூட்டவிரும்பாள், இப் பிரிவினை உவப்பி னின்றி—எனும் பொருளினைத் தோற்றுவிக்க வந்ததன்று. இக் காதற் பரத்தையரது பொருட் பற்றில்லா உள்ளப் பெருமையினை, ஒரு தலைவி, தன்மீது இல்லாத பழியினை ஏற்றுங்கால், இனியாவது அத் தலைவி கூறுவது உண்மை யாக, அத் தலைவனைப் பற்றுவன் எனக் கூறுவாள் ஒருத்தி, அங்ஙனம் பற்றேனாயின்,

"இரந்தோர்க் கீயாது ஈட்டியோன் பொருள்போற்
பரந்து வெளிப்படா தாகி
வருந்துக தில்லயாய் ஓம்பிய நலனே."

என்று கூறுவதனாலே அறியலாம். இப் பரத்தையர்கள் தலைவனின் மக்களைக் காணுங்கால், எடுத்துத் தழுவியும், அணிகள் அணிந்து விடுப்பதும், அவர்களைக் காணுங்கால் தலைவியரே பேணி உரைப்பதும், சங்க இலக்கியங்களிற் பரக்கக் காணலாகும்.

சிலப்பதிகாரத்து மணிகளுள் ஒன்றாகிய மாதவியின் குணங்களையும், அவற்றின் சிறப்பினையும், அவள் கண்ணகி யின்பாற் கொண்டிருந்த நன் மதிப்புக்களையும், நாம் அறிந் துள்ளோம். இவற்றால், வரலாற்று நூல்களிற் பெயர்களோடு வரும் காதற் பரத்தைமாரிடத்தும், அகச் செய்யுட்களிற் சுட்டி ஒருவர் பெயர் கூறப்பெறாது வரும் காதற் பரத்தை

மாரிடத்தும் உயர்ந்த குணங்களே காணப் பெறுதலை நாம் உணரலாகும்.

சுருங்கக் கூறின், இப் பரத்தையர் கூட்டுறவு, மதிக் கண் மறுப்போல் கருதப்படுவ தொன்றேனும், அம் மறு, மதியினை அகலாது, ஆக்கத்திற் பெருகி, அழிவிற் சுருங்கி, அம் மதிக்கும், அதன் ஒளிக்கும், அவற்றாலாகும் உலக நன்மைக்கும், எத்தகைய இடையூறும் எய்துவிக்காது அம் மதியினைச் சார்ந்திருத்தலின் அம் மதியோடு பலராலும் போற்றப்படுமாறு, தலைவன் நலமே, தன்னலமாகக் கொண்டு, தலைவற்கும், தலைவிக்கும், அவர்தம் வாழ்க்கை அறங்கட்கும் இடையூறு விளைக்காதிருத்தலின், அகநூலார் இதனையும் போற்றிக் கூறுவாராயினர் என்பது உணரலாகும்.

## ரு. தலைமகன்

தலைமகன் என்பான் கல்வி யறிவு ஒழுக்கங்களாற் சிறந்தவன்; வழி வழியே வரும் பெருஞ் செல்வத்தினன். இவன் நட்பு, வளர்பிறையென முற்பகற் சிறிதாய் நாடொறும் பிற்பெரிதாகிக்கும் பண்பினது. தலைவியொடு இவனுக்குற்ற தொடர்பு, பிறவிதொறும் தொடர்ந்து வருவது. பிரிவின் றியைந்த துவரா நட்பின் இருதலைப் புள்ளின் ஓருயிர் போல, இவனும் இவன் தலைவியும், நெஞ்சமும் உயிரும் ஒன்றெனக் கொண்டவர். அகநானூற்றில் இவ் விருவரும் ஒருங்கிருந்த தலைக் காட்டும் படம் ஒன்றுளது. அது,

> "உயிர்கலந் தொன்றிய தொன்றுபடு நட்பிற்
> செயிர்தீர் நெஞ்சமொடு செறிந்தோர்."

என்பதாகும். இப் படத்தினொடு ஒப்பு நோக்குங்கால், உலகத்து ஒளிப்படங்கள், இதிற் காணுமாறு, உயிரும் நெஞ்சமும் ஒன்றிப் பிறவிதொறும் தொடர்ந்து வரும் நட்

பினைக் காட்ட மாட்டாமையான், ஒளியிழந்து நிற்றலைக் காணலாகும்.

மகன் என்னும் சொல், வாளாதே ஆண் பிள்ளை எனலைக் குறிக்கும் சொல்லன்று; ஓர் ஆணிற்கு, நல்லூழின் பெருக்கால் எய்தலாகும் எல்லா உயர்வுகளும் ஒருங்கு மேவிய பெருந்தகையோர்க்கே வைத்து வழங்கும் ஒரு சிறப்பு வாய்ந்த சொல்லாகும். ஒரு பெருந்தகைச் செல்வனைக் கண்டு, வியந்து, காதலித்த ஒரு தலைவி ஒப்புயர்வற்ற அவன் பெருமையினைத் தன் தோழிக்குக் கூறுவாள். 'மகனே தோழி' (௬௮) என்றனள். இங்ஙனமே இப் பெருமைகளை இழந்து நிற்பான் என ஒருவனைச் சுட்டுவதற்கு மகனலன் என்பதே போதியதாகும். இத்தகைய சிறப்புடையதோர் பெயர்க்குத் தலை என்பதும் கூட்டிக் கூறப்பெறுமாயின் இத் தலைமகன் என்னும் பெயரால் கூறப்பெறும் தலைவர்களின் பெருமைகளை என்னென்பது! 'பெருமையும் உரனும் ஆடூஉமேன' என்று தொல்காப்பியத்திற் புகழப் பெறுமாறே இவர்கள் தத்தம் தலைவியரை நல்லூழ் கூட்டப் பெற்ற பெருவாழ்வாகப் போற்றி வருவர். இன்பமேவிய வழி உவத்தலும் அவ் வின்பம் இடையூறுற்ற வழி நெஞ்சழிந்து காய்தலுமுடைய குணத்தான் எளியோர் போலாது எஞ்ஞான்றும் ஒரே பெற்றியினராகிய உள்ளப் பெருமையுடையார். இவர்கள் மணம் நிகழாத களவொழுக்கத்தே, தலைவியரைக் கண்டு மகிழ, மழை பொழியும் நள்ளிரவில், ஏற்றிழிவுகளும் இடுக்கு நெறிகளும் உடைய அரிய நெறிகளில், ஆங்குள்ள அரவு யானை புலி சிங்கம் யாளி முதலை என்றின்னவற்றிற்கு அஞ்சாது சென்றும் அத் தலைவியரைக் காணப்பெறாது ஒழிந்த காலத்தும் அவர்களைச் சிறிதும் வெறாது அவர்தம் அருமைகளை நினையாது அவர்கட்கும் தமக்கும் வருத்தம் விளைவிக்க எண்ணிய அக் கள

தன்னில்லிற்கு மீள்கின்றான். தேர் ஏறினன். பாகன், மிகு திறம் வாய்ந்தவன், விரைந்து செலுத்த ஒல்லையில் இல்லம் எய்தினன். பாகன் திறத்தினை மனமாரப் போற்றினான்; வாழ்த்தினன். இவ்வளவில் சிறப்பொன்று மின்டியு. இனிச் செய்வதே கழிபெருஞ் சிறப்பினது. அப்பாகனைத் தன் மார்பகத்து அணைத்துத் தழீஇப் பின் உடன் கொண்டு மனைக்குள் ஏகினன். இதுவே தலைவன் சிறப்பு. இனி வருவது தலைவி சிறப்பு. தலைவியோ, தன் ஆருயிரோடு வேறு ஒரு நல்விருந்தினையும் பெற்றனள்.

"இருந்த வேந்தன் அருந்தொழில் முடித்தெனப்
புரிந்த காதலொடு பெருந்தேர் யானும்
ஏறிய தறிந்தன் றல்லது, வந்தவாறு
நனியறிந் தன்றோ இலனே! தாஅய்
முயற்பறழ் உகளு முல்லையம் புறவிற்
கவைக்கதிர் வரகின் சீறூர் ஆங்கண்
மெல்லியல் அரிவை இல்வயின் நிறீஇ,
இழிமின் என்றநின் மொழிமருண் டிசினே!
வான்வழங் கியற்கை வளிபூட் டினையோ!
மானுரு வாகநின் மனம்பூட் டினையோ!
உரைமதி வாழியோ வலவ எனத்தன்
வரைமருள் மார்பின் அளிப்பனன் முயங்கி,
மனைக்கொண்டு புக்கனன் நெடுந்தகை,
விருந்தேர் பெற்றனள் திருந்திழை யோளே." (அகம்: ௩௮௪)

என்னும் இச் செய்யுளிற் காணும் தலைவன் பெருமையினைக் காண்மின்! (இச் செய்யுளின் இழுமென்னும் விழுமிய நடைப்பெருமையினைக் காண்மின்) இங்ஙன மெல்லாம், இலக்கண இலக்கியங்களிற் போற்றிக் கூறப்பெறும் உள்ளப் பெருமையினையும் அறிவின் சிறப்பினையும் அவனொடு பன்னாள் ஒழுகிய தலைவியின் கூற்றினால் அறிந்து இதனை ஒருவாறு முடிப்பாம். தலைவனொடு தலைவியினைக்

கூட்டிய தோழி, பல காலத்தின் பின், அத் தலைவியைக் கண்டு நலம் கேட்க, அவள் உள்ளமும் உரையும் ஒன்றுபட்டுக் கூறியது:—

"குன்ற நாடன்
"குடிநன்கு உடையன் கூடுநர்ப் பிரியலன்
கெடுநா மொழியலன் அன்பினன்' என நீ
வல்ல கூறி வாய்வதிற் புணர்த்தோய்!
நல்லை காணிற் காதலந் தோழீஇ!
கடும்பரிப் புரவி நெடுந்தேர் அஞ்சி
நல்லிசை நிறுத்த நயவரு பனுவல்
தொல்லிசை நிறீஇய உரைசால் பாண்மகன்
எண்ணுமுறை நிறுத்த பண்ணி னுள்ளும்
புதுவது புனைந்த திறத்தினும்
வதுவை நாளினும் இனியனால் எமக்கே." (அகம்: ௩௫௨)

என்னும் இச் செய்யுளுள், தலைவனைப் பாணன் புகழ்ந்த புகழ்ச்சியுரைகளுட் கேட்கப்பெற்ற சிறப்பினும், முதன் முதல் நிகழ்ந்த வதுவை நாளிற் றலைவன்பாற்—கண்ட சிறப்பினும் இற்றை ஞான்று இனியனாகின்றான் என்று தலைவி பாராட்டுதல் காண்க. அன்றியும் இப் பாட்டின் முற்பகுதியில், இத் தலைவன் நாட்டிலுள்ள விலங்குகளும் தத்தம் துணைகளிடத்தே நீங்கா அன்பினவாய் அவற்றைப் பேணும் பெருமையினையுடைய என்று அவன் நாட்டினைப் புகழ்வதும் காண்க. அது,

"முடவுமுதிர் பலவின் குடமருள் பெரும்பழம்
பல்கிளைத் தலைவன் கல்லாக் கடுவன்,
பாடிமிழ் அருவிப் பாறை மருங்கின்
ஆடுமயில் முன்னது ஆகக் கோடியர்
விழவுகொள் மூதூர் விறலி பின்னறை
முழவன் போல அகப்படத் தழீஇ
இன்துணைப் பயிரும் குன்ற நாடன்" (அகம்: ௩௫௨)

என்பதாகும்.

இதன்கண் மயிலுங், குரங்கும், விறலியும், முழவும் போல, பகையின்றி நட்புடன் முன்னும் பின்னும் நிற்றலும், முழவுபோலக் கொண்டுள பெரும் பழத்தின் ஒரு பகுதியையேனும் தான் துணையின்றித் தானே தின்னா நினையாமையும், ஆய இறைச்சிப் பொருளால், தலைவன் நாட்டிலுமுள்ள விலங்கு முதலியவற்றின் அன்பின் பெருக்கமும் அத் தலைவி கூறி மகிழ்தல் காண்க. இனித் தலைவியின் பெருமைகளைக் காண்பாம்.

## ௭. தலைவி

தலைவியரின் மாண்புகள் இவையெனப் பலவிடத்தும் பரக்கக் கூறும் தொல்காப்பியர் ஓரிடத்து,

"கற்பும் காமமும், நற்பா லொழுக்கமும்
மெல்லியற் பொறையும் நிறையும் வல்லிதின்
விருந்துபுறந் தருதலும் சுற்றம் ஓம்பலும்"

என்றிவ்வாறு தொடுத்துக் கூறியும் அமையாது கண்டு பிறவும் அன்ன என்று கூறிச் செல்கின்றார். இவற்றுட் கற்பென்பது தலைவன் தலைவி இருவர்க்கும் உரியதொன்றாயினும், அதனை உயிரினும் சிறந்ததாகக் கொண்டொழுகுபவள் தலைவியே இத் தலைவியின் கற்புத்தானும் தன்னையுடைய தலைவிக்கு அறம், பொருள், இன்பம், வீடும் ஆகி, இம்மையிற் பயனுறுப்பது. அத் தலைவியரைப் போற்றி வாழ்வார்க்கு, அஃது ஆக்கம் தரும் பேறு ஆதலோடு அமையாது, ஒரோவழி அவர்க்குத் தீங்கிழைக்க நினைவார்க்கு அஃதே கேடுதரும் மறப்படையாகவும் அமைவது. நமது அகநானூறு இக் கற்பினைக் கடவுட் கற்பு எனச் சிறப்பிக்கும். கண்ணகி முதலோர் வரலாற்றால் நம் பெண்மக்களது கற்பின் பெருமையை அறிகின்றோம். இக் கடவுட்

கற்பு, கடவுளரையும் அஞ்சுவித்திருத்தலையும் அறிவோம். தங்கள் நாயகரிற் றெய்வம் தமக் கில்லை என்றபடி பெண் மக்களாங் கடவுளரினும் மிக்காராகக் கொள்ளும் நாயகர்தாமும், ஒரோவழி, அறநிலையிற் றிறம்பி, இன்னோர்க்கு இடையூறு செயப் புகுவராயின், அவர் தம்மையும் இக் கற்பு அஞ்சுவித்து நன்னெறியிற் புகுத்தும் திறலினதாயின், இதன் பெருமையினை என்னென்பது. உலக மக்களுட் சில பேதையர், தாம் களவு நெறியிற்கூடிய பெண்டிரைத் தமது பேதைமை காரணமாகத் தாம் அறிந்திலேம் எனக் கூறிப் பிரிந்திட முயல்வதும், மிகமிகச் சிற்றளவில் உண்டு. இங்ஙனம் யாரோ ஒருவர் இருவர்பாற் பொய்யும் வழுவும் தோன்றிய பின்னரே, பலரறிய வரைந்து கொள்ளும் கரணங்கள் வகுக்கப் பெற்றன. இங்ஙனம் வழுவினான் ஒருவன் செயல், நம் அகநானூற்றிற் காணப் பெறுகின்றது. இது சார்த்துவகையால் வந்த புறச் செய்தியிற் குறிக்கப்பெறும் ஒருவன் இழிசெயலாகலின், அகத்திற், சுட்டி யொருவர் பெயர் கூறுமுறையிற் காணும் தலைவர் பெருமைக்கு இழுக்கம் தருவதொன்றன்று என்பது கண்டு அறியத்தக்கதொன்று. கள்ளூர் எனும் ஊரில் ஒருவன் ஒரு பெண் மகளைக் களவிற்கூடி இப்பால் அறியேன் என்றான். இச்செய்தி அறங்கூறும் அவையத்தார் முன் கொணரப் பெற்றது. அவர்கள் முன்னும், அப் பேதை அறியேன் என்று கூறிப் பொய்ச் சூளும் செய்தனன். அதன்பின், அவையத்தார், இச் செய்திக்கு 'அறிகரி' கேட்டனர்.

"தேரான் புக்கு உண்ட ஞான்றைக்
கேளாம் பொய்யோ கடலறி கரியே" (கஉ0)

என்றதற்கேற்ப இவன் அப் பெண்ணைக் கண்டு மகிழ்ந்த இடம், ஒரு மரம் எனக் கேட்டுணர்ந்து, அங்குச் சென்ற

அவையத்தார், அவளை அம் மரக்கிளையினைப் பற்றிக் கொண்டு, நான் அறியேனெனச் சூளுறச் செய்தனர், பாலைக் கலியில், பொய்க்கரி கூறினோன், தன்னடிக்கண் ணிருக்கப்பெற்ற மரமும் கவின்வாடி நெருப்புப்பற்றி யெரி யும் எனுங் கருத்தில்,

"கரிபொய்த்தான் கீழிருந்த மரம்போலக் கவின்வாடி
யெரிபொத்தி..........................."

என்று கூறுமாறு, இங்ஙனம் பொய்ச்சூள் செய்தான் தீண்டிய கிளையும், தீப்பட்டுச் சாம்பராயிற்று. அது கண்டு அவையத்தார் ஆரவாரஞ் செய்து, உண்மையை நிலைநாட்டி அவர் தம்மைக் கூட்டி வைத்தனர்—எனும் குறிப்பு அச் செய்யுளுட் காணப்பெறுகின்றது.

"திருநுதற் குறுமகள் அணிநலம் வவ்விய
அறனி லாளன் அறியே னென்ற
திறனில் வெஞ்சூள் அறிகரி கடாஅய்
முறியார் பெருங்கிளை செறியப் பற்றி (பற்ற)
நீறுதலைப் பெய்த ஞான்றை
வீறுசா லவையத் தார்ப்பினும் பெரிதே"

என வருவது காண்க.* இங்குப் பிறிது பொருள் கூறுவது முண்டு. எங்ஙனமாயினும் அப் பெண்ணின் கற்பு, உண் மையைக் காட்டிய தெய்வத் தன்மை யுடையதாதல் காண்க.

இனி, மேற்கூறிய சூத்திரத்தே, கற்புடன் உடன் வைத்தெண்ணப் பெற்ற காமம் முதலாகச் சுற்றம் ஓம்பல் ஈறாகவுள்ள பிற சிறப்புக்களும் பிறவும், நம் அக நானூற்றே பல விடங்களிலும் பாராட்டப்பெற்றுள.

* இவளை நீற்றறையில் இட்டு விட்டதாகப் பொருள் சொல்வதும் உண்டு.

" அளியும் அன்பும் சாயலும் இயல்பும்"

எனவும்,

" அன்பும் மடனும் சாயலும் இயலும்
என்பு நெகிழ்க்கும் கிளவியும் பிறவும்"

எனவும்,

இந் நூலுட் பாராட்டப் பெற்ற இடங்களை யெல்லாம் எடுத்துக்காட்டின் விரியும். தலைவன் பிரிந்திருக்கும் காலங்களிலெல்லாம் மக்களைப் பேணல், சுற்றம் ஓம்பல் முதலாய கடமையினை யுடையளாகி, அவனையே நினைந் திருக்கும் சிறப்பு, கற்பு நிலையிற் காண்பது ஒரு புற மிருக்க, தந்தையர், தன்னையர், தாயர், இவர்களுடைய கட்டுப்பாட்டுக்கு அடங்கி ஒழுகும் களவு நெறியில், தலைவன் தரும் பல்வகைத் துன்பங்கட்கும் உரியளாகி, தன் துயர் சிறிதும் கருதாது தலைவன் துயரே கருதிக் கவலும் தலைவியின் பெருமை போற்றற் குரியதாகும். ஒரு தலைவி தன் தலைவன் விருப்பின்படி அவனைக் கண்டு மகிழ ஓர் இரவெல்லாம் முயல்வதும், ஒன்றன் பின் ஒன்றாய்ப் பல இடையூறுகளால் அவள் முயற்சி பயனாறு தொழிதலும், அங்ஙனம் வருந்திய அத் தலைவி அத் தலைவனைச் சிறிதும் வெறாது, அக் களவொழுக்கத்தையே வெறுத் தொழிதலும், 'இரும்பிழி மகாஅர்' என்று தொடங்கும் அகப்பாட்டாலும் 'பன்னாட் டின்னாற் றோழி நங்களவே' எனும் அதன் அடியாலும் உணரலாகும்.

தலைவன் இரவில் அரிய வழியில் வருங்கால் அவன் அடி வைக்குந்தொறும், அங்குள்ள தீங்குகள் அவன் அடியில் உறாமல், ஒரு மரவடி போலத் தன் நெஞ்சு தாங்கிவரச்செயும் ஆற்றல் தனக்குளதாயின் அங்ஙனமே செய்ய எண்ணும் அன்பினள் ஒரு தலைவி,

"..................நெஞ்சம்
கானக நாடன் வரூஉம் யானைக்
கயிற்றுப் புறத்தன்ன கன்மிசைச் சிறுநெறி
மாரி வானம் தலைஇ நீர்வார்பு
இட்டருங் கண்ண படுகுழி இயவின்
இருளிடை மிதிப்புழி நோக்கியவர்
தளரடி தாங்கிய சென்ற தின்றே"

என்று கூறுதலால் அவள் அன்பின் பெருக்கினை யறிய லாம். இங்ஙனமாகிய தலைவியின் சிறப்பியல்கள் மிகப் பல.

## ஆ. செவிலி

தலைவியை, பிறந்த நாள்தொட்டுச் சிறந்திட வளர்த்து வருவாளாய செவிலி, அத்தலைவியின் உடனலம் வளருந் தோறும் உரனலமும் வளருமாறு, நாளடைவில் அவட்கு நல்லவை யெல்லாம் கூறிச் சேர்த்து, அல்லவை எல்லாம் கூறி அகற்றித் தலைவி எனும் பெயர்க் குரியவளாகச் செய்வாள்.

"கழிவினும் நிகழ்வினும் எதிர்வினும் வழிகொள
நல்லவை யுரைத்தலும் அல்லவை கடிதலும்
செவிலிக் குரிய வாகு மென்ப"

என்பது தொல்காப்பியம். இத் தலைவியரை வளர்த்தல், பழியொடு படாத நிலையிற் காத்தல், நன்னெறியில் மேவும் காதற் கூட்டத்தை யேற்றல், அதனைத் தாயர்க்கு உரைத்துப் போற்றல், உடன் போக்கிற் றேடி யலைதல், வரைவிற்கு ஆவன செய்தல், வரைந்து வாழ்வுழி அவ்வப்போது சென்று கண்டு மகிழ்தல் எனும் இத்தகைய செயல்களெல்லாம் செவிலிக்கே யுள. இச் செவிலி, கையகலாது அகத்தும் புறத்தும் தலைவியைப் பேணி வந்தவளாகலின், தலைவியின் உடன் போக்குப் பிரிவின்கண் இவள் கூற்றுக்கள் மிக்க இரக்கங் கொண்டனவாகும். முன்னாள், நன்றணிமை கொண்ட கன்றினைக் கண்டு நெகிழும் கறவை

யெனத் தலைவியைக் கண்டு அஞ்சி நுதல் நீவித் தழீஇயி னள்; தலைவி பிற்றை ஞான்று பிரியவிருத்தலின் எஞ் ஞான்று மில்லாதவாறு பலகால் செவிலியை முயங்கினள். முயங்கிய கருத்தினை அதுகாலை செவிலி உணர்ந்திலள். அடுத்த நாள் உணர்ந்து வருந்துகின்றாள்.

"கொடுந்தொடைக் குழவியொடு வயின்மரத் தியாத்த
கடுங்கட் கறவையிற் சிறுபுற நோக்கிக்
குறுக வந்து குவவுநுத னீவி
மெல்லெனத் தழீஇயினே னாக, என்மகள்
.................................................
பலகால் முயங்கினள் மன்னே! அன்றோ!

காடுடன் கழிதலறியிற் றந்தை
அல்குபத மிகுந்த கடியுடை வியனகர்ச்
செல்வுழிச் செல்வுழி மெய்ந்நிழல் போலக்
கோதை யாயமொ டோரை தழீஇத்
தோடமை யரிச்சிலம் பொலிப்பஅவள்
ஆடுவழி யாடுவழி யகலேன் மன்னே!"

எனும் இச் செய்யுளான் அவளது தலையன்பும் இரக்கமும் புலனாகின்றன. இங்ஙனங் கூறு மிடனெலாம் தலைவியது
ும், அருஞ் சுரத்தின் கடுமையும்
உருகுவள்.

"வளங்கெழு திருநகர்ப் பந்துசிறி தெறியினும்
இளந்துணை யாயமொடு கழங்குட னாடினும்
உயங்கின் றன்னையென் மெய்யென் மறைஇ
மயங்குவியர் பொறித்த நுதலள் தண்ணென
முயங்கினள் வதியும்" (அகம் : கஎ)

என்று கூறி, அந்தோ, அது கழிந்ததே! இனி அத்தகைய நிகழ்ச்சியைக் காண்பது என்றுகொலோ! என்பாள், மன்னோ என்று இரங்குவள். சுருங்கக் கூறின், தலைவிபால் அன்பு வைத்துளார் எவரினும் செவிலி, அன்பிற் குறைந் திலள் என்று முடித்திடலாம்.

## ௬. பொருட்பிரிவு

இத் தலைவர்கள் முற்கூறியவாறு வழிவழியே வரும் பெருஞ் செல்வத்தினராயினும், தாம் தாம் ஈட்டிய பொருளானே விருந்தை செய்து கொள்வதும், தலைவியொடு அறஞ் செய்வதும் ஆய பெருஞ் சீரினைக் கொண்டவர்கள். ஒரு தலைவன் ஒரு தலைவியை மணப்பதற்குக் குறித்த காலத்தினுள் மிக்க பொருளினைத் தானே சென்று தேடி வரும் ஆற்றலான் என்பதை, அவன் செய்கையிற் செய்து காட்ட வல்லனாதல் வேண்டும். இதுவே வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிதல் என்பதாகும். முன்னோர் ஈட்டிய செல்வப் பெருக்கால், தாமே சென்று பொருளீட்ட முனையாரை, அவ்வாற் காதலிக்கப்பட்டோர்,

"பெற்றேம்யா மென்று பிறர்செய்த இல்லிருப்பாய்
கற்ற திலைமன்ற காண்"

என்றெல்லாம் கூறிப் பழித்துப் பொருளீட்டிவரத் தூண்டுவர். இங்ஙனம் மணந்து அறஞ் செய்தற்கும் மற்றும் தென் புலத்தார் தெய்வம் இன்னோர் கடன் இறுத்தற்கும் தாம் தாம் ஈட்டிய பொருளே கொள்ளப்படும் எனும் உண்மையினை, "இனி, பொருட் பிணி என்பது பொருளிலனாய்ப் பிரியும் என்பதன்று; தன் முதுகுரவரால் படைக்கப்பட்ட பல்வேறு வகைப்பட்ட பொருளெல்லாம் கிடந்தது மன்; அதுகொடு துய்ப்பது ஆண்மைத் தன்மையன்றெனத் தனது தாளாற்றல் படைத்த பொருள் கொண்டு வழங்கி வாழ்தற்குப் பிரியும் என்பது. அல்லதூஉம் தேவர் காரியமும் பிதிரர் காரியமும் தனது தாளாற்றலாற் படைத்த பொருளாற் செய்தன தனக்குப் பயன் படுவன. என்னை? தாயப் பொருளாற் செய்தது, தேவரும் பிதிரரும் இன்புறார்" என்ற இறையனார் அகப்பொருளால் அறியலாம்.

# ௧௦. பொருட்பயன்

“அறந்தலைப் பிரியாது ஒழுகலும் சிறந்த
கேளிர் கேடுபல வூன்றலும் நாளும்
வருந்தா உள்ளமொடு இருந்தோர்க் கில்லை (அகம் : ௧௭௩)

என்பதனால் முயற்சியில்லார்க்கு, அறஞ்செயல், சுற்றந் தழால் எனும் இவை முற்றுப் பெறா என்பதும்,

‘அறங்கடைப் படாஅ வாழ்க்கையும் என்றும்
பிறன்கடைச் செலாஅச் செல்வமும் இரண்டும்
பொருளின் ஆகும்’ (அகம் : ௧௫௫)

என்பதனால் ஈதலும் இலனென்னும் எவ்வம் உரையாமையும் ஈட்டும் பொருளான் எய்தும் என்பதும்,

“தந்நயந் துறைவோர்த் தாங்கித் தாநயந்
தின்னமர் கேளிரொ டேமுறக் கெழீஇ
நகுத லாற்றார் நல்கூர்ந்தோர்” (அகம் : ௧௫௧)

என்பதனால் பொருளிலார், தம்மகத்தார் சுற்றத்தார் என்றின்னோரைத் தாங்கி மகிழ்ந்திருத்தல் இயலாதென்பதும்

“நட்டோர் இன்மையும் கேளிர் துன்பமும்
ஒட்டா துறையுநர் பெருக்கமும் காணூஉ
ஒருபதி வாழ்த லாற்றுப” (அகம் : ௨௭௧)

என்பதனால் பொருளீட்டும் முயற்சியில்லாச் சிலர், நண்பர் இலராதலையும், சுற்றம் துன்புறுதலையும், பகைவர் பெருகுதலையும் கண்டு வைத்தும் நாணின்றித் தம் பதியினைப் பெயராது மடிந்திருப்பர் என்பதும் அறிவுறுத்தி, இவை பொருளீட்டலின் இன்றியமையாமை, சிறப்புக்களை எத்துணை விளக்கமாகக் காட்டுகின்றன!

இனி, இத் தலைமக்கள், பொருளீட்ட எண்ணும் எண்ணம், தம் தலைவியரின் உடன்பாடு பெற்றுச் செல்லற்குச் சிறிது காலம் தாழ்ப்பினும் அவிந்தொழியாது

சுடர்த்தீ யெனத் தோன்றி வளர்ந்துகொண் டிருத்தலை யும், உடன்பாடு பெற்றுச் செல்லும் முயற்சியாகிய மாரி யினாலே அத்தீ அவியும் எனலையும் கூறும்.

" நள்ளென் கங்குலும் பகலும் இயைந்தியைந்(து)
உள்ளம் பொத்திய உரஞ்சுடு கூரெரி
ஆள்வினை மாரியின் அவியும் "

என்ற அடிகளின் சிறப்பு வியக்கத்தக்கது.

இங்ஙனம் பொருள் ஈட்டப் பிரியும் பிரிவு, கலத்திற் பிரிவெனவும் காலிற் பிரிவெனவும் இருவகைப்படும். கலத் தின் பிரிவு கடலில் மரக்கலங் கொண்டு சென்று வேற்று ஞாலங்களிற் பொருள் ஈட்டிவரல். நமது அகநானூற்றில் இத்தகைய பிரிவினர் செல்லும் கலம் ஒன்று காணப்பெறு கின்றது.

அதன் பெருமையும், அது செல்லுங் கடற் பெருமை யும், இராப் பகலாக ஓய்வு ஒழிவு இன்றி விரைந்து செல் லும் பெற்றியும், எதிர்க் கரையில் உள்ள சுடர் மிக்க மாடத் தீயினால் திசையறிந்து சென்று கரை சேறலும் பிறவும்,

" உலகுகிளர்ந் தன்ன உருகெழு வங்கம்
புலவுத்திரைப் பெருங்கட னீரிடைப்போழ
இரவும் எல்லையும் அசைவின் றாகி
விரைசெல லியற்கை வங்கூ ழாட்டக்
கோடுயர் திணிமணை லகன்றுறை நீகான்
மாட வொள்ளெரி மருங்கறிந் தொய்ய " (அகம்: உருரு)

என்னும் அடிகளான் அறியலாகும். இங்ஙனம் செல்வார்க் குப் பகல் கழிந்து இரவு வருங்காலத்து, நீகான் செயலற்ற அவ்விரவினும் காக்கவல்ல இறைநினைவு தோன்றல் இயல் பாகலின்,

"வெருவரு கடுந்திறல் இருபெருந் தெய்வத்
துருவுட னியைந்த தோற்றம் போல
அந்தி வானமொடு கடல்"—

என்பது கூறப்படுகின்றது. இனி, இங்ஙனம் பொருள் வயிற் பிரிவார் கலத்திற் செல்லுங்கால், அவர்கள் வேங் கடத்தின் அப்பால் மொழி பெயர் தேயங்கட்குச் செல்லு தலும், அங்குள்ள நீரற்ற சுரங்களின் அருமையும், அங்கு ஆறலைத்து வழிப்பறி செய்யுங் கொடியோர்களுடைய கொலைத் துன்பங்களும், வணிகர்கள் இறந்து கிடக்கும் இரங்கற்குரிய காட்சிகளும், அவைகளைக் கழுகு முதலியன உண்டு செல்லும் துயர நிலைகளும் அவைகளையெல்லாம் கடந்து சென்றோர் ஆங்கிருந்து தலைவியர் நிலைகளை எண்ணி வருந்த இங்குள்ள தலைவியர் அன்னோரை நினைந்து வருந்தக் காணும் துயர நிலைகளும், பிறவும் இவ் அக நானூற்றின் பெரும் பகுதியவாய பாலைச் செய்யுட்க ளிற் பரக்கக் காண்டலின், அவற்றையெல்லாம் பாலைத் திணைச் சொற்பொழிவின் வாயிலாக விரிய உணரலா மாக லின், ஈண்டு விரித்திலன்.

## கக. பிற சிறப்புக்கள்

இந் நூலின்கண் முல்லை முதலாய நிலப் பகுதிகளும், அங்குள்ள கருப்பொருட் பகுதிகளும், அவ்வப் பொருள் களை நேரிற் கண்டாங்கு எடுத்துரைக்கும் தன்மை நவிற் சிச் சிறப்பினை விரிக்கின் அது, ஒரு தனி நூலாகும். எனி னும் ஒவ்வொரு வரியினும் அவற்றை அடக்கிக்கூறும் அழகினை யாதல் நாம் காண்போம்.

"முயற்பற ழுகளும் முல்லையம் புறவு —முல்லை
கவைக்கதிர் வரகின் சீறூர் — ,,
வானம் வேண்டா வறனில் வாழ்க்கை —மருதம்

வானுற நிவந்த நீனிறப் பெருமலை —குறிஞ்சி
பெருங்கடல் வேட்டத்துச் சிறுகுடிப் பரதவர் —நெய்தலும் வாழ்க்கையும்
• வழங்குந ரின்மையின் வெளவுநர் மடியும் சுரம் —சுரக்கொடுமை
இரும்புலி தொலைத்த பெருங்கை வேழம் —யானைப்போரும் வெற்றியும்
குடுமிக் கொக்கின் பைங்காற் பேடை —கொக்கும் பேடையும்
இன்பமும் இடும்பையும் புணர்வும் பிரிவும் } —உவமான
நன்பக லமையமும் இரவும் போலும் } -உவமேயங்கள்

என்றிவ்வா றெல்லாம் வரும் சிறப்பினவாய அடிகள் தாமும் ஆயிரக் கணக்கின.

இனி இச் செய்யுட்களின் பொருளாழமும் காணவேண்டுவார், 'முல்லை வைந்நுனை தோன்ற' என்று தொடங்கும் செய்யுட்குப் பேராசிரியர் எழுதிய உரை கண்டு தெளிதல் வேண்டும். இலக்கண நூல்களில் இந்நூல் மேற்கோளாக எடுத்தாளப் பெறாத இடமும், இலக்கிய நூல்களில் இந் நூலின் பொருளும் ஓரோவழிச் சொற்றொடர்களும் கொண்டு கூறாத நூல்களும் இல.

## கஉ. அரிய செய்திகள், புராணச் செய்திகள்

" ஆளி நன்மான்......(யானையின்)
வந்தல் வெண்கோடு வாங்கிக் குருர்தருக்தல் "
" பல்புகழ் நிறைந்த வெல்போர் நந்தர்,
சீர்மிகு பாடலிக் குழீஇக்,
கங்கை நீர்முதல் கரந்த நிதியம் "
" வெல்போர் இராமன் அருமறைக் கவித்த
பல்வீழ் ஆலம் "
" அண்டர் மகளிர் தண்டழை உடீஇயர்
மாஞ்செல மிதித்த மால் "

"கானமர் செல்வி யருளலின் வெண்காற்—
பல்படைப் புரவி எய்தியது"
"மாவண் கழுவுள் காமூ ராங்கட்
பூதந் தந்த பொரியரை வேங்கை"
"மன்மருங் கறுத்த மழுவா ணெடியோன்
முன்முயன் றரிதினின் முடிந்த வேள்வி"

என்றெல்லாம் வரும் அடிகளாற் பற்பல அரியசெய்திகள் உணரலாகும்.

## ௧௩. உவமம்

இந் நூலிற் காணும் உவமங்கள் அளப்பில. மணி மிடை பவளம் என்பதே உவமமாக இந்நூலில் ஈரிடத்து வந்துளது.

'காயாஞ் செம்மல் தாஅய்ப் பலவுடன்
ஈயன் மூதாய் வரிப்பப் பவளமொடு
மணி மிடைந்தன்ன' (௧௪)

எனவும்,

'மணி மிடை பவளம் போல அணி மிகக்
காயாஞ் செம்மல் தாஅய்ப் பலவுடன்
ஈயல் மூதாய் ஈர்ம்புறம் வரிப்ப' (௩௦௪)

எனவும், வந்துள இவ்வடிகளில், காயா மலரின் காய்ந்த பூவும், தம்பலப் பூச்சியும் மணிமிடை பவளமெனக் காணப் பெறும் என்ற உவமம் எத்துணை அழகியது! இவ்வடிகள் இருவேறு புலவர்கள் இயற்றினர் என்பதுணர எத்துணை வியப்பைத் தருகின்றன. இங்ஙனம் சிலவாய அடிகளில் முடிந்து காணும் உவமைகளும் பலவாய அடிகளைக் கவர்ந்து நிற்கும் உவமைகளும் மிகப் பலவாகும். ஓரடியி னுள்ளும் வரும் உவமைகளும் உள. அவற்றுட் சில,

"வெருக்கடி யன்ன குவிமுகி ழிருப்பை"

"மழையில் வானம் மீனணிந் தன்ன
குழையமல் முசுண்டை வாலிய மலர"
"தொழின்மழை பொழிந்த பானாட் கங்குல்
எறிதிரைத் திவலை தூஉஞ் சிறுகோட்டுப்
பெருங்குளங் காவலன் போல
அருங்கடி யன்னையுந் துயின்மறந் தனளே"

இவற்றின் இயற்கை வனப்புக்களைக் கண்டுணர்க.

இனி, இங்ஙனம் வெளிப்படத் தோன்றும் உவமம் போலாது நுணுகி யுணரத் தக்க உள்ளுறை யுவமமும், இறைச்சி, சுட்டு, நகை, சிறப்பு முதலான உள்ளுறைகளும் இதன்கண் மிகப் பல இவைபற்றி உரையாசிரியர்களுட் கருத்து வேறுபாடுகள் மிகப்பல வாதலாலும், அவற்றின் இயல்கள், செய்யுட்கள், பொருண் முடிபுகள் என்னு மிவற்றை விரிப்பது ஈண்டைக் காகாமையானும் ஈண்டு விடுத்துளேன்.

## கஅ. பொருள்

இந் நூலின் பொருள்களும் ஒரோவழிச் சொற்றொடர் களும் பிற்காலத்தில் நைடதம் முதலிய இலக்கியங்களிலும், ஐம்பெருங் காப்பியம் முதலிய பண்டை இலக்கியங்களிலும் காணப்படுகின்றனவாகலின் அவற்றால் சில பகுதிகளில் இந் நூற்கும், இந் நூலால் அவற்றின் சில பகுதிகட்கும் உரைகள் எளிதில் உணரக் கிடக்கின்றன. 'கடியலங் குரல்' (உஎஎ) என்ற இடத்திற்குத் தபிர் கடையுந் தொனிபோன்ற குரலொலி என்பது நைடதம் சிந்தாமணி முதலியவற்றால் உணரப்படும். பயிர்த் தொழிலிற் பயிற்சி யுடையார்க்கு எளிதில் புலனாகும் இடங்கள் சில உள. மருதம் முதலிய நிலப் பகுதியில் வாழுநர் எளிதில் உணர வல்ல முதல், கருப் பொருள்களின் இயற்கைகள் பல இதன்கண் வந்துள.

## ௧௫. முடிப்புரை

இங்ஙனம் பல்லாற்றானும் சிறந்து விளங்கும் சங்க இலக்கிய மணிகளுள் ஒன்றாகிய இவ் அகநானூற்றின் மாநாட்டு முன்னுரை யென்ற ஏதோ ஒன்றை இன்னும் விரிக்காது முடித்து நம் அன்பர்களின் சொற்பொழிவுகளைக் கேட்டு மகிழும் அவா விஞ்சுதலின், இதனுடன் அமைந்து, இதுகாறும் பொறுமையுடன் கேட்டு மகிழ்ந்த அறிவுடைப் பெரியீராகிய உங்கட்கெல்லாம் என் வணக்கத்தினைச் செலுத்தி, ஒன்றுக்கும் பற்றாத என்னையும் ஒரு பொருளாக்கிய நம் கழகத்தினையும் சங்கத்தினையும் வணங்கி வாழ்த்துகின்றேன்.



பண்டிதர், கா. பொ. இரத்தினம்



வித்துவான், முருக இலக்குவர்



வித்துவான்,
S ஆறுமுக முதலியார்,
M.A., B.O.L., L.T.



பூ. ஆலால
சுந்தரஞ் செட்டியார், M.A.



வித்துவான்,
இ. சிவகுருநாதன்

## ௯. தொன்னூல்

[பண்டிதர், கா. போ. இரத்தினம்]

செந்தமிழ்ச் செல்வர்களே!

இவ்வுலகிலுள்ள ஒவ்வொரு நாட்டு மக்களுடைய பழைய வாழ்க்கை வரலாறுகளை யெல்லாம் நாம் அறிந்து கோடற்கு ஆதாரமா யிருப்பன அம் மக்களின் மொழிகளி லுள்ள இலக்கிய இலக்கண நூல்களும், சாசனங்களும், நாணயங்களுமே. இவற்றுள்ளும் மிகச் சிறந்தன இலக்கியங் களே. பல மொழிகளில் அம்மொழிகள் தோன்றிய காலந் தொட்டுள்ள இலக்கியங்கள் முழுவதும் கிடைக்கின்றன. ஆனால், நம் தமிழ் மொழியிலோ, இடையில் தோன்றிய இலக்கியங்களில்கூடப் பல சிதைந்து போய்விட்டன. இப்பொழுதுள்ள தமிழ் நூல்களி லெல்லாம் மிகப் பழைய தெனவும், கிறித்து பிறப்பதற்குப் பலகாலம் முன்னரே தோன்றியதெனவும் அறிஞர்கள் கருதுகின்ற தொல்காப் பியமும் அதன் பின்னர்ப் பலகாலங் கழித்துத் தோன்றிய நூல்களுள் சிலவுமே இப்பொழுது நமக்குக் கிடைத்திருக் கும் பழைய நூல்கள்.

### ௧. தொல்காப்பியமும் முன்னுள்ள நூல்களும்

தொல்காப்பியத்துள்,

"என்மனார் புலவர்"

"என மொழிப, உணர்ந்திசி னோரே"

"பாடலுட் பயின்றவை நாடுங்காலை"
"சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே"
"மொழிப, புலனன் குணர்ந்த புலமை யோரே"
"நல்லிசைப் புலவர்...வல்லிதிற் கூறி வகுத்துரைத்தனரே"
"நேரிதி னுணர்ந்தோர் நெறிப்படுத் தினரே"
"நூனவில் புலவர் நுவன்றறைந் தனரே"

என்றிவ்வாறு காணப்படுகின்ற சொற்றொடர்கள், தொல் காப்பியர் காலத்தில் பல தமிழ் நூல்கள் பெருவழக்கிலிருந் தன என்பதைப் புலப்படுத்துகின்றன. தொல்காப்பியம் இயற்றப்படு முன் அந் நூல்கள் எவ்வளவு ஆண்டுகளாக விளங்கி வந்தன என்பதற்கு விடை காண முடியாதிருக் கிறது. தொல்காப்பியத்துக்குப் பின்னெழுந்த பல இலக் கண நூல்களுள் ஒன்றாகிய நன்னூலுக்கும் தொல்காப்பி யத்திற்கு மிடையிலேயே ஆயிரத்திற்கு மேற்பட்ட வரு டங்கள் கழிந்தனவெனில் தொல்காப்பியத்திற்கும் அதற்கு முன்னிருந்த இலக்கண நூல்களுக்குமிடையில் எவ்வள வாயிர வருடங்கள் கழிந்திருக்கும்? தொல்காப்பிய இலக் கணம் தோன்றிய காலத்திருந்த பல நூல்கள்கூட நமக்குக் கிடைக்கவில்லை. தொல்காப்பியம் கூறும் சில இலக்கணங் களுக்குரிய இலக்கியங்கள் மறைந்து விட்டன.

"தொகுத்தல் விரித்தல் தொகைவிரி மொழிபெயர்த்(து)
அதர்ப்பட யாத்தலோ(டு) அனை மர பினவே"

எனுமித் தொல்காப்பியச் சூத்திரத்தில் வழிநூல்கள் செய்யும் முறை நான்காக வகுக்கப்பட்டிருக்கிறது. தொகுத்தும், விரித்தும், தொகுத்து விரித்தும், மொழி பெயர்த்தும் செய்யப்பட்ட நூல்கள் தொல்காப்பியர் காலத்திலிருந்தன. இந் நூல்களைப்பற்றி நாம் நன்கு அறிந்துகொள்ள முடியாதிருக்கிறது. இக் காலத்தில் வடமொழியின் தொடர்பு தமிழுக்கு ஏற்பட்டிருந்த

தென்பதும், சில வடசொற்கள் தமிழிடைப் புகுந்தன வென்பதும், வடமொழியாளருடைய சாதிப் பகுப்பு, தமிழ் நாட்டில் தலைகாட்டிற் றென்பதும் பிறவும் தொல்காப்பியச் சூத்திரங்களைக் கொண்டறியக் கிடக்கின்றன.

தமிழருடைய மக்கள் பகுப்புடன், ஆரியருடைய (பிரம்ம, க்ஷத்திரிய, வைசிய, சூத்திர) அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் எனும் நாற்பாற் பகுப்பும் தமிழகத்தில் தலைமயக்குற்ற தென்பது தொல்காப்பியத்தில் காணப்படும்.

"பெயரும் வினையுமென் றாயிரு வகைய
திணைதொறும் மருவிய திணைநிலைப் பெயரே"

"ஆயர் வேட்டுவர் ஆடூஉத் திணைப்பெயர்
ஆவயின் வரூஉங் கிழவரு முளரே"

"ஏனோர் மருங்கினும் எண்ணுங் காலை
ஆனா வகைய திணைநிலைப் பெயரே"

"அடியோர் பாங்கினும் வினைவலர் பாங்கினும்
கடிவரை யிலபுறத் தென்மனார் புலவர்"

"ஏவல் மரபின் ஏனோரும் உரியர்
ஆகிய நிலைமை அவரும் அன்னர்"

முதலிய சூத்திரங்களால் அறியக்கிடக்கிறது. இக் கலப்பு நிலையை உணராமலோ அன்றி வேறெக் காரணத்தாலோ, நச்சினார்க்கினியர் இச் சூத்திரங்களுக்குரிய சொற்பொருளைக் கைநெகிழவிட்டு, இளம்பூரணருரைக்கு நேர்மாறாக உரைத்து அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என்ற நாற்பாற் பகுப்பையுமே நிலைநாட்ட முயன்று பிழைப்பட்டார். இளம்பூரணர் இச் சூத்திரங்களுக்கு இயைந்த அளவில் பதவுரை எழுதினாராயினும் இக் கலப்பு நிலையை உணராது சில இடங்களில் முட்டுப் படுவாராயினர். இவற்றின் விரிவை, செந்தமிழ்த் தாயின் துணைகொண்டும், என் செந்தமிழ்ப் பரமாசிரியரின் திருவருள் கொண்டும் யான்

எழுதி வெளியிட விருக்கும் அகத்திணையியல் புத்துரையில் காண்க.

## உ. தமிழ் நாகரிகத்தின் பழைமை

பைந்தமிழ்ப் பெரியோர்களே!

தொல்காப்பியத்துக்குப் பன்னூறு ஆண்டுகளுக்கு முன்னரே தோன்றிய பல தமிழிலக்கண இலக்கிய நூல்கள் தமிழகத்தில் தொல்காப்பியர் காலத்தி லிருந்தன என்று முன்னர்க் குறிப்பிட்டுளேன். அப்படிப்பட்ட நூல்கள் தோன்றுவதற்கு முன் பன்னூறாண்டுகளாகத் தமிழ்மொழி வளர்ந்து வந்திருக்கிற தென்பது வெளிப்படை. ஆனால் அந் நூற்றாண்டுகளின் தொகையை இவ்வளவென ஒருவராலும் ஓராற்றானும் கூறமுடியாது. மொகெஞ்சதாரோ,[1] ஹாரப்பா[2] என்னு மிரு நகரங்களையும் தோண்டி அவற்றிலுள்ள பல புதை பொருள்களை ஆராய்ந்தவர்களும் திராவிட நாகரிகம் ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன் சிறந்து விளங்கிற்று என்று முடிவுகட்டி யிருக்கிறார்கள். தென்னிந்தியாவின் தென்பகுதியிலும் கடல்கொண்ட குமரி முனையின் தென் பகுதியிலும் பல புதை பொருள்களிருக்கு மென்பதற்கு ஐயமில்லை. இவை வெளிவருங் காலத்தில், இவற்றை ஆதாரமாகக் கொண்டு, தமிழ் மொழியின் தோற்றத்தையும், தமிழ் மக்களின் நாகரிகத்தையும் குறைந்தது பன்னீராயிரம் ஆண்டுகளுக்கு முந்தியன என்று கூறமுடியுமென்று நான் உறுதியாக உரைக்கின்றேன். நிற்க.

## ங. தொல்காப்பியத்தின் பின்தோன்றிய நூல்கள்

தொல்காப்பியத்தின் பின்னர்த் தோன்றி, நமக்குக் கிடைத்திருக்கும் நூல்களுள் மிகப் பழையனவெனக் கரு

1. Mohenjo-Daro. 2. Harappa.

தப்படுவன, சங்கநூல்கள் எனவும் சங்கம் மருவிய நூல்களெனவும் வழங்கப்படும் பதினெண்மேற் கணக்கும் பதினெண் கீழ்க் கணக்குமாகிய முப்பத்தாறு நூல்களே. இவற்றுள்ளும் மேற் கணக்கு நூல்கள்தான் மிகப் பழையன என்பதை இந் நூல்களைக் கற்பவர்கள் நன்கறிவார்கள். மேற் கணக்கு நூல்களுள்ளும், எட்டுத்தொகை நூல்கள்தான் பத்துப்பாட்டினும் பழையன. எட்டுத்தொகை நூல்களைத்தொகுத்தார், தொகுப்பித்தார், தொகுத்தகாலம் முதலியனவற்றை முடிவாய் அறிய முடியாதிருக்கிறது. அகம் புறம் எனும் பொருள்பற்றியும், கலி, பரிபாடல் முதலிய யாப்புப் பற்றியும் இத் தொகை நூல்கள் தொகுக்கப்பட்டிருக்கின்றன. முதன் முதல் தொகுக்கப்பட்டதென அறிஞர்கள் யாவரும் போற்றும் புறநானூறு, புறப்பொருள் பற்றிய நானூறு செய்யுள்களை யுடையது. புறநானூற்றின் பின் அகப்பொருட் செய்யுள்களைத் தொகுத்தவர்கள் அடி குறைந் தொகுகிய செய்யுள்களில் நானூற்றை எடுத்துக் குறுந்தொகையாகவும் அடிமிகுந்து தொகுகியவற்றில் நானூற்றை எடுத்து நெடுந்தொகை யாகவும், இடைநின்றவற்றுள் நானூற்றை எடுத்து நற்றிணையாகவும் தொகுத்தார்கள். புறநானூற்றுக் கேற்ப நெடுந்தொகைக்கு அகநானூறு எனும் பெயரும் ஏற்பட்டு நெடுந்தொகையாகிய அகநானூறு எனவும் வழங்கலாயிற்று. இன்னும், இவ்வகநானூற்றைத் தொகுத்தவர் சில சித்திரப் பாடுகளைத் தொகுப்பு முறையில் புகுத்தியுளார். இவற்றைத் தலைவர் விரித்துரைத்துள்ளா ராதலின் யான் விரிக்கவேண்டியதின்று.

## ३. நெய்தலும் யாறும் எனதூரும்

அருந்தமிழ் அறிஞர்களே!

தமிழ்த் தாய்க்கு அருந்தொண்டுகள் பல புரியும் இக் கழகத்தார் இவ்வகநானூற்றுள் காணப்படும் நெய்தற்

செய்யுள்களைப் பற்றியே ஈண்டு எடுத்துரைக்குமாறு என்னைக் கேட்டுள்ளார்கள். எனக்கும் நெய்தலுக்குமுள்ள தொடர்புபற்றிக் கேட்டார்களோ அன்றோ அறியேன். ஆனாலும், நெய்தலுக்கும் எனக்கும் உங்களுக்கும் தொடர்புகள் உண்டு என்பதை எடுத்துக்கூற வின்றியமையாதிருக்கிறது. சரித்திர காலத்துக்கு முன்னரே இலங்கைக்குச் சென்ற இராமரைப் பற்றிய ஒரு செய்தியும் இந் நெய்தற் பாட்டுக்களுள் காணப்படுகிறது. இந்தியாவிலிருந்து இலங்கைக்குச் செல்பவர்களும் இலங்கையிலிருந்து இந்தியாவிற்கு வருபவர்களும் தனுக்கோடி வழியாகத்தான் தங்கள் பயணத்தைச் செய்யவேண்டும். தாய் நாட்டினரையும் சேய் நாட்டினரையும், வழியனுப்பும் நகரமும் வரவேற்கும் நகரமும் விளங்கும் இத் தனுக்கோடி, நெய்தற் பாக்களுள்ளும் காணப்படுகிறது. இன்னும் இந்தியாவையும் இலங்கையையும்—உங்களையும் எங்களையும்—பிரிப்பது குறிஞ்சியன்று; முல்லையன்று; மருதமன்று; பாலையுமன்று; நெய்தலே. எனது இலங்கைத் தீவோ நாற்புறமும் நெய்தலைக் கொண்டது. அத் தீவின் வடபாலுள்ள யாழ்ப்பாணத்தை யடுத்து, ஏழு தீவுகளிருக்கின்றன. இவற்றுள் மணிமேகலையில் கூறப்படும் மணிபல்லவம் எனக் கருதப்படும் நயினை தீவுமொன்றாகும். ஊர் காத்து நின்றமையால் ஊர் காவற்றுறை எனப் பெயர் பெற்ற பெருந்துறையைத் தன்னகத்தே கொண்டதும், மற்றத் தீவுகளிலும் பெரியதும், ஒல்லாந்தரா[1]லேயே உவப்புடன் அவர்களுடைய ஒல்லாந்து தேசத்திற்குக் கிட்டவுள்ள ஒரு தீவின் பெயராகிய லேடன்[2] எனும் பெயரிடப்பட்டதுமான ஒரு பெருந் தீவுண்டு. இத்தீவுள் பல்லூர்களிருப்பினும் அவற்றுள் சிறந்து விளங்கும் வேலணையூரின் பெயராலேயே இத் தீவு

1. Hollanders. Dutch. 2. Leyden.

இப்பொழுது பேர்கொண் டிலங்குகிறது. இவ் வேலணை யின் பெயர்க் காரணத்தைப் புலவரொருவர்,

"பாரகம் கலக்கிய தாரகன் தன்னைக்
குருகுபெயர்க் குன்றொடு கொன்ற குமரன்
வைவேல் அவன்றன் கையணை இடமாய்
விளங்கிய அதனால் வேலணை என்றே
பார்புகழ் பண்புடைப் பேர்பெற் றோங்கிய
உன்புகழ் உரைத்திட ஒருவரால் ஒண்ணுமோ."

என்று பாடினார். இவ் வேலணை ஊரே எனதூராகும். இதன் நாற்புறத்திலும் கடலும் கடல் சார்ந்த இடமு மாகிய நெய்தலுண்டு. மத்தியில் மருதமும் முல்லையுமுண்டு. மருதத்து வசித்தாலும் நெய்தல் நிலப் பகுதிக்கு யான் அடிக்கடி சென்று இந் நெய்தற் செய்யுள்களுள் காணப் படும் சில காட்சிகளைக் கண்டு களிப்பதுண்டு.

"[1]ஓங்கிய கண்டலும் தேங்கிய நறையுடை
மாமலர்ப் பகன்றையும் தேமலர் அடம்பும்
எங்கும் நிறைந்து எழிலுடன் இலங்கும்
பொங்குதிரை பொருத வார்மணற் கரையும்."

என்று சில வருடங்களுக்கு முன் யான் பாடியதும் ஈண்டு ஞாபகத்துக்கு வருகின்றது. இன்னும், இச் சென்னையம் பதியும் நெய்தனிலத்தில்தான் அமைந்திருக்கிறது. நெய்தல் நிலத்தருகே வசித்து நெய்தலைக் கடந்து வந்து இப் பொழுது நெய்தல் நிலத்தில் (சென்னையில்) வசிக்கும் யான் நெய்தல் நிலத்தில் நின்று நெய்தலைப்பற்றிக் கூறல் இயை புடைத்தன்றே!

## ரு. பொருள்

தண்டமிழ்த் தலைவர்களே!

நான் இங்குப் பேசுதற்கு எடுத்துக்கொண்ட நெய்தற் செய்யுள்களைப்பற்றிக் கூறுதற்குமுன் அகப்பொருள் புறப்

1. பேரம்பலப் புலவர் நினைவு மலர்.

பொருளைப் பற்றியுஞ் சில கூறல் இன்றியமையாதது என்றெண்ணுகிறேன். நம்முடைய தமிழ் இலக்கணங்கள் மற்ற மொழிகளின் இலக்கணங்களைப்போல் எழுத்தையும் சொல்லையும் மாத்திர முணர்த்தாது பொருளிலக்கணமும் உணர்த்தியுள்ளன. எழுத்துஞ் சொல்லும் அறிவது பொருளைப்பற்றி அறிவதற்கே என்பதுதான் தமிழர் கொள்கை. பொருளும் அதனை யறிதற்குக் கருவியாகிய எழுத்தும் சொல்லும் யாப்புமாகிய நான்குமே தமிழ் என இறையனார் களவியலுரை கூறும் நுட்பம் நுவலற் கரியது. இன்னும் அவ்வுரையே "எழுத்துஞ் சொல்லும் ஆராய்வது பொருளதிகாரத்தின் பொருட்டன்றே" என அறுதியிட்டுரைக்கின்றது. காட்சிப் பொருள்களைக் கண்ணினால் காண்பதுபோல் எண்ணும் எழுத்துமாகிய கண்கொண்டு கருத்துப் பொருளைக் காணவேண்டு மென்பதுதான்,

> "எண்ணென்ப வேனை யெழுத்தென்ப இவ்விரண்டும்
> கண்ணென்ப வாழு முயிர்க்கு."

எனும் பொய்யாமொழி புகல்வது. இலக்கணத்தை மாத்திரம் கற்றுப் பொருளை அறிய அவாவாது அமைவார் பித்தர் என்பதைக் கூறவும் வேண்டுமோ? இவர்களைக் குறித்துத்தான்,

> "சத்தமும் சோதிடமும் என்றாங் கவைபிதற்றும்
> பித்தரில் பேதையாரில்."

எனுமடிகள் பாடப்பட்டன. இனி, பொருள் என்ற சொல்லுள் அடங்காதன இங்குமில்லை, அங்குமில்லை, எங்குமில்லை. உலகம் பொருள்மயமானது. யாவற்றையும் கடந்து நிற்கும் கடவுளும் ஒருபொருளாக - பரம்பொருளாக - இருக்கிறார்.

## சா. அகமும் புறமும்

இத்தகையதாய் யாவற்றையும் அடக்கும் பொருளை நம் முன்னோர் அகப்பொருள் புறப்பொருள் என இரண்டாகப் பிரித்தனர். வடநூலார் அறம் பொருள் இன்பம் வீடென நாலாகப் பிரித்தனர். இந்த நாலு பிரிவிலும் முன்னைய இரு பிரிவு சிறந்ததென்பதை நடுவு நிலைமையுடனாராய்வோர் நன்கறிவர். பல்லாற்றானும் ஒத்த ஒருவனும் ஒருத்தியும் கூடுங் காலத்துப் பிறப்பதும் அகவுணர்வு மாத்திரையானே அறியப்படுவதுமாகிய இன்பத்தை அகமென்றனர். ஏனையவற்றைப் புறமென்றனர். இவ்வொருவனுக்கும் ஒருத்திக்கும் இடையிலேற்படும் ஒழுக்கத்தை அகத்திணை என்றனர்; ஏனையவற்றைப் புறத்திணை யென்றனர். அகத்தில் காதல் கனிகின்றது; புறத்தில் வீரம் சிறக்கின்றது. ஒன்றுபட்ட காதலர் அகத்தில் வாழ்கின்றனர்; ஒன்றுபடாதார் புறத்தில் பொருகின்றனர். ஒவ்வொரு வீட்டிலும் காதல் காணப்படுகிறது; ஒவ்வொரு நாட்டிலும் வீரம் தோற்றுகிறது. மக்கள் பெருக்கம் அகத்தில்; மக்களைக் காத்தல் புறத்தில். பால் விருப்பால்—இளை விழைச்சால்—அகத்திணை உண்டாகிறது. மண்ணால், பொன்னால், பசியால் புறத்திணை உண்டாகிறது. அகத்திணைப் புறத்துப் பிறப்பது புறத்திணை. விரிக்கில் பெருகுமாதலின் விடுத்து நெய்தல் திணையைப்பற்றிச் சில கூறி மேற்செல்கின்றேன்.

## எ. நெய்தல்

அகப்பொருளில் கூறப்படும் திணைகள் நிகழ்வதற்குரிய தனிச் சிறப்புடைய இடங்களை அத் திணைகளின் பெயர்களாலேயே பெயரிட்டிருக்கிறார்கள். நெய்தல் என்பது இரங்குதலும் இரங்குதல் நிமித்தமுமாம். தலைவனைப்

பிரிந்த காதலிக்குக் கடலும் கானலும் காண்டொறும் இரக்கம் மிகுமாதலால் கடலையும் கடல் சார்ந்த இடத்தையும் நெய்தல் என்றனர். இக் கடற்கரையில் இரக்கம் மிகும் நேரம் பொழுதுபடும் நேரமாகும். ஏனெனில் "வெஞ்சுடர் வெப்பந் தீரத் தண்ணறுஞ் சோலை தாழ்ந்து நிழல் செய்யவும், தண் பதம் பட்ட தெண்கழி மேய்ந்து பல்வேறு வகைப்பட்ட புள்ளெல்லாங் குடம்பை நோக்கி யடங்கு பெயரவும், புன்னை முதலிய பூவினாற்றம் முன்னின்று கஞற்றவும், நெடுந்திரை அழுவத்து நிலாக்கதிர் பரப்பவும் காதல் கைமிக்குக் கடற்கானும் கானற்கானும் நிறை கடந்து வேட்கை புலப்பட உரைத்தலின் ஆண்டுக் காமக் குறிப்பு வெளிப்பட்டு இரங்கற் பொருள் சிறத்தலின் என்க.'

## அ. நெய்தற் செய்யுள்கள்

அகநானூற்றிலுள்ள நானூறு பாக்களுள் ஒவ்வொரு பத்தாம் பாவும் நெய்தல் பாவாகும். ஆகவே அகநானூற்றில் நாற்பது நெய்தல் செய்யுள்க ளுண்டென்பது கூற வேண்டியதின்று. இச் செய்யுள்களில் ஆங்காங்கே, நெய்த னிலமக்கள், அவர்களின் தொழில்கள், விளையாட்டுக்கள், நெய்த னிலத்திற் காணப்படும் மரங்கள், விலங்குகள், பறவைகள், கானற் சோலைகள், கழியாறுகள், உப்பு விளையுமிடங்கள், கடலிற் செல்லும் தோணிகள், மீன்கள், மீன்களைப் பிடிக்கும் வலைகள் முதலிய பல பொருள்களைப் பற்றிப் பலவாறு பாடப்பட் டிருக்கின்றது. பூமி சாத்திர அறிஞர்கள் இக்காலம் உலகத்தை [1]இயற்கைப் பிரிவுகளாகப் பிரிக்கிறார்கள். ஆனால் நம் முன்னோர் பன்னூறு வருடங்களுக்கு முன்னரே படுதிரை வையத்தை இயற்கை

1. Natural regions.

யுட னியையப் பகுத்திருக்கின்றனர். குறிஞ்சி[1] முல்லை[2] மருதம்[3] நெய்தல்[4] பாலை[5] என்பவைகளே அவர்களுடைய இயற்கைப் பிரிவுகள். இவ்வியற்கைப் பிரிவுகளைப்பற்றி அவர்கள் பாடி யிருக்கும் செய்யுள்கள் குறிப்பனவற்றுள் பூமிசாத்திர விடயங்களும்[6] அடங்கி யிருக்கின்றன என்பதைக் குறிப்பிட்டு நெய்தற்செய்யுள்களுள் நுழைகின்றேன்.

நாற்பது நெய்தற் செய்யுள்களுள் ஒன்று தோழி பாணனுக்குக் கூறும் கூற்றாக வுள்ளது. ஏனைய பெரும்பாலும் தோழியும் தலைவியும் தலைவனுமாகிய மூவருள் ஒருவருக்கு இன்னொருவர் கூறுவனவாக உள்ளன. இச்செய்யுள்களை நுண்ணிதி னுணர்ந்து படிப்போருக்கு, இவற்றைப் பாடிய புலவர்களுடைய பெரும் புலமை தெள்ளிதிற் புலனாகும். தலைவன் தலைவி எனுமிருவர் தம் உணர்வையும் எடுத்துரைக்கும் நுட்பம், தோழி பல்சுவை நல்க உரையாடும் விசித்திரம், இயற்கைப் பொருள்களை அவற்றின் தன்மைகள் நன்கு புலப்படும்படி வரைந்து காட்டும் சித்திரம், உள்ளுறை யுவமைகளைத் தெள்ளிதில் அமைத்துச் செல்லும் திறம், இழுமென ஒழுகும் சிறு சொற்களை அடுக்கிப் பாடும் அருமை முதலியன உரைத்தற் கரிய உயர்வுடையன.

## ௪௧. முதற் செய்யுள்

வண்டமிழ் வாணர்களே!

எல்லாச் செய்யுள்களையும் எடுத்து உரைத்துச் சுவை காண நேரமிடங்கொடா தாகையால் முதற் செய்யுளை யாகுதல் முற்றச் சுவைத்துச் செல்வோம்.

1. Mountainous regions.
2. Forests.
3. Fertile plains.
4. Sea coasts.
5. Deserts.
6. Geographical accounts.

இரவுக் குறிக்கண் வந்து தலைமகளைக் கண்ணுற்று நீங்கும் தலைமகனை எதிர்ப்பட்டு நின்று தோழி கூறுவதாக அம்மூவனார் எனும் அருந்தமிழ்ப் புலவர் பதின்மூன்றடிகளில் நூற்றிருபத்தொரு சொற்களால் ஒரு வியத்தகு சித்திரம் வரைந்திருக்கிறார். இந்தச் சித்திரத்தில், கடல், நீர்த்துளி, தாரகை, புன்னை, புட்கள், நெய்தல் மலர், கண், கொண்டல் காற்று, மணல் குன்று, திரை, தோணி, புதுவலை, பரதவர், மணற்கரை, சுறாமீன், தொண்டித்துறை முதலிய பல பொருள்கள் பொருத்தமாகவும் திருத்தமாகவும் வரையப்பட்டிருக்கின்றன. இவற்றை அடக்கிய சித்திரம் ஒரு செய்தியை நமக்குச் செப்புகிறது. அது செப்பும் முறையில்கூட ஒரு சித்திரம் அமைந்திருக்கிறது. அகப்பொருள் நூல்களில் உரையாடும் பாத்திரங்களுள் அதிகமாக உரையாடுபவள் தோழிதான்; பல திறத்தினரோடும் உரையாடுபவளும் இவள்தான். சதுரப்பாடமைய உரையாடுவதில் இவளுக்கு நிகரானவர் ஒருவருமில்லை. காலத்திற் கேற்ப, இடத்திற் கேற்ப ஆளுக் கேற்பப் பேசுவதில் இவள் மிகத் தேர்ந்தவள். இவளுடைய பேச்சைத்தான் மேற் கூறிய சித்திரம் செப்புகிறது.

தலைவியைக் கண்ணுற்ற தலைவனைத் தோழி சந்தித்தாள். உடனே அவனுக்குச் சில கூறுகிறாள்: "பெரிய கடற் பரப்பி லிருந்தெழும் நீர்த் துளியை ஏற்றதும், தாரகை போன்ற மெல்லிய அரும்புகளை முகிழ்த்ததும், முதிர்ந்து வளைந்ததுமான புன்னையின் அகன்ற கொம்புகளில் பறவைகள் தங்குதல் மிகும் துறைவனே! நெய்தலைப் போன்ற கண்கள் வருத்த முடையவாய் அழ இவளைவிட்டுப் பிரிய எண்ணினையாயின் அரியதனைச் செய்தலுற்றாய். பெரும! கொண்டல் காற்றால், வெண்டிரையை யுடைய கடல் மோதுகின்ற மணற் குன்றில்,

பழைய படகுகளை உடைத்த புது வலையை யுடைய பரதவர், உயர்ந்த மணற் கரையில் சுறுமீனைக் கொண்டு வந்து புலால் மணங் கமழும் பாக்கத்தில் பகுக்கும் தொண்டியை யொத்த இவளுடைய நலம் இவளுக்கே உரித்தாகக் கொண்டு நின்னூரிடத்துச் செல்ல வேண்டும்."

இதுதான் தோழி கூறியதன் சொற்பொருள். இவ்வளவில் அவள் கருதியன எல்லாவற்றையும் நாம் தெரிந்து கொள்ள முடியாது. இக் கூற்றுள் நுழைந்து உள்ளுறை பொருள்களைக் கண்டால்தான் நம் உளத்திற்குப் பெரு விருந்து கிடைக்கும்; தோழியின் நுட்ப உரையின் சித்திரப்பாடு தெரியும்; புலவரின் புலமை தோன்றும்; அகப் பொருளின் விழுப்பமும் விளங்கும்.

'நலம் இவளுக்குரித்தாகக் கொண்டு போகவேண்டும்' என்பதால் வரைந்துகொண்டு போ என்றாள். நீ கொண்டு போகாவிடில் இவள் நலம் இவளுக்குரித்தாகாது; இவள் இறந்து விடுவாள் என்பதுங் குறித்தாள்.

புன்னை, புட்களுக்கு இருப்பிடமாதல்போல நீ எங்களுக்கு ஆதாரமாயில்லை என்பதை, 'புன்னைக் கொம்பில் புட்கள் தங்கும்' என்பதால் உணரவைத்தாள்.

'பரதவர் தம்முடைய திமிலாலும் வலையாலும் தம் தொழிலாகிய வேட்டைமேல் செல்லாததுபோல ம் உமக்கு உறுதியாக ஆக்கிக் கொள்ளப்பட்ட நன்மைகளால் உமக்குரிய ஒழுக்கமாகிய நல்வழியில் ஒழுகுகின் றீரில்லை' என்பதை எடுத்துணர்த்தினாள்.

பரதவர் தேடாமல்வந்த சுறுமீனை அகப்படுத்தி அதனை வெட்டிக் கூறுவைத்து எல்லாரையும் அழைத்தாற் போல, 'நீரும் கண்டோர் இகழும் களவொழுக்கத்திலே

ஒழுகி இக் களவினைப் பரப்பிப் பலரும் அலர் கூறும்படி செய்கின்றீர்' என்பதையும் குறிப்பால் தெரிவித்தாள்.

இப்படிப்பட்ட பன்னயங்களும் மிளிரும் பாவினை—சொற்சித்திரத்தை—நன்மணங் கமழும் பொன்மலரினை—காட்டாது நீட்டிக்கின்றேன் என்றுளங் கவலாதீர். இதோ அச்சித்திரச் சுருளை விரிக்கின்றேன்; செவி வாயாக அகக்கண் கொண்டு கண்டு மகிழுங்கள்.

வான்கடல் பரப்பில் தூவற்கு[1] எதிரிய
மீன்[2] கண் டன்ன மெல்லரும்(பு) ஊழ்த்த[3]
முடவுமுதிர் புன்னைத் தடவுநிலை மாச்சினைப்[4]
புள்[5] இறை கூரும்[6] மெல்லம் புலம்ப
நெய்தல் உண்கண் பைதல்[7] கலுழப்[8]
பிரிதல் எண்ணினை ஆயின் நன்றும்
அரிது துற்றனையால் பெரும! உரிதினில்
கொண்(டு)ஆங்குப் பெயர்தல் வேண்டும் கொண்டலொடு
குருஉத்[9]திரைப் புணரி[10] உடைதரும் எக்கர்ப்
பழந்திமில்[11] கொன்ற புதுவலைப் பரதவர்
மோட்டு[12] மணல் அடைகரைக் கோட்டுமீன் கொண்டி
மணங்கமழ் பாக்கத்துப் பகுக்கும்[13]
வளங்கெழு தொண்டி[14] அன்ன இவள் நலனே.

(அகம் : ௧௦)

இப்பாவுள் உள்ள பெருநயங்களுள் சிலவற்றை முன்னர்க் கூறினேன். முழுவதையும் அளவுபடுத்திக் கூற ஒருவராலும் முடியாது எனல் மிகையாகாது. யான் காணும் நயங்கள் யாவற்றையும் கூடக் கூற, நேரம் இடங்கொடாதாகையால் இன்னுஞ் சில கூறி மேற் செல்கின்றேன்.

1. துளி. 2. நட்சத்திரம். 3. முகிழ்த்த.
4. பெரிய கொம்பில். 5. பறவை. 6. மிகத் தங்கும்.
7. வருத்தமுடையனவாய். 8. அழ. 9. நிறமுள்ள.
10. கடல். 11. பழம் படகு. 12. நிறைந்த.
13. பலர்க்கும் கொடுக்கும். 14. தொண்டித் துறை.

கடற்கரைக்கு அடிக்கடி செல்பவர்கள் கண்கொள்ளாத—கட்டுரைக்க முடியாத—பல காட்சிகளைக் காண்பர். நம் புலவர் திலகராகிய அம்மூவனாரும் கடற்கரைக்குப் பலமுறை சென்று பல காட்சிகளையும் கண்டு களித்தவர். ஒருமுறை கடற்கரையில் திரை பொருதுமிடத்தில் ஒரு புன்னை மரத்தை அவர் கண்டார். திரை எறிந்த திவலைகளை யெல்லாம் அப் புன்னை ஏற்று நின்ற காட்சி அவரை ஈர்த்தது. அப் புன்னையையும் அக் காட்சியையுங் கண்டு மகிழ்ந்து நின்ற அவருக்குப் புன்னை யரும்புகள் தோன்றின. அவற்றைக் கண்ட மாத்திரத்தில் புலவருக்கு அவற்றை ஒத்த வான் மீன்களினெண்ணம் உண்டானது. பின் அவர் அப் புன்னை மரத்தி னடிப்பாகத்தைப் பார்த்தார். அது வளைந்திருந்தது. அப் புன்னை முதிர்ந்திருந்த தென்பதையும் அவர் அறிந்து கொண்டார். அதற்குப் பல அகன்ற கொம்புக ளிருந்தன. அக் கொம்புகளில் பறவைகள் தங்கியிருப்பதையும் கண்டார். இவ் வளவையும் யாவரும் கண்டு களிக்கத் தக்கதாகத் தமது செய்யுளின் முதற் பகுதியிலே வரைந்தார்.

இனி, இச் செய்யுள் நெய்தல் திணைபற்றியது ஆகலின், அத் திணைக்குரிய முதற்பொருள் கருப்பொருள் உரிப்பொருள்களெல்லாம் இதில் பொருந்தி யிருக்கின்றன. கடலும் கடற்கரையிலுள்ள மணற்குன்றும் காணப்படுகிறது; கடற்கரையில் அதிகமாகக் காணப்படும் மரங்களுள் ஒன்றாகிய புன்னை பூக்களுடனும் புட்களுடனும் நிற்கிறது; கடற்கரையில் வதியும் மக்களாகிய பரதவரும் அவர்கள் தொழிலுக்குரிய தோணி வலை முதலியனவும் கூறப்பட்டுள்ளன. பரதவருடைய தொழிலையும் சுறுமீனையும் காண்கின்றோம். இவற்றோடு தொண்டியெனும் துறையின் சிறப்பும் புலவர் பாடும் அதன் புகழ்மிகு நலமும் கூறப்படுகின்

'இவளை நீ கொண்டு செல்லாயாயின் இவள் இறந்து' எனத் தோழி தலைவனுக்குக் கூறுகிறாள்.

## ௧௦. அட்டவணை

இம் முதற் செய்யுளைப்போலவே ஏனைய செய்யுள்களும் செப்பருஞ் சிறப்புடையனவாய் மிளிர்கின்றன. பின்வரும் அட்டவணை ஒவ்வொரு செய்யுளிலுமுள்ள அடிகளின் தொகையையும் ஆசிரியர்களின் பெயரையும் கூறுவோரையும் கேட்போரையும் காட்டும்.

| செய்யுள்கள் (அகநானூற்றிலுள்ளபடி) | அடிகளின் தொகை | கூற்று | கேட்போர் | |
|---|---|---|---|---|
| 10 | 13 | தோழி | | அம்மூவனார் (1) |
| 20 | 16 | ,, | ,, | உலோச்சனார் (1) |
| 30 | 15 | ,, | ,, | முடங்கிக் கிடந்த நெடுஞ் சேரலாதன் |
| 40 | 17 | | தோழி | குன்றியனார் |
| 50 | 14 | தோழி | பாணன் | கருவூர்ப் பூதஞ் சாத்தனார் |
| 60 | 15 | ,, | தலைமகன் | குடவாயிற் கீரத்தனார் |
| 70 | 17 | ,, | மகள் | மதுரைத் தமிழ்க் கூத்தனார் கடுவன் மள்ளனார் |
| 80 | 13 | | தலைமகன் | மருங்கூர் கிழார் பெருங் கண்ணனார் |
| 90 | | | தலைமகன் | மதுரை மருதன் இளநாகனார் (1) |
| 100 | 18 | ,, | ,, | உலோச்சனார் (2) |
| 110 | 25 | ,, | செவிலி | போந்தைப் பசலையார் |
| 120 | 16 | ,, | தலைமகன் | நக்கீரர் (1) |
| 130 | 14 | தலைமகன் | பாங்கன் | வெண்கண்ணனார் |
| 140 | 15 | ,, | ,, | அம்மூவனார் (2) |
| 150 | 14 | தோழி | தலைமகன் | குறுவழுதியார் |
| 160 | 18 | | தலைமகன் | குமிழிஞாழலார் நப்பசலையார் |

## கக. பாடிய புலவர்கள்

நெய்தற் செய்யுள்களைப் பாடிய புலவர்கள் இருபத்து நால்வருள் போந்தைப் பசலையார், குமிழி ஞாழலார் நப் பசலையார் எனும் இருவரும் பெண்பாலார். இவர்கள் ஒவ் வொரு செய்யுளே பாடியுளர். மற்றையோருள் உலோச்ச னூர் எட்டுச் செய்யுளும், அம்மூவனார் ஐந்து செய்யுளும், நக்கீரர் நாலு செய்யுளும், மதுரை மருதனிளநாகனார் மூன்று செய்யுளும் பாடியுளர். ஏனைய புலவர்கள் பதி னெண்மரும் ஒவ்வொரு செய்யுளே பாடியுளர். ஒன்றுக்கு மேற்பட்ட செய்யுள்களைப் பாடிய புலவர் நால்வருள்ளும், நக்கீரர் அகநானூற்றில் மற்றத் திணைகளின் மேலும் பதின் மூன்று செய்யுள்களை இயற்றியுளர். மருதனிளநாகனார் இருபது பாடல்கள் பாடியுளர். இவ்விரு புலவர்களும் பாடிய பாட்டுக்களை ஏனைய தொகை நூல்களிலும் பரக்கக் காணலாம். இவர்களைப் பற்றிப் பலர் நன்கறிந்திருப்பர். ஈண்டு உரைக்கப்புகின் அளவின்றிப் பெருகுமாதலின் விடுத்து மற்றைய இருவரையும்பற்றிச் சில சுருக்கமாகக் கூறுகின்றேன்.

## கஉ. அம்மூவனாரும் உலோச்சனாரும்

இவ்விருவரும் அகநானூற்றில் நெய்தற் றிணைக்குரிய செய்யுள்களையன்றி வேறு திணைகளுக்குரிய செய்யுள்களைப் பாடவில்லை. நற்றிணையில் பத்துச் செய்யுள்களையும், குறுந் தொகையில் பதினொன்றையும், ஐங்குறுநூற்றில் நெய்தலை யும் அம்மூவனார் இயற்றியுளர். இவருடைய செய்யுள்களில் மூன்றைத் தவிர்ந்த ஏனையவெல்லாம் நெய்தலைப்பற்றியன் பாடப்பட்டுள்ளன. நெய்தற் றிணையின் வளங்களை விளங் கப் பாடுதலில் இவர் பேராற்றலுடையவர். ஐங்குறுநூற்று நெய்தற் செய்யுள்களுள் காணப்படும் சொற்களும், சொற்

றொடர்களும், கருத்துக்களும் அகநானூற்றில் இவர் இயற்றிய செய்யுள்களுள் காணப்படுகின்றன. இவர் பாடிய அகநானூற்று முதலாம் செய்யுளைப்பற்றி முன்னர் விரித்துக் கூறியுள்ளேன். அச் செய்யுள் ஒன்றே இவருடைய புலமையை நமக்கெடுத்துக் காட்டத்தக்கது. இவர் பாடல்களுள் தொண்டி, கொற்கை, மாந்தை, கோவலூர் முதலிய இடங்கள் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. ஐங்குறுநூற்று நெய்தற் செய்யுள்களுள் பத்துச் செய்யுட்கள் தொண்டிப் பத்தென்றே பெயரிடப்பட்டிருக்கின்றன. சேரன் பாண்டியன் என்னும் வேந்தரிருவராலும் காரி என்னும் வள்ளலாலும் இவர் ஆதரிக்கப்பட்டவரென்பது, இவருடைய பாடல்களிலிருந்து அறியப்படுகிறது. இவருடைய இயற்பெயர் 'மூவன்' என்று தெரிகிறது.

உலோச்சனார், குறுந்தொகையில் நான்கு செய்யுள்களையும், நற்றிணையில் இருபது செய்யுள்களையும், புறநானூற்றில் மூன்று செய்யுள்களையும் பாடியுள்ளார். அகப்பொருள் செய்யுள்களில் ஒன்று தவிர்ந்த ஏனையவெல்லாம் நெய்தற் றிணைக்குரியன. இவருடைய நெய்தற் றிணையில் மிகப் பயின்றவர் என்பது இவருடைய பாடல்களால் புலப்படுகிறது. இவர் பெரியன் என்னும் அரசனையும், சோழன் இராசசூயம் வேட்ட பெருநற் கிள்ளியையும் பற்றிப் பாடியுள்ளார்.

## ௯. துறைக் கோவை

**கன்னித் தமிழ்க் கவிவல்லோரே!**

அம்மூவனார் முதலிய புலவர்கள் இருபத்துநால்வரால் பாடப்பட்ட அந்நூற்றைம்பத்தைந்து அடிகளையுடைய நாற்பது செய்யுள்களும் இருபத்தாறு துறைகள்

மேலுள்ளன. இத் துறைகளை ஓரளவில் கோவைப்படுத்திப் பின்வருமாறு கூறலாம்.

1. தலைமகளைக் கண்ணுற்று நீங்குந் தலைமகன் தன் நெஞ்சிற்குச சொல்லியது.
2. (தலைமகன்) பாங்கற்குச் சொல்லியது.
3. இயற்கைப் புணர்ச்சி புணர்ந்து நீங்குந் தலைமகன் பாங்கற்கு உரைத்தது.
4. கழறிய பாங்கற்குத் தலைமகன் கழற்றெதிர் மறுத்தது.
5. தலைமகனுக்குக் குறை நேர்ந்த தோழி (அவனுக்குச்) சொல்லியது.
6. இரந்து பின்னின்ற தலைமகனுக்குக் குறை நேர்ந்த தோழி தலைமகளுக்குக் குறை நயப்பக் கூறியது.
7. தலைமகள் குறிப்பறிந்த தோழி தலைமகனுக்குக் குறை நயப்பக கூறியது.
8. தோழி பகற்குறிக்கண் தலைமகளை இடத்துய்த்து வந்து தலைமகனை எதிர்ப்பட்டு நின்று சொல்லியது.
9. பகற்குறி வந்த தலைமகற்குத் தோழி சொல்லியது.
10. பகலே சிறைப்புறமாகத் தலைமகட்குச் சொல்லுவாளாய்த் (தலைமகனுக்குத்) தோழி சொல்லியது.
11. பகற்குறி வந்த தலைமகற்குத் தோழி பகற்குறி மறுத்து இரவுக்குறி நேர்ந்தது.
12. இரவுக்குறி வந்து நீங்குந் தலைவனை எதிர்ப்பட்டுத் தோழி சொல்லியது.
13. தோழி, தலைவன் சிறைப்புறமாகத் தலைமகட்குச சொல்லுவாளாய்ச் சொல்லியது.
14. இரவுக்குறிக்கண் தலைமகன் சிறைப்புறமாகத் தோழியாற் சொல்லெடுக்கப்பட்ட தலைமகள் சொல்லியது.
15. அல்ல குறிப்பட்டு அவன் சொல்லியது.
16. தோழி இரவுக்குறி வந்த தலைமகனுக்குப் பகற்குறி நேர்ந்தது.

17. பகற்குறிக்கண் வந்து நீங்குந் தலைவனைத் தோழி வரைவு கடாயது.
18. பகற்குறி வந்து கண்ணுற்று நீங்குந் தலைமகனைத் தோழி, தலைமகளை இடத்துய்த்து வந்து, செறிப்பறிவுறீஇ வரைவு கடாயது.
19. பகற்குறி வந்த தலைமகனை, இற்செறிப் பறிவுறீஇ வரைவு கடாயது.
20. வரைவு கடாயது.
21. காம மிக்க கழிபடர் கிளவி.
22. தலைமகன் வரைவு மலிந்தமை தோழி தலைமகளுக்குச் சொல்லியது.
23. அறத்தொடு நிற்றல்.
24. தலைமகன் வரைந் தெய்திய பின்றைத் தோழி தலைமகளுக்குச் சொல்லியது.
25. தலைமகன் பொருள்வயிற் பிரியக் கிழத்தி தோழிக்குச சொல்லியது.
26. தோழி பாணனுக்குச் சொல்லியது.

இத் துறைகளை நோக்கும்பொழுது நெய்தலுக்குரிய உரிப்பொருளாகிய இரங்கலேயன்றிக் குறிஞ்சி, பாலை முதலியவற்றிற்குரிய புணர்ச்சி, பிரிதல் முதலியனவும் நெய்த னிலத்தில் நிகழு மென்பது வெளிப்படையாகக் காணப்படுகின்றது. "உரிப்பொரு ளல்லன மயங்கவும் பெறும்" எனுந் தொல்காப்பியச் சூத்திரத்தைச் சிலர் பிறழ வுணர்ந்து கொண்டு உரிப்பொருள்கள் ஒவ்வொரு நிலத்துக்கே யுரியன; மற்ற நிலங்களுக் குரியன வல்ல வெனக் கருதுகின்றனர். புணர்தல் முதலாகிய ஐவகை உரிப் பொருளும் குறிஞ்சி முதலாகிய நிலங்களுக்குச் சிறப்பாகவும் எல்லா நிலங்களுக்கும் பொதுவாகவும் உள்ளன என்பதை எண்டுெடுத்துக் காட்டிய நெய்தற் செய்யுள்களிலுள்ள துறைகளே நன்கு காட்டும். புணர்தல்

முதலியன, குறிஞ்சி முதலிய நிலங்களுக்கு எவ்வகையில் சிறப்பாக வுடையன என்பதைப் "புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல்" என்னும் தொல்காப்பியச் சூத்திரத்திற்கு நச்சினார்க்கினியர் எழுதிய உரைகொண்டு காண்க.

மேலே நிரைப்படுத்திக் காட்டிய இருபத்தாறு துறைகளும் பற்றிய கூற்றுக்களை எடுத்துக் காட்ட நேரம் இடங் கொடாதாகையால் ஒவ்வொரு வகையில் சிறந்தனவென யான் கருதும் சிலவற்றை மாத்திரம் எடுத்துக் காட்டு

## ௧௪. மெய்வாழுப்பு

தலைவியைக் கண்டு தன் நெஞ்சைப் பறிகொடுத்து வந்த தலைமகன் தன் செய்தியைப் பாங்கனுக்குச் சொல்லுகின்றான்: பாங்கனே! "நெல்லும் உப்பும் நேரே ஊரீர் கொள்ளீரோ" என்று ஒரு நங்கை கூறிக்கொண்டு சேரி தொறும் திரிந்தாள்; அவளுடைய ஒலியையுடைய சுருண்ட கூந்தல் புரண்டு கொண்டு நின்றது. மாலைகளையும் வளையல்களையும் அவள் அணிந்திருந்தாள். நான் அவளைக் கிட்டி "நின் மெய்வாழுப்பின் விலை அறியேன்?" எனக் கேட்டேன். அப் பேதைப் பெண் சிறிது தள்ளி நின்று மருண்டு பார்த்து மூரல் நகையுடன் 'என்னைத் தடுக்க நீவிர் யாரோ?' என வினவினாள். அவளிடத்தில் என் நெஞ்சைப் பறிகொடுத்து விட்டேன். ஆகையால் ஆருயிர்த் தோழ! உப்பின் விலையைக் கூறி ஊர் ஊராக விற்றுத் திரியும் உமணருடன் கூடி வாழும் வாழ்க்கைதான் எனக்கு நன்றுகொல்?

'நின் மெய்வாழுப்பின் விலை' என்பது அவள் மெய்யி லுள்ள இனிமையைக் குறிக்கும். உப்பு என்பதற்கு

இனிமை எனும் பொருளுண்டு. கூடலில் தோன்றும் இனிமையை உப்பென்றார் திருவள்ளுவர்.

> "ஊடிப் பெறுகுவங் கொல்லோ நுதல்வியர்ப்பக்
> கூடலில் தோன்றிய உப்பு."

இன்னும், எல்லா வகையான உணவுகளுக்கும் நற்சுவை யளிப்பது உப்பே. "உப்பில்லாப் பண்டம் குப்பையிலே" என்றொரு பழமொழியு முண்டு. தலைவன் பல்வகைச் செல்வங்களுடன் வாழ்ந்தானாயினும் அவனுக்கு அவை உப்பில்லாப் பண்டங்கள்போலத்தானிருந்தன. அவற்றைச் சுவையுடையனவாக்க—அவனுக்கு நல்லின்பமளிக்க—ஒருவகை உப்பு வேண்டியிருந்தது. அந்த உப்புத் தான் அவன் கண்ட குறுமகளின் மெய்யில் வாழ்ந்தது. தனக்கின்றியமையாத உப்பின்—தனக்கு இன்பமளிக்கும் உப்பின்—விலையை அவன் கேட்டான் என்றுரைத்தது மொன்று.

## ௬௫. 'பெருமை என்பது கெடுமோ?'

பரதவர் குறுங்கண் வலையைக் கொண்டு கடலின் பெருமை யழிய இனம் இனமான மீன்களைப் பிடித்து, சுற்றத்தாருடன் கூடி இரந்தோருக்கு அளவின்றி ஈந்து, எஞ்சியவற்றைக் கூறு வைத்து விற்று, மணற் குன்றில் துஞ்சும் துறையையுடைய தலைவனே! முத்துக்களை யொத்த அரும்புகளையுடைய புன்னை மரங்கள் நிறைந்த கடற்கரைச் சோலையில்வந்து உங்களுடைய அழகு செய்தது தென்ன? என்று எங்களை வினவிப் போனால் தங்களுடைய பெருமை என்பது கெடுமோ? என்று, பகற்குறிவந்த தலைமகனைத் தோழி கேட்கிறாள்.

## கக. 'என் மகளின் பொருட்டே நின்றான்'

தலைவிக்கும் தலைவனுக்குமுள்ள தொடர்பை, செவிலித்தாயர் முதலியோருக்கு அறிவுறுத்த வேண்டிய நிலைமை தோழிக்கு ஏற்பட்டுவிட்டது. அவள் செவிலித் தாய்க்கு அறத்தொடு நிற்கிறாள் :

அன்னாய்! ஒருநாள் நாங்கள் தோழிகளின் கூட்டத்துடன் சென்று கடலாடினோம். பின் கானலில் சிற்றில் இழைத்தும் சிறு சோறு ஆக்கியும் விளையாடினோம். களை ஏற்பட்டது. அக் களை தீரச் சிறிது இளைப்பாறி இருந்தோம். அப்பொழுது ஒருவன் எங்களிடம் வந்தான். வந்தவன் எங்களை நோக்கி, 'மடநல்லீரே! பகல் ஒளி மழுங்கிற்று; நானும் களைத்துவிட்டேன்; இந்தச் சிறு இலையில் நீங்கள் குவிக்கும் சோற்றைப் பெரு விருந்தென உண்டு இச் சிறு குடிலில் யானும் தங்கினால் என்ன?' என்றான். அவனைக் கண்டு அவனுரைத்தவற்றைக்கேட்ட நாங்கள் நிலத்தை நோக்கிக்கொண்டு, மறைவான பக்கத்தில் சென்று நின்று "இழிந்த கொழுமீன் உணவு; இவை உமக்கு ஏற்றன வல்ல" என்றோம். இவ்வாறு கூறிவிட்டுக் 'கடலிற் காணப்படும் நாவாய்களைக் காண்பேம்' என்று சொல்லிக்கொண்டு, சிற்றில் சிறுசோறு முதலியவற்றைக் காலால் சிதைத்து விட்டுச் சென்ற ஆயத்தோம் பலருள்ளும் என்னையே பார்த்த பார்வையுடன் 'நன்னுதால்! நான் செல்லவா?' என்று என் நெஞ்சம் அழியுமாறு என்னை அவன் வினவினான். யான் 'செல்க' என்றேன். அவன் தன் தேரின் கொடிஞ்சியைப் பற்றிக்கொண்டு நின்றான். அவன் அவ்வாறு நின்றது என் மகள் பொருட்டே என்று அன்னை அறியினும் அறிவாளாக. அன்றியும் அலர் கூறும் சேரிப் பெண்கள் கேட்பினும் கேட்க. இதனைத் தவிர

வேறொன்று மில்லை என்பதை நீ அறியுமாறு வருணனை நோக்கிச் சத்தியஞ் செய்து தருகிறேன்.

## கஎ. அலவன் விடுதூது

தலைவன் குறித்த காலத்தில் வாராது நீட்டித்தான் தலைவிக்குப் பிரிவு தாங்க முடியவில்லை; காமம் மிக்கது; தன் நிலையைத் தலைவனுக்கு அறிவிக்குமாறு ஒரு நண்டை நோக்கிக் கழிபடர் கிளவிகளை மொழிகிறாள் :

அலவனே! 'நடுச்சாமத்தில் உன்னுடைய துன்பத்தைத் களைந்தவள் இப்பொழுது தன்னுடைய துன்பத்தை நீக்க வல்லவளாயிலள்' என்ற இச்செய்தியைத் தலைவருக்குச் சொல்லவேண்டி யிருக்கிறது. இந்தக் கடற்கரைச் சோலை சென்றுரைக்காது; கழியும் கழறாது; புன்னைமரமும் போய்ப் புகலாது; உன்னையன்றி எனக்கு வேறொரு வருமில்லை. ஆகையால் நீயே சென்று தலைவரிடம் இச் செய்தியைச் சொல்லவேண்டும்.

## கஅ. கடல் சாட்சி

களவில் இன்பத்தை அநுபவித்துக்கொண்டு, தலைவியை வரைந்துகோடற்கு முயற்சி செய்யாத ஒரு தலைவனைத் தோழி வரைவு கடாவுகிறாள் :

பரதவர் கடலில் பிடித்துக்கொண்டு வந்த மீன்களைத் தங்கையர் தெருத்தோறும் கொண்டு சென்று விற்கும் துறைவனே! என்னுடைய தோழியின் வருத்தம் நீங்கவும் இவ்வூரில் கூறப்படும் அலர் ஒழியவும் தக்கதாக நீ இவளை வரைந்து அருள்புரியாது பொய்யனாகின்றாய். நீ பொய்த்தாலும், முதன் முதல் நீ தேரூர்ந்து வந்து இவளை அடைந்த பொழுது செய்த சத்தியமும் பொய்த்துவிடுமோ? கடல்

சாட்சியன்றோ? உன் சத்தியத்தை நிறைவேற்றல் உன் கடன் என்று கூறவும் வேண்டுமா?

## கசஅ. 'எம் பதிவந்து செல்'

பகற் குறிக்கண் வந்து செல்லும் தலைவனைத் தோழி 'எம் பதி வந்து செல்,' 'இரவை எம் இல்லில் கழித்துச் செல்,' 'எம் இல்லுறை நல்விருந்தாய் அமைந்து செல்,' என்று பலவாறு வேண்டுகிறாள் :

சேர்ப்பனே!

எமது ஊரோ மிகச் சிறிய ஊர். ஊரென உணரக் கூடாத அவ்வளவு சிறிய ஊர். நீர்சூழ்ந்த ஊர். சிறிய வீடுகளை உடைய ஊர். ஆனாலும், எம் பதியில் ஒருநாள் உறைந்தவர்கள் நல்லின்பத்தை அடைவார்கள். அவ்வின்பப் பெருக்கால் அடுத்த நாட்களில் தங்கள் பதிகளையே மறந்து விடுவார்கள். இப்படிப்பட்ட எம் பதிக்கு வந்து செல். பகற்பொழுதை எம்முடன் கழித்துவிட்டு இராக் காலம் வரத் தேரில் குதிரைகளைப் பூட்டுகின்றீர். இவ்வாறு செய்யாது எம் பதிக்கு வந்து செல்வீரானால் எங்களால் இயன்ற அளவு உபசரிப்போம். உமக்குச் சம்மதமா? உரைத்தருளும்.

* * *

துறைவனே!

அன்னையானவள் தலைவியை இல்லில் செறித்துவிட்டாள். அதனால் தலைவி தாங்கரும் துன்பமுற்றிருக்கிறாள். நீரும் ஒரு தொடர்பும் இல்லாதவர்கள் போலப் பிரிந்து போனால் வேறொரு காரியம் நடந்தாலும் நடக்கும், (இவள் இறந்தாலும் இறந்துவிடுவாள்) என்று நான் அஞ்சுகிறேன்.

ஆகையால் நீர் இன்று, ஒரு தொடர்பு மில்லாத தூரத்தே யிருந்து வருபவர்போல எம் சிறு குடிக்கு வாரும்; அப்படி வந்தால், இன்று பொழுது பட்டுவிட்டது; வழியும் ஆபத் தானது; சுறாமீனும் சஞ்சரிக்கின்றது; ஆகையால் இரவில் செல்ல வேண்டாம், என்று எமர் குறையிரப்பர். நீரும் அவர் குறையை ஏற்றுத் தங்கி எங்களுக்கு நல்விருந்தாக வேண்டும். பெருமானே! இதனை எங்களுக்கு நல்குமாறு வேண்டுகின்றேன்.

* * *

புலம்பனே!

பலநாளும் பகலில் ஈண்டு வந்து புன்னை நிழலில் பொழுதைக் கழித்துப் பொழுதபட நீரும் தேரூர்ந்து செல்கின்றீர். இன்று அவ்வாறு செய்ய விரும்பற்க. 'கழியிலும் குளிர் அதிகமா யிருக்கின்றது; அவர் செல்லும் வழியிலும் பாம்பும் சுறாமீனும் திரியும்; அவரோ பொழுது பட்டபின் செல்லுகின்றார்' என்று எண்ணி எண்ணி இவள் துன்புறாமல் இன்று இங்குத் தங்கினால் என்ன? மீனை விற்றுப் பெற்ற நெல்லின் சோற்றையும் தயிரையும் உமக்கு அளிப்போம். வடநாட்டார் தந்த கல்லில் உரைத்த சந்தனக் குழம்பை அணிவோம்.

## ௨0. மனைக்கிழமை

தன் தோழியருடன் தலைவி மணற்குன்றில் சிற்றில் இழைத்து விளையாடிக்கொண்டிருந்தாள். அவளைத் தலைவன் கண்டான். தலைவன் தலைவியுடன் உரையாட விரும்பு வதைப் பாகன் உணர்ந்தான். தலைவனுடைய தேரைத் தலைவியினருகே மெல்ல இயக்கினான். தலைவன் தலைவியைக் கிட்டினான். 'வெண்மணலில் உதிர்க்கப்பட்ட பொன்

போன்ற புன்னை மலரின் தாதை எடுத்து உன் மனையை அழகுபடுத்துகின்ற மாதராய்! இந்த மனைக்கிழமையை[1] என்னோடு சேர்த்தால் யாதேனும் தீது விளையுமோ?' என்று உசாவினான். அவளோ நாணத்தால் கண்களை ஒடுக்கிக்கொண்டு தலை குனிந்தாள். தலைவனுக்கு அது பெரும் துன்பத்தை விளைத்தது.

## உக 'மணற் குன்றில் மறையட்டுமா?'

தலைமகன் பன்னாள் இரக்க அவன்மேல் இரக்கங் கொண்டு, அவனுடைய குறையைத் தீர்ப்பதாகத் தோழி அவனுக்குக் கூறிவிட்டாள். தலைமகன் அடுத்த நாள் தேரில் வருகின்றான். தோழி, தலைமகளுக்கு அவன் கருத்தை முடிக்குமாறு குறிப்பால் உணர்த்துகிறாள் :

அன்புடைத் தோழி! தனது தேரைத் தூரத்தே நிறுத்திவிட்டு வந்து ஊர் யாதெனை எம்மை வினவி முதனை ளைக் கழித்துச் சென்ற துறைவன் நேற்று வந்தான். வந்து நாவற்பழங்களைத் தானு முன்றில் தன் பெடைக்கும் கொண்டு சென்று இட்ட ஓர் அலவனைக் கண்டான். அதனை எனக்குக் காட்டி 'இந்த அலவன் நல்ல விதியுடையது' என்று சொல்லி விட்டுச் சென்றான். இன்று அதோ அவனுடைய தேர் தோன்றுகிறது. நாம் எதிர்சென்று வரவேற்காதுவிட்டால் அவன் மடலேறத் துணிவான் போலிருக்கிறது. அவன் நாணம் மிகவுடையவன். தான் துணிவதையும் சொல்ல மாட்டான். ஆகையால் நாம் அவனை எதிர்கொள்ள வேண்டும் எதிர்கொள்வோமா? அல்லது நான் இம் மணற்குன்றில் மறையட்டுமா? நீயே சொல்.

---

1. உரிமையை

தெய்வத் தமிழ்ப் பெரியோர்களே!

இனி, இந் நெய்தற் செய்யுட்களால் அறியப்படும் நெய்தனிலச் செய்திகள், மரங்கள், பறவைகள், மாலைக் காட்சிகள், ஊர்கள், துறைகள். பழக்க வழக்கங்கள், தெய்வங்கள் முதலியனவற்றைப்பற்றியும் சில கூறுகின்றேன்.

## உஉ. நெய்தனில மக்களும் பிறவும்

நெய்தனிலத்துள்ள ஊர்கள் சிறு நல்லூரெனவும், பாக்கமெனவும், பட்டினமெனவும் கூறப்படும். நெய்தனிலத் தலைவன் சேர்ப்பன்; புலம்பன், துறைவன் என அழைக்கப்படுவான்; நெய்தனில மக்கள் பொதுவாக நுளையர், நுளைச்சியர், பரதர், பரத்தியர் எனப் பெயர் பெறுவர். பரதவர் திமிலில்[1] சென்று பலவகை மீன்களையும் வலையால் பிடிப்பர். வலையை யிறுக்கிக் கட்டப் பெருங் கயிறுகளை உபயோகிப்பர். வலையைக் கட்டும் கோலும் அவர்களிடமுண்டு. இராக்காலங்களில் சூழ்[2] கொண்டு சென்று மீன் வேட்டமாடுவர். பெருங் காற்றடிக்குஞ் சமயங்களிலும் அவர்கள் கடலிடை அகப்படுவதுண்டு. அவர்களுடைய வலையை அடிக்கடி சுறுமீன் கிழிப்பதுண்டு. அவர்களைக் கூட அக்கோட்டுமீன் கிழிக்கும். சுறுமீனை எறியுளியால் கொல்லுவார்கள். எறியுளிபட்ட சில சுறுமீன்கள் சிறிது நேரம் துடிதுடித்துக் கொண்டு கடலைக் கலக்கும். அவற்றினின்று பாயும் இரத்தம் கடல் நீரின் நிறத்தையும் மாற்றிவிடுமாம். சுறுமீன் கடற்கரையில் திரியும் கோவேறு கழுதை முதலியவற்றினும் பாய்ந்து அவற்றையுங் காயப்படுத்தும். அயிலை இறால் முதலிய பலவகை மீன்களைப் பரதவர் பிடிப்பார்கள். மீன் வேட்டை நன்றாய் வாய்த்தால்

1. படகில். 2 பந்தம். "பக்கமேயும் சூழ் கம்புஞ் சுருக்க வாங்கிடும்" என்பது மூக்கூடற் பள்ளு.

தம் வலையைப் பாராட்டி அயிலைமீனை யாவருக்கும் வரையாது வழங்கி வாழ்வர். மீன் வேட்டை முடிந்து வந்தவுடன் தாம் கொண்டு வந்த மீன்களில் பலவற்றை, இரப்போருக்கு அவர்தம் பிச்சைப் பாத்திரம் நிறையக் கொடுக்கும் வண்மையுமுடையர். இரவலர்க்கீந்தபின் மிகுந்தவற்றைப் பல கூறாக்கி விற்பர். எஞ்சும் மீன்களை வெயிலில் உலர்த்திக் கருவாடாக்குவர். இக் கருவாடு 'மீன்தடி' எனக் கூறப்படும். பரதச் சிறுமியர் கருவாடுகளைப் புட்கள் தூக்கிச் செல்லாவண்ணம், அவை உலருமிடங்களிலிருந்து காவல் புரிவர். பரதவர் பிடித்துவரும் மீன்களைத் தங்கையர் தெருத்தொறும் கொண்டு சென்று விற்பதும் வழக்கம்.

உப்பையும் மீனையும் விற்று நெல் முதலியன பெறுவர். உப்பின் விலையும் நெல்லின் விலையும் சமமாக இருக்கும். "நெல்லும் உப்பும் நேரேயூரீர் கொள்ளீரோ" என்று உப்பு விற்கும் மகளிர் கூறுவர். கடலில் மீன் பிடிக்கச் சென்ற பரதவர் மீன் கொண்டு வருவதற்கு முன், பரத்தியர் உப்பை விற்று நெல்லைப் பெற்றுச் சோற்றை ஆக்கிப் புளியிட்டு அட்ட அயிலை மீன்கறியுடனும், மீன்தடியுடனும், கடலில் வேட்டமாடிக் களைத்துவரும் பரதவருக்கு ஊட்டுவார்கள். மீனை விற்றுத் தயிரும் வாங்குவர்.

பரதவர் பெருங்காற்றடிக்குங் காலங்களில் வேட்டமாடச் செல்லாது முற்றத்துள்ள தாழையின் கீழ்த் தூங்குவர். கடற்கரையிலுள்ள மணற் குன்றுகளிலும் நித்திரை செய்வார்கள். பரதவர்களுடைய வீடுகள் மிகச் சிறியவை; குறுகிய இறையையுடையவை; புல் வைக்கோல் முதலிய வற்றால் வேயப்பட்டவை. "காயல் வேய்ந்த தேயா நல்லில்" என்று ஒரு புலவர் பாடியுள்ளார். சேரித் தெருக்களில் மணல் நிறைந்திருக்கும்.

பரதவர் சந்தனத்தை நன்கு பூசுவர்; நீலமலரையும் ஞாழற்பூவையுஞ் சேர்த்து மிலைவர்; விழவணி மகளிர் நெய்தல் தழையை அணிவர். வருணனை நோக்கிச் சூளுரைக் கும் வழக்கம் பரதவரிடை உண்டு. பரத்தியர் தாமறிந்த அலரை அயலாருக்குப் பரப்புவதுண்டு. இவர்கள் இதனால் "வெவ்வாய்ப் பெண்டிர்", "கொடிதறி பெண்டிர்" என்று கூறப்படுகின்றனர்.

உமணர் என்பார் உப்புவிற்றலைத் தொழிலாகவுடை யர். உழவர் கழனியில் உழுது விளைக்கும் நெல்போலாகாது உப்புத் தானாகவே விளையும். "சிறுகுடிப் பரதவர் செறுவி னுழாது செய்த வெண்கலுப்பு" என்றார் ஒரு புலவர். உப்பை ஏற்றிய பல வண்டிகள் ஒழுங்காகச் செல்லுங் காட்சி மாட்சியுடன் வருணிக்கப்பட்டிருக்கிறது. உப்பேற் றிய வண்டிகளை இழுக்கும் பகடுகளை அடித்துச் செலுத்தக் கோல்களை உமணர்கள் உபயோகிப்பர். இக் கோல்கள் அவர்கள் கையினின்றும் ஒருகாலும் பிரியா. இதனால் உமணர்கள் 'கோலுமணர்கள்' எனச் சிறப்பிக்கப்படுவர்.

## உரு. இளமகளிரும் மைந்தரும்

பரதவருடைய இளமகளிர் பல விளையாட்டுக்களை அயர்வர். பரத்தியர் தம் மகளிருடைய செறி தொடிகளைத் திருத்தியும் பாறு மயிரை நீவியும் பூச்சூடியும் அவர்களை அலங்கரித்துத் தோழியரோடு ஆடவிடுவர். இவ்வாறு விடப்பட்டவர்கள் புன்னை நிழலிலிருந்து விளையாடுவர்; நண்டின் புற்றைக் கிண்டுவர்; தாழம் மரத்தின் உயர்ந்த கொம்பிலும் தாழையிலும் கட்டிய ஊசலில் ஆடுவர்; திரை கடலிலும் ஆடுவர். கானற் சோலைகளில் உலாவுவர்; கழி களிலுள்ள பூக்களைப் பறிப்பர்; கடற் கரையில் சிற்றில்

அமைத்து விளையாடுவர்; உப்புக் குவியலில் ஏறிக் கடலி லுள்ள திமில்களை எண்ணுவர்.

மீனை யுலர்த்துமிடத் திருந்து அவற்றைக் கவர வரும் புட்களை ஓப்புவர்; மீனையும் உப்பையும் சேரிதோறும் கொடு சென்று விற்பதும் உண்டு. "நெல்லும் உப்பும் நேரே யூரீர் கொள்ளீரோ" என்று இவர்கள் கூறும் கூற்றைக் கேட்டு வீட்டு நாய்கள் குரைத்து வெருட்ட வெருளுவர்.

இளமைந்தரைப் பற்றிய செய்திகள் அதிகம் காணப் படவில்லை. இவர்கள் வலைகளை விரித்துக் கொக்குக்களைப் பிடிக்குமொரு செய்தியை மாத்திரம் புலவரொருவர் கூறியுளர்.

## உ௪. மரங்கள் முதலியன

நெய்தனிலத்தில் பல கானற் சோலைகள் உண்டு; புன்னை, தாழை, ஞாழல், நெய்தல், நாவல், செருந்தி, அடம்பு, பனை முதலிய பல மரங்கள் நெய்தல் நிலத்துக் குரியன. இவற்றுள் புன்னை விசேடமாகக் கூறப்பட்டிருக் கிறது. புன்னை கடலருகிலேயே வளரும். புன்னையரும்பு நட்சத்திரம் போன்றது. புன்னையின் கொம்புகளில் பறவை கள் தங்கி வசிக்கும். தாழையிலும் பெண்ணையிலும் பற வைக் கூடுகள் காணப்படும். அடம்பின் இலை மானின் குளம்பை ஒத்தது. அடப்பங் கொடிகளை அவற்றின்மேல் உருளும் தேர்ச் சக்கரங்கள் அறுத்துவிடும். தாழை மரங் களினடியில் நண்டுகளின் வளையுண்டு.

## உ௫. பறவைகள்

நாரை, அன்றில், அன்னம், கொக்கு, கடற்காகம், முதலிய பறவைகள் பாடல்களுள் பயின்றுள்ளன. கழியி லும், கடலிலுமுள்ள மீனைக் கொக்கு, நாரை முதலியன

உண்ணும். "மீனார் குருகினம்" எனும் அருந்தொடர் பல புலவர்கள் வாயிலிருந்து வந்திருக்கிறது. பரதவர்கள் உலர்த்தும் மீன்களைப் பறவைகள் கவர்ந்துண்ணும். நாரை அன்றில் முதலியன பனையில் தூங்கும். நெல்லரிபவர் கொட்டும் பறையைக் கேட்டு நாரை பயந்தோடும். காக்கை முதலியன முள்ளுடைக் குரம்பையில் வசிக்கும். அன்னங்கள் நெடுங்கழிகளை உழக்கி, எக்கரில் சிறகுலர்த்தும். கொக்குகள் மிக உயரப் பறக்கும்; வானந்தீண்டி மீனருந்தும். ஆந்தை, பேய் உலாவும் நடுச்சாமத்தில் அலறும்.

## உசா. அலவனும் கொக்கும் ஆமையும்

இம் மூன்றனையும்பற்றி ஒவ்வொரு சிறந்த செய்தி கூறப்பட்டிருக்கிறது. ஓர் ஆண் நண்டு காற்றால் உதிர்க்கப்பட்ட நாவற் பழங்களைத் தானுமுண்டு, தாழையடியிலுள்ள புற்றிலிருந்த பெண் நண்டுக்கும் கொண்டுபோய்க் கொடுத்தது. பரதச் சிறுவர் விரித்த வலையில் பட்ட ஆண் கொக்கின், பைங்கால் பேடை தன் கணவனுக்கு நேர்ந்ததை நினைந்து, மாலைக் காலத்தில் உணவும் கொள்ளாது, தன் பார்ப்பைத் தழுவிக்கொண்டு பெண்ணையிலிருந்து ஒலித்தது. சூல் நிறைந்த பெண் ஆமையானது மணற் குன்றில், அடப்பங் கொடிகளைச் சிதையவாங்கி மறைத்துப் புதைத்த முட்டையிலிருந்து குஞ்சு பொரிக்கும்வரை அதன் கணவன் அம் முட்டையைக் காக்கும்.

## உஎ. மாலைக் காட்சிகளும் நிகழ்ச்சிகளும்

அமிழ்தனைய அருந்தமிழ் அன்பர்களே!

இச் சென்னைப் பதியிலுள்ள கடற்கரைக்[1] காட்சியையும் நிகழ்ச்சியையும் உங்களிற் பலர் கண்டு களித்திருப்

1. Beach.

பீர்கள். இக் காட்சிகளைக் கண்டு களித்தற்குரிய நேரம் மாலைக் காலம் என்று உங்களுக்கு நான் கூறவேண்டியதில்லை. நம்முடைய புலவர்கள் பன்னூற்றாண்டுகளுக்கு முன் தாங்கள் மாலைப் பொழுதில் கண்ட கடற்கரைக் காட்சிகளையும் நிகழ்ச்சிகளையும் தங்கள் செய்யுள்களில் அமைத்து நமக்கு நல் விருந்தாக அளித்தனர். இவற்றுள் இரு புலவர்கள் கூறி யிருப்பவற்றை மாத்திரம் ஈண்டெடுத்துக் காட்டுகிறேன்.

I

மாலைக்காலமாயிற்று; கடற்கரைச் சோலையிலுள்ள கழியில் பூக்கள் கூம்பின; நீலநிறக்கடல் மிக்க ஒலியுடன் ஒலித்தது; மீனையுண்கிற பறவைகளின் தொகுதி புன்னை மரத்திலுள்ள கூட்டைச் சேர்ந்தது; வண்டுகள் நீர்ப்பூவை விட்டுக் கோட்டுப் பூவைச் சேர்வோமோ என்று தயங்கிக் கொண்டு ஆர்த்தன; தத்தம் இருப்பிடங்களை விட்டுப் பிரிந்திருந்தனவெல்லாம் தத்தம் பதிகளுக்குச் சென்றன; தாழை ஒடுங்கி அசைய, குளிர்ந்த கொண்டற்காற்று வீசிற்று.

II

செக்கர்ப்பொழுது தோன்றியது; சூரிய மண்டிலம் ஒளி மழுங்கிற்று; மலை செந்நிறங்கொண்டு விளங்கிற்று; வண்டுகள் மலர்களிலே பாய்ந்து அவற்றை ஊதின; கானற் சோலையிலுள்ள புள்ளினங்கள் ஒலித்தன; வள்ளங்கள் தொழில் மறந்து கிடந்தன; கரையில் விளையாடிய நண்டு வளையிற் போயிற்று. அன்றில் துணையுடன் மணற்குன்றில் நின்ற அகமடலுள் உறைந்தது. கழியிலுள்ள பூக்கள் தங்கள் முகங்களை மறைத்தன, (கூம்பின); மனையிலுள்ள புன்னையின் அரும்புகள் பொன்னிறம் அடைந்தன.

## ௨௫. சில பழக்க வழக்கங்கள்

இளமகளிர் உப்புக் குவியலில் ஏறிக் கடலிலுள்ள திமில்களை எண்ணல்.

உப்புவிற்று நெல் பெறுதல்.

வருணனை நோக்கிச் சூளுரைத்தல்.

வலைப்பயம் பாராட்டி அயிரை மீனை யாவருக்கும் வழங்கல்.

இரந்தோர்க்குக் கலம் நிறைய ஈதல்.

உப்புவிற்கும் மகளிர் நாய் குரைக்க வெருளுதல்.

சோற்றுடன் மீன் கருவாட்டையும் அயிலைப் புளிக் கறியையும் சேர்த்து உண்ணல்.

நெல்லரிவோர் பறை கொட்டல்.

பரதவர் சூழ்கொண்டு சென்று மீன் பிடித்தல்.

பரதவர் தங்களுடைய மக்களை இராக்காலங்களில் கூட்டிச் சென்று மீன் பிடிக்கப் பழக்குதல்.

பரத்தியர் வருணனை வணங்குதல்.

## ௨௬. ஊர்கள் முதலியன

செல்லூர்: இதைப்பற்றிய செய்திகள் இரு செய்யுள்களில் கூறப்பட்டுள்ளன. இது சோழநாட்டின் கீழ்க்கரையிலுள்ளது. இதற்குக் கிழக்கே பெருங்கடலுண்டென்பது புலப்படுகிறது. இவ்வூர், தெய்வங்களெல்லாம் பலிபெறுதற் கிடமாயிருந்தது. வேள்வித் தீ எப்பொழுதும் விளங்கிக் கொண்டிருக்கும். பரசுராமரும் தமது பெரு வேள்வியை இங்கே செய்தார். நெய்தல் செய்யுள்களுள் இருநூற்றைம்பதாம் செய்யுளைப் பாடிய பெரும்

பூதங் கொற்றனார் இவ்வூரவர். கோசிகன் கண்ணனார் எனும் புலவரும் இவ்வூரவரே.

ஊணூர், கழுமலம், புறந்தை, சாய்க்கானம் முதலிய பல இடங்களைப் பற்றியும் சில குறிப்புக்கள் காணப்படுகின்றன.

## ௩௦. குடந்தைவைத்த நிதி

கும்பகோணத்திற்குக் குடந்தை என்றும் பெயர். சோழர் இக்குடந்தையில், தாம் பல நாட்டிலிருந்தும் பெற்ற திறைப் பொருள்களைச் சேர்த்துவைத்தனர். சோழருடைய திறைச்சேரி[1] யினால் இது சிறந்து விளங்கிற்று. இத் திறைச்சேரி கடுங்காவலுடையது என்பது, "வென் வேற் கொற்றச் சோழர் குடந்தை வைத்த நாடு தரு நிதியினும் செறிய அருங்கடிப் படுக்குவன" என்பதால் அறியப்படுகிறது.

## ௩௧. துறைகள்

தொண்டி: இத்துறை புலவர் பாடும் புகழ் உடையதாய் விளங்கியது. சேரருடைய துறைகளுள் சிறந்தது.

தனுக்கோடி: இது பாண்டியர்க்குரிய பழைய துறை. ஈண்டுள்ள ஆலைப்பற்றிய செய்தியை 'இராமன் அவித்த ஆல்' என்பதுபற்றிக் கூறும்பொழுது கூறுவேன்.

கொற்கை: இது பாண்டியருடைய சிறப்புடைய துறை. பரதவர் கடலில் முழுகி வலம்புரிச் சங்குகளை எடுப்பர். வலம்புரி முத்துக்குக் கொற்கையம்பதி பேர் போனது.

1. Treasury.

## ௯௨. பருதியஞ் செல்வன்

சூரியன் பகலைக் கழித்துப் பையப்பையச்சென்று அத்தமனகிரியை அடைவான். அத்தமனகிரி, 'குடகிரி' 'குடவயின் மாமலை' எனக் கூறப்படுகிறது. சூரியன் ஊருந்தேருக்கு ஒரு சக்கரமுண்டு என்பது, "ஒருகாலூர்திப் பருதியஞ் செல்வன் குடவயின் மாமலை மறைய" எனும் அடிகளால் தெரிகிறது.

## ௯௩. பரசுராமர்

கார்த்தவீரியார்ச்சுனன், இவருடைய தந்தையாகிய சமதக்கினி முனிவரைக் கொன்றமையால், அவன் வழிவந்த இருபத்தொரு தலைமுறை மன்னர்களை, இவர் கொன்றார். இதனால் 'மன்மருங் கறுத்த மழுவாள் நெடியோன்' என்று கூறப்படுகிறார். இவர் செல்லூரில் ஒரு பெருவேள்வி செய்தார். அவ்வேள்விக் கயிறு மத்தியில் கட்டப்பட்ட அரிய காவலுடைய தூணை ஒருவரும் காணமுடியாதாம்.

## ௯௪. 'இராமன் அவித்த ஆல்'

இராமர் இலங்கைக்குப் போவதற்கு வானர வீரர்களுடன் வந்து, தனுக்கோடியில் ஓர் ஆலமரத்தின் கீழிருந்து, இலங்கையோ டொட்டிய சில விடயங்களை அவ்வானர வீரர்களுடன் ஆலோசிக்கும்பொழுது, அந்த ஆலமரத்திருந்த பறவைகள ஒலிக்க, அவ்வொலியை அவித்தனர் எனும் செய்தி பின்வரும் அடிகளால் அறியக் கிடக்கிறது.

> "வென்வேற் கவுரியர் தொன்முது கோடி
> முழங்(கு)இரும் பௌவம் இரங்கு முன்றுறை
> வெல்போர் இராமன் அருமறைக்(கு) அவித்த
> பல்வீழ் ஆலம் போல்"

## ௩௫. பெரியன்

இவன் சோழ நாட்டிலுள்ள புறந்தையில் வசித்தவன். புறந்தை பொறையாறு எனவுங் கூறப்படும். இவனைப் புலவர்கள் பாடிப் பல பரிசில்கள் பெறுவர்.

"பாடுநர்த் தொடுத்த கைவண் கோமான்
பரியுடை நற்றேர்ப் பெரியன்"

எனப் புகழப் பெற்றவன்.

## ௩௬. கோசர்

இவர்கள் சிறந்த வீரர்கள். "இரும்பிடம் படுத்த வடுவுடை முகத்தர்" எனப் புகழப்பட்டுளர். பெருஞ் செல்வமும் படைத்தவர்கள். இவர்கள் வாழும் ஊரின் கடைத்தெரு மிக்க ஆரவாரமுடையது. அகநானூற்றிலுள்ள தொண்ணூறும் செய்யுளைக் கொண்டு, இவர்கள் செல்லூரிலும் வாழ்ந்தவரெனச் சிலர் கூறியுளர். இக் கூற்றுப் பிழையுடைய தென்பதை அச் செய்யுளைக் கற்போர் நன்கறிவர்.

## ௩௭. தெய்வங்கள்

முருகக் கடவுளையும் சிவபெருமானையும் பற்றி ஒவ்வொரு செய்யுள் காணப்படுகிறது. செவ் வானத்தைத் தீண்டி மீனருந்தும் பைங்காற் கொக்கை, நக்கீரனார் நெடுவேள் மார்பின் ஆரத்துக்கு ஒப்பிட்டார்.

மதுரைக் கண்ணத்தனார் எனும் புலவர் செவ்வானமும் நீலக்கடலும் சேர்ந்த காட்சியை உமையொடு சேர்ந்திலங்கும் சிவபெருமானுக்கு ஒப்பிட்டுரைத்தார். சிவபெருமானுக்குச் செம்மேனியும் உமாதேவியாருக்கு நீலமேனியுமுண்டன்றோ?

"நீலமேனி வாலிழை பாகத் தொருவன்"

எனவும்,

"செவ்வான் அன்ன மேனி"

எனவும் வரும்,

பாரதம் பாடிய பெருந்தேவனார் கூற்றுக்கள் ஈண்டு உளங் கொளற் குரியன.

திணைமாலை நூற்றைம்பதிலுள்ள

"மாயவனுந் தம்முனும் போலே மறிகடலும்
கானலும்சேர் வெண்மணலும் காணாயோ..."

எனும் நெய்தற் செய்யுட் பகுதி ஒப்பிட்டு நோக்கத் தக்கது.

## ௩௮. உவமைகள்

மூதுரைத் தமிழ் முற்றுணர் அன்பர்களே!

தெரியாத பொருள்களை அவற்றோடொத்த தெரிந்த பொருள்களைக்கொண்டு அறிகிறோ மல்லவா? பழந் தமிழ்ப் புலவர்கள் சில பொருள்களை, செய்திகளை, உவமைகள் மூலம் செவ்விதில் தீட்டிக் காட்டியுள்ளர். பழந்தமிழ்ச் செய்யுள்களுக்கு உவமைகளே உயிர் நாடிகள்; உவமைகளே புலவர்களின் நுண்மாணுழை புலத்தை நன்கு வெளிப்படுத்துவன. சாதாரணப் பொருள் களை—நாங்கள் இகழும் பொருள்களை—அவர்கள் உவமை யாக்கிக் கூறி எங்களைத் திகைக்கவும் வியக்கவுஞ் செய் திருக்கிறார்கள். [1]தலையிலிருந்து விழும் மயிரைக்கூட உவமையாக்கிக் கூறி அதன் மூலம் ஒரு பேருண்மையை உள்ளங்கை நெல்லிக் கனிபோல காட்டும் பேராற்றல்

1. "தலையி னிழிந்த மயிரனையர் மாந்தர்
நிலையி னிழிந்தக் கடை." —திருவள்ளுவர்.

அவர்களுக்குச் சிறப்பாக வுரியது. கல்பொரு சிறு நுரையார், தேய்புரி பழுங்கயிற்றினார், காலெறி கடிகையார், குப்பைக் கோழியார், செம்புலப் பெயல் நீரார், மீனெறி தூண்டிலார், விட்ட குதிரையார், வில்லக விரலினார் முதலிய புலவர்கள் இப் பெயர்களைத் தாங்கள் கூறிய உவமைகளாலேயே பெற்றார்கள். இவ்வாறு புலவர்களுக்குப் பேரையும் பெருமையையும் அளித்திருக்கும் உவமைகளின் ஒப்புயர்வற்ற சிறப்பை யார்தான் அளவிட்டுரைக்க வல்லார்? உரைக்கும்பொழுதெல்லாம் இன்பம் பெருக்கும் இவற்றுள் சிலவற்றை இங்கே கூறுகின்றேன்:

புன்னை யரும்பு நட்சத்திரத்தை ஒத்தது.

நாரை கொம்பைப் போல் பிலிற்றும்.

கடலில் மீன் பிடிப்பவர் இருள் நீக்க வைத்திருக்கும் சுடர், யானையின் முகத்துள்ள சுட்டியில் வைத்த சுடரை ஒப்பத் தோன்றும்.

மணல், நிலாவைப்போல் இலங்கும்.

'பொன்னடர்ந் தன்ன ஒள்இணர்ச் செருந்தி'.

மணல், குன்றுபோல் தோன்றும்.

மணல் பால் போன்றது.

சேறு புகை போன்றது.

கடற்றிரையின் நுரை மூத்தோர் வெண்டலையை ஒத்தது.

எறியுளியால் எறியப்பட்ட சுறாமீன் இரத்தம் பெருகக் கடலில் செல்லுதல் வான வில்லுக்கு ஒப்பாயிருக்கும்.

அன்பர்களே!

இன்னும் பல விடயங்களை எடுத்துக்கூற யான் விரும்பினும் எனக்குக் கொடுக்கப்பட்ட நேர மிடங்கொடாதாகையால் அவற்றை விடுத்து, நாற்பது செய்தற் செய்

யுள்களுள்ளும் பல்சுவை பயக்கும சில அடிகளை மாத்திரம் எடுத்துக் கூறுகின்றேன்.

## ௩௪ பல்சுவைப் பகுதிகள்

"துறைவ!
பெருமை என்பது கெடுமோ? ஒருநாள்,
மண்ணா முத்தம் அரும்பிய புன்னைத்
தண்ணருங் கானல் வந்து, நும்
வண்ணம் எவனோ? என்றனிர் செலினே."

*     *     *     *

"யாமத்து
நின்னுறு விழுமங் களைந்தோள்
தன்னுறு விழுமம் நீந்துமோ எனவே."

*     *     *     *

"இன்று உறையுட் டாயினும் இன்பம்
ஒருநாள் உறைந்திசி னோர்க்கும் வழிநாள்
தம்பதி மறக்கும் பண்பின் எம்பதி
வந்தனை சென்மோ வளைமெய் பரப்ப."

*     *     *     *

"பொம்மற் படுதிரை கம்மென உடைதரும்."

*     *     *     *

"நடுங்(கு)அயிர் போழ்ந்த கொடுஞ்சி நெடுந்தேர்
வண்டற் பாவை சிதைய வந்துநீ
தோள்புதி(து) உண்ட ஞான்றைச்
சூளும் பொய்யோ கடலறி கரியே."

*     *     *     *

"வெருவரு கடுந்திறல் இருபெருந் தெய்வத்து
உருவுடன் இயைந்த தோற்றம் போல
அந்தி வானமொடு கடலணி கொளாஅ
வந்த மாலை."

*     *     *     *

"புனல்பாய்ந் தன்ன வாமான் திண்டேர்க்
கணைகழிந் தன்ன நோன்கால் வண்பரி

பால்கண் டன்ன ஊதை வெண்மணல்
கால்கண் டன்ன வழிபடப் போகி."

* * * *

"உதுக்காண் தோன்றும் தேரே இன்று
நாம்எதிர் கொள்ளாம் ஆயின் தான்அது
துணிகுவன் போலா நாணுமிக உடையன்."

* * * *

"நெல்லு மூப்பும் நேரே ஊரீர்
கொள்ளீரோ?"

* * * *

"குறுமகள்
நலஞ்சால் விழுப்பொருள் கலநிறை கொடுப்பினும்
பெறலருங் குரையள் ஆயின், அறந்தெரிந்து
நாம்உறை தேஎ மரூஉப்பெயர்ந்(து) அவனொடு
இருநீர்ச் சேர்ப்பின் உப்புடன் உழுதும்
பெருநீர்க் குட்டம் புணையொடு புக்கும்
படுத்தனம் பணிந்தனம் அடுத்தனம் இருப்பின்
தருகுவன் கொல்லோ!"

* * * *

"கழியுங் கானலும் காண்டொறும் பலபுலந்து
வாரார் கொல்லெனப் பருவரும்
தாரார் மார்ப! நீ தணந்த ஞான்றே."

## ௨௰. நிறைவுரை

அறிஞர்களே!

"நவில்தொறும் நூல் நயம்போல்" என்றார் தெய்வப் புலமைத் திருவள்ளுவர். நன்னயம் மிக்க பன்னூல்கள் தமிழ் மொழியில் உண்டெனினும், வள்ளுவர் கூற்றுக்கு இலக்காக மிளிரும் நூல்களுள் சிறந்தன இவ்வகநானூற்றை யுள்ளிட்ட சங்க நூல்களே என்பதை நான் உங்களுக்கு உரைக்க வேண்டியதில்லை. இந் நூல்களைப் பலமுறையும்

திருப்பித் திருப்பிப் படிப்பவர்கள் இவற்றின் அழகுகளைக் கண்டு அகமிக மகிழ்வர்; தமிழின்பத்தை அனுபவிப்பர்.

" இருந்தமிழே உன்னால் இருந்தேன் இமையோர்
விருந்தமிழ்தம் என்றாலும் வேண்டேன் "

என்றுங் கூறுவர். ஆகையால் நீங்களும் சங்க நூல்களைப் படித்துப் பேரின்பத்தை அடைவீர்களாக. நிற்க,

மேற்கணக்கு கீழ்க்கணக்குகளாகிய இந் நூல்களி லிருந்து நாம் சில புது விடயங்களை அறிகிறோம். ஆனால், இவற்றிலிருந்து நாம் அறிந்து கொள்ள வேண்டிய விடயங்கள் இன்னும் பலவுள. செந்தமிழ்க் கருவூலங்களாக மிளிரும் இவற்றைப்பற்றிப் பிறநாட்டார் நன்கறியவில்லை. இதற்கு நமது முயற்சிக் குறைவே காரணம். தமிழ் நாகரிகம் என்று ஒன்று உளது; அது மிகவும் பழமை யானது; பல்லாற்றானும் சிறந்தது; எகுபதிய, கிரேக்க, உரோம, ஆரிய நாகரிகங்களுக்கு எவ்வாற்றானும் குறைந்த தன்று. இந்த உண்மைகளை உலகம் நன்கு அறிய வேண்டு மானால், இந் நூல்கள் பிறமொழிகளில் மொழிபெயர்க்கப் பட வேண்டும் இவற்றுள் ஆழ்ந்து கிடக்கும் புதை பொரு ளெல்லாம் ஆராயப்பட வேண்டும். ஆராய்ச்சி முடிவுகளைத் தமிழ் மொழியிலன்றிப் பிற மொழிகளிலும் வெளியிட வேண்டும். [1]பாரிஸ் நகரப் பல்கலைக்கழகத் திராவிடமொழி நூல் பேராசிரியராகிய 'ஜூல்ஸ் ப்லொக்' என்பார் ஓராண் டுக்குமுன் எழுதியதை ஈண்டுக் குறிப்பிட்டு, என்னுரையை முடிக்க விரும்புகிறேன். "பழந்....தமிழ்ச் செய்யுள்களுள், விசேடமாகச் சங்கச் செய்யுள்கள் பிறமொழிகளில் மொழி பெயர்க்கப்பட வேண்டும். இவைகளுள் காண வேண்டிய

1. *Jules Bloch.* Professor of Dravidian Philology, Paris University.

பொருள்கள் இன்னும் பல இருக்கின்றன." ("in translating as many old poems as possible especially those of the *Sangam*, where there probably is still much to be discovered.")

பெரியோர்களே! இதுவரையும் என் சிற்றுரையை அமைதியுடன் கேட்டுக் கொண்டிருந்த உங்களுக்கும், எனக்கு இப் பணியளித்த கழக அமைச்சருக்கும் என் நன்றி செலுத்துகிறேன்.

## உ. முல்லை - - - -

[வித்துவான், S. ஆறுமுகமுதலியார்
எம்.ஏ., பி,ஓ,எல்., எல் டி.]

இப் பரந்த நிலவுலகின்கண் விளங்கும் எல்லா வகை உயிர்களும் இன்ப துன்பங்களிற் கிடந்துழலுங்கால், துன்பத்தை வெறுத்து இன்பத்தையே அடைய முயலுகின்றன. அவற்றுள்ளும் ஐம்பொறிகளும் முற்றுப் பெற்று, ஆறுவது அறிவாகிய பகுத்தறிவையும் பெற்று விளக்கமுறும் மக்களோ, ஐம்பொறிகளாலும் ஒருங்கே துய்த்தின்புறவல்ல இன்பத்தில் ஈடுபடுகின்றனர். அவர்கள் துன்பத்தைத் தடுத்து ஐம்புல இன்பத்தை ஒருங்கே அடைந்து, அதனைப் பல வழிகளிற் பெருக்கவும் முனைந்து நிற்றலோடு, அதிலிருந்து, என்றும் அழிதலில்லாததும், அளவில்லாததுமாகிய "அந்தமி லின்பத்து அழிவில் வீட்டையும்" அறிந்து அதனை எய்துவதற்கும் உரிமை யுடையவராய் இருக்கின்றனர். கண்டதைக் கொண்டு காணாததை அடைதல் என்னும் முறையைப் பின்பற்றி, இம்மையில் துய்க்கும் சிற்றின்பத்தின் வாயிலாகப் பேரின்பத்தை எய்துதலே பகுத்தறிவு படைத்த மக்களின் குறிக்கோளாகும்.

வாழ்க்கையில் நாம் அடைய வேண்டிய பெரும் பேறுகளை[1]த் தமிழ்ப் பெரியோர்கள் அகம் புறம் என இரு பெருங் கூறுகப் பகுப்பர். அவற்றையே நான்காகப்

1. Supremo aims of existence.

பெருக்கி அறம் பொருள் இன்பம் வீடு என்று கூறுவதும் உண்டு. இந்நான்கும் இயல்பாய் அவ் விரண்டில் அடங்குவன. இவற்றுள் இறுதிக்கண் பெய்து வைக்கப்பட்ட வீடே எல்லோரும் எய்த வேண்டிய முடிந்த குறிக்கோளாகும்.[1] "கற்றதனாலாய பயன் என்கொல்" என்று மக்களைப் பார்த்து வினவும் திருவள்ளுவர் அதற்குரிய விடையை "வாலறிவன் நற்றாள் தொழுதலே" என்று பசுமரத் தாணிபோல் கற்போர் மனதிற் படியவைக்கின்றார். ஏனைய இதை அடைவதற்குரிய வழிகளேயாம்.[2] பேரின்பமாகிய வீடு "சிந்தையும் மொழியும் செல்லா நிலைமைத்" தாதலின், நூல்கள் அதை இலக்கண வகையானன்றித் துறவறமாகிய காரண வகையால் மட்டுமே கூறுவனவாம். இவ் வுறுதிப் பொருள்களைக் கூறுவான் புகுந்த ஆசிரியர் திருவள்ளுவரும் இக் கருத்துப் பற்றியே, துறவறமாகிய காரண வகையால், அறம்பொருள் இன்பங்கள் வாயிலாக வீட்டையும், கூறாது கூறிவைத்தார் என்க. அவர் கூறும் இல்லற நெறியைப் படித்தவர், பின்பு கடவுள் வாழ்த்து, நீத்தார் பெருமை, நிலையாமை, துறவு, மெய்யுணர்தல், அவாவறுத்தல் முதலிய அதிகாரங்களை நோக்கின் இவ்வுண்மை புலப்படும். இவ் வுண்மையைக் கண்டறிந்ததனாலன்றோ புலவர்கள் பலர் திருக்குறளில் "அறனறிந்தேம், ஆன்ற பொருளறிந்தேம், இன்பின், திறனறிந்தேம், வீடு தெளிந்தேம்" என்றும், "மும்மையின் வீடவற்றின் நான்கின் விதிவழங்க வள்ளுவனார், பாடினாரின்குறள்வெண் பா" என்றும், "அறம்முதல் நான்கும் அகலிடத்தோர் எல்லாம், திறமுறத் தேர்ந்து தெளிய" என்றும், "அறம் பொருள் இன்பம் வீடென்னும் அந்

1. Ultimate object of achievement.
2. Means to the end.

நான்கின், திறந்தெரிந்து செப்பிய தேவை" என்றும், "முப்பாலில் நாற்பால மொழிந்தவர்" என்றும் ஒரே முக மாகத் திருக்குறள் நான்கு உறுதிப் பொருள்களையும் மூன்றிலடக்குவதைப் பற்றியும், அம்மூன்றும் நான்காவ தற்கு அடிப்படையாயுள்ளவை யென்றும் கூறுகின்றனர்.

இதுபற்றியே, தொல்காப்பியரும் பொருளிலக்கணம் வகுக்குங்கால் இம்முறையைச் சுருங்கச் சொல்லி விளங்க வைத்துள்ளார் என்க.

"அந்நிலை மருங்கின் அறமுதலாகிய, மும்முதற் பொருட்கு முரிய வென்ப" என்று முப்பாலினைப் பொருட் குரிய வாற்றான் வரையறை செய்யுங்கால் நான்கு உறுதிப் பொருள்களின் திறத்தை மூன்றிலடக்கினர். இதற்குரை கண்ட ஆசிரியர்களும் இக் கருத்தை வற்புறுத்துவர். "உல கிற் பொருள் மூன்றனையும் கூறுவான் அவற்றை மும்முதற் பொருள் என்றான்; அவையின்றி வீடு பெறுமாறு வேறின் மையின் வீடும் ஆண்டுக் கூறினானென்பது" என்று பேரா சிரியர் கூறுவர். "மும்முதற் பொருளெனவே அவற்றது துணைப்பொருளாகிய அறநிலையின்மையும், பொருணிலை யின்மையும், இன்பநிலையின்மையும் அடங்குமென்ப; உல கியற் பொருண் மூன்றனையும் இவையெனக் கூறி அவற்றை விடுமாறும் கூறவே வீடுங் கூறிற்றும்" என நச்சினார்க்கினி யரும் கூறுவர்.

சிறப்புப் பாயிர வுரைக்கண்ணும், "வீடு கூறாரோ வெனின் அகத்தியனாரும் தொல்காப்பியனாரும் வீடுபேற் றிற்கு நிமித்தம் கூறுதலின்றி வீட்டின் தன்மை இலக் கணத்தாற் கூறாரென் றுணர்க. அஃது, 'அந்நிலை மருங் கின் அறமுதலாகிய மும்முதற் பொருட்கு முரிய வென்ப' என்பதனால் உணர்க. இக்கருத்தானே வள்ளுவனாரும் முப்

பாலாகக் கூறி மெய்யுணர்தலான் வீடுபேற்றிற்கு நிமித்தம் கூறினார்" என்று விளக்கமாக இதனைக் கூறியுள்ளார். களவியலின் பெற்றியை விளக்கும்போது தொடக்கத்தில் தொல்காப்பியர் "இன்பமும், பொருளும், அறனும் என்றாங்கு அன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கின்" என்று கூறியதும் இதுபற்றியே யெனலாம்.

இந் நானிலை நெறியில், இன்பம் என்றும் அகம் என்றும் கூறப்படும் நெறியே மக்களையும் பிறவுயிர்களையும் இவ்வுலகத்தில் வாழ்வித்து, இல்லறத்திலும் பின் பேரின்பத்திலும் செலுத்திக்கொண்டிருக்கின்றது. அன்பும் இன்பும இவ்வுலகில் இல்லையேல் இவ்வுலகின் நிலை என்னாம்? இது, தலை இடை கடையாய மக்கள் அனைவரையும் நன்னெறிக்கண் செலுத்துவதாம். மனிதன் இல்லறத்திலே நின்று, பொருளீட்டி வாழ்வதெல்லாம், இன்பத்தைத் துய்த்து இறுதியில வீடெய்துதற்கேயாம். ஆதலின் இறையனார் களவியலுரையில் இவ்வக இன்பத்தின் பெருமையை நக்கீரனார் எடுத்துக் காட்டுகின்றனர். "காமம் நன்றுபோலும் உண்டு. சுவர்க்கத்தின்கட் சென்று போகந் துய்ப்பவென்றும் உத்தர குருவின்கட்சென்று போகந் துய்ப்பவென்றும், தெய்வத்தை வழிபடுவலென்றும் பழுத்த காமம் கண்டாயன்றே. மேன்மக்களாலும் புகழ்ப்பட்டு மறுமைக்கும் உறுதி பயக்குமாகலின் இக் காமப் பொருளும் உறுதியுடைத் தென்பது...........கடுத்தின்னாதானைக் கட்டியுட்க் கடுத்தீற்றியவாறு போலவும், கலங்கற் சின்னீர் தெருளாமையான் உண்பானை அறிவுடையானொருவன் பேய்த்தேரைக் காட்டி, உதுக்காணாய் நல்லதொரு நீர் தோன்றுவது; அந்நீர் பருகாய்; இச் சேற்று நீர் பருகி என் செய்தி, என்று நன்னீர் காட்டி ஊட்டியதுபோலவும் தான் ஒழுகா நின்றதோர் இணை விழைச்சினுள்ளே மிக்கதோர் ஒழுக்கம்

காட்டினான். அதுகேட்டு இனித் தவம்செய்து யானும் இதனைப் பெறுவன் என்று தன்மாட்டு வேட்கையால் தவஞ்செய்யும். தவஞ் செய்யா நின்றானைப் பாவீ இதன் பரத்ததோ வீடுபேற்றின்பம் என்று வீடுபேற் றின்பத்தை விரித்துரைக்கும். அதுதான் பிறப்புப் பிணி மூப்புச் சாக்காடு, அவலக் கவலைக் கையாற்றினீங்கி, மணியினது ஒளியும், மலரினது நாற்றமும், சந்தனத்துத் தட்பமும் போல, உண்ணின் றெழுதரும் ஒரு பேரின்ப வெள்ளத்த தென்பது கேட்டு அதனை விட்டு வீடு பேற்றின்கண்ணே அவாவி நின்று தவமும் ஞானமும் புரிந்து வீடு பெறு வானா மென்பது" என நக்கீரர் விரித்துரைத்தலைக்கண்டு இன்பம் வீடுபேற்றுக் குதவுவதைத் தெரியலாம். ஆசிரியர் தொல்காப்பியரும் இவ்வாறே கருதியன்றே,

"காமஞ் சான்ற கடைக்கோட் காலை,
ஏமஞ் சான்ற மக்களொடு துவன்றி
அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியுஞ்
சிறந்தது பயிற்ற லிறந்ததன் பயனே"

என்று இலக்கணம் வகுத்தனர். இவ்வுண்மையை உணர்ந்தே, இறைவன்பால் ஈடுபட்டுப் "பத்திமையாற் பணிந்து பாமாலை பாடிய" பெரியாரும் கடவுளையும் உயிரையும் தலைவன் தலைவி என்னும் முறையில் வைத்து அகத்திணை அமைப்புக்கள் எல்லாம் பொருந்தும்படி பாடல்கள் அமைத்திருக்கின்றனர். இவ்வாறில்லையெனின் கதிர்த் துறவியாகிய வாதவூரர் திருச்சிற்றம்பலக் கோவை இயற்றியருள முன்வருவரோ? அன்றி நம்மாழ்வார்தாம் திருவிருத்தத்தைத் திருவாய் மலர்ந்தருள ஒருப்படுவரோ? திருநாவுக்கரசு, திருஞான சம்பந்தர் முதலிய ஆசிரியரும் அகப்பொருட்டுறைக ளமைந்த பாமாலைகளைச் சிவபெருமான் திருவடிக்குச் சூட்ட மனமொப்புவரோ?

இப்பெற்றித்தாய இவ் வகப்பொருளும் இன்பமும், உள்ளார்ந்த காதலாலும் அன்பாலும் ஈடுபட்ட இரு காதலர்களால் துய்க்கப்படுவதன்றி வேறல்ல. சிறுமை உறவு அல்லது ஒரு மருங்குபற்றிய கேண்மையாகிய ஒரு தலைக் காமமும் (கைக்கிளை) தலைவன் தலைவியர்க்குள் அளவு கடந்து இழிவான செய்கைகளுக்குரிய ஒவ்வாக் காமமாகிய பெருந்திணையும் "பெருமை யில்லாத தலை மக்கள்" உறவாதலின் புலவர்கள் இவற்றைப் பற்றிப் பெரும்பாலும் தம் அகப்பொருள் நூல்களிற் பேசார். அன்பையே தன் னுயிர்நிலையாக் கொண்ட ஒத்த காம மாகிய ஐந்திணைப் பகுதியையே தம் நூல்களில் வகுத்த இலக்கணங்களுக்கு ஏற்பவும், உலகியலிலும் நாடக மேடையிலும் கண்டவாறும், புலனெறி வழக்கத்தில் ஓதுவார். தொல்காப்பியர்,

"இன்பமும் அறனும் பொருளு மென்றாங் கன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கிற், காமக் கூட்டம்" எனவும், இறையனார் களவியல், "அன்பின் ஐந்திணைக் களவெனப் படுவது" எனவும்,

"களவு கற்பெனக் கண்ணிய, ஈண்டையோர் உள நிகழன்பின் உணர்ச்சிமேன" எனவும் கூறியதெல்லாம் இது கருதியே. இவ்வன்பு, காதலர்பால் இயல்பாகவே பொங்கி வழியும் சிறப்புடைத் தென்பதற்குச்,

"சொற்பா லமிழ்திவள் யான்சுவை யென்னத் துணிந்திங்ஙனே,
நற்பால் வினைத்தெய்வந் தந்தின்று நானிவ ளாம்பகுதிப்
பொற்பா ரறிவார்"

என்ற கோவையார்ப் பகுதி ஒன்றே சிறந்த எடுத்துக் காட்டாகாதோ? "நல்வினைத் தெய்வம் களவின்கட் கூட்ட அமுதமும் அதன்கட் சார்ந்து நின்ற சுவையு

மென்ன, என்னெஞ்சம் இவள்கண்ணே ஒடுங்க, யானென் பதோர் தன்மை காணதொழிய இருவருள்ளமும், ஒரு வேமாமாறு கரப்ப ஒருவேமாகிய ஏகாந்தத்தின்கட் பிறந்த புணர்ச்சிப் பேரின்பவெள்ளம் (இதனை யனுபவிக் கின்ற யானே யறியினல்லது) யாவரா னறியப்படுமென்று மகிழ்ந்துரைத்தான்" என்று பேராசிரியர், இதை விளக்கி யுரைப்பதிலிருந்தும், "இருவரும் உள்ளறிந்ததன்றி மற் றிவ்வூ ரறிந்ததில்லையே" என்றபடி இது யாண்டும் உள்ளத்துணர்வானே உணரப்படுதலானும், இவ்வா றிருந்த தென்று பிறர்க்குப் புலப்படக் கூற முடியாத தொன்று மாதலானும், முத்திப் பயனாகிய பேரின்பத்தையும் தன் னகத்தே குறிப்பாய்க் கொண்டுள்ளதாதலானும் தொல் லாசிரியர் இதனை 'அகப் பொருள்' என்றனர்.

இவ் வன்பு ஒழுக்கத்தில் ஈடுபடும் தலைமக்கள் அதற் குயிர்நிலையாய அன்பால் ஒத்திருத்தலோடு,

"பிறப்பே குடிமை யாண்மை யாண்டோ
டுருவு நிறுத்த காம வாயில்
நிறையே யருளே உணர்வொடு திருவென
முறையுறக் கிளந்த ஒப்பினது வகையே"

என்ற ஒப்புமை பலவுமுடையராய் விளங்குவர். ஆனால் எல்லா மக்களும் இவ் வொப்புமைகள் பலவும் உடைய ராதல் இல்லை. அடியோரும் வினை செய்வோரும் தமக் குரியர் அன்றிப் பிற ரேவல்வழி நிற்போ ராதலின், அவ் வன்பு நிலையும் இன்ப ஒழுக்கமும் தலைமக்களின் அன் பொழுக்கங்களை ஒவ்வா வென்பதுபற்றி அவற்றை அகத் தினுள் அடக்காது அகப்புறத்தில் ஆசிரியர் ஒதுக்குவர்.

பிணி மூப்புக்க ளற்று, ஒரு தன்மையராய், உருவும் திருவும், குணமும், குலமும், பருவமும், அன்பும், கல்வி யும் ஒத்தவராய தலைமகனும் தலைமகளும் பிறர் கொடுப்ப

வும் அடுப்பவு மின்றி ஊழ்வினையால் தாமே எதிர்ப் பட்டுக் கலக்குமுறையே தலையாயதெனப் புலனெறி வழக் கத்தில் பயிலும். இக் களவுக்குப் பிறகு பலரு மறியக் கற்பு மணம் நிகழும். “கற்பெனப்படுவது களவின் வழித்தே” யாகும். களவின்றிக் கற்பு அமைவதில்லை.

“யாயும் ஞாயும் யாரா கியரோ
எந்தையு நுந்தையு மெம்முறைக் கேளிர்
யானும் நீயு மெவ்வழி யறிதும்
செம்புலப் பெயல்நீர் போல
அன்புடை நெஞ்சம் தாங்கலந் தனவே”

என்னும் குறுந்தொகை யடிகளினால் அன்புள்ளங்களினா லேயே முன்பின் அறியாத காதலர்கள் கலந்தனர் என்று அறிகின்றோம்.

“வளைபயில் கீழ்கட லின்றிட மேல்கடல் வானுகத்தின்
றுளைவழி நேர்கழி கோத்தெனத் தில்லைத்தொல் லோன்கயிலைக்
கிளைவயி னீக்கியிக் கெண்டையங் கண்ணியைக் கொண்டுதந்த
விளைவையல் லால்விய வேனய வேன்றெய்வ மிக்கனவே”

எனத் தெய்வத்தை யல்லாது நயவே னென்று தலைவியின் நலத்தையும் பாராட்டும் தலைவன் கூற்றையும் நோக்கி னால், அன்பில்லா விடத்தில் மணமில்லை யென்பதும், மணமக்கள் பண்டு நம் நாட்டு, தத்தம் வாழ்க்கைத் துணைவர்களைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளும் உரிமையும் பெருமையு முடையவரா யிருந்தனர் என்பதும், அதுவே முறையாகுமென்பதை யுணர்ந்த புலவர் பெருமக்கள் அவ்வாறே இலக்கிய இலக்கணத் துறைக ளமைத்த பான்மையும், தமிழ் நாட்டுப் பண்டை மணமுறையும் இல்லற நெறியும் பிறவும் தெற்றென விளங்கும். சுருங் கக் கூறின் மணமக்களின் மனமொத்ததே மணம் என்பது அக்காலத்து அறியப்பட்டது.

இம் முறை சிறுகச் சிறுக மறந்து வரப்பட்ட இடைக் காலத்தும் அதை நிறுவ வேண்டி, கல்வியிற்பெரிய கம்ப நும், வால்மீகர் அவ்வாறு கூறுவிடினும், இராமனும் சீதை யும் திருமணத்தின் முன்னர் ஒருவரையொருவர் கண்டு காதலித்தனர் என்று அமைத்து அவர்கள் மணத்தைத் தமிழ்த் திருமணமாக்கி யிருக்கின்றனர். இவர்களுடைய கண்ணிணைகள் ஒன்றையொன்று கௌவி,

"உண்ணவு நிலைபெறா துணர்வு மொன்றிட
அண்ணலும் நோக்கினு னவளும் நோக்கினுள்"

என்று இவர்களைத் திருமணத்தின் முன்னரே காண வைத்து,

"பருகிய நோக்கெனும் பாசத்தாற் பிணித்து
ஒருவரை யொருவர்தம் முள்ள மீர்த்தலால்
வரிசிலை யண்ணலும் வாட்கண் நங்கையும்
இருவரும் மாறிப்புக் கிதய மெய்தினர்"

என்றபொழுதே அவர்களிருவர் உள்ளமும் காதலால் கலந்த பான்மையை அழகிய ஓவியம்போல் தீட்டிக் காட்டு கின்றார்.

இனி இவ் வன்பு ஒழுக்கமும் புலவர்களாற் சிறப்பித் துப் பாடப்படுங்கால், உள்ளது உள்ளவாறு அமைக்கப் படுமோவென ஐயுறுவாரு முண்டு. தங்கள் கற்பனைகளைக் கொண்டு புணர்த்துரைகள் பலவற்றைக் கூட்டி உயர்வு நவிற்சியாக இம் முறையை அமைப்பாரோ என்ற ஐயத்தை நீக்க ஆசிரியர் தொல்காப்பியர், புலனெறி வழக்கம் உலகியல் முறையையே அடிப்படையாகக் கொண்டுள்ளது என்று இலக்கணம் வகுக்கின்றார். நக்கீரனார் இவ் வன்பு ஒழுக்கம் "இல்லது, இனியது, நல்லது என்று புலவரால் நாட்டப் பட்டதோர் ஒழுக்கம்" என்றே பலவிடத்தும் வற்புறுத்தி

னும், உலகியலை அடிப்படையாகக் கொண்டு, புனைந்துரை யும் விரவியதே புலனெறி வழக்கமாம்.

"நாடக வழக்கினும், உலகியல் வழக்கினும் பாடல் வழக்கம் என்பதனால் இது புலப்படுவதோடன்றி, புலவர் சான்ற புலனெறி இல்லனவும் கூறுபவரோ எனின், உல கத்தாருக்கு நன்மை பயத்தற்கு, நல்லோர்க்குள்ளன வற்றை ஒழிந்தோர் அறிந்தொழுகுதல் அறமெனக் கருதி, அந் நல்லோர்க்கு உள்ளனவற்றிற் சிறிது இல்லனவும் கூறுதலன்றி யாண்டும், என்ஞான்றும் இல்லன கூறார்" என்று நச்சினார்க்கினியர் சண்டுரைப்பதனாலும் விளங்கும்.

இவ் வன்பு ஒழுக்கமாகிய அகப்பொருள் ஐந்து பிரிவு களாக்கப்பட்டுப் பண்டை ஆசிரியர்களால் பாடப்பெறும். "அன்பின் ஐந்திணை" யாகிய இது, அவ் வொழுக்கத்தின் பாகுபாடுகளாகிய புணர்தல், பிரிதல், இரங்கல், இருத்தல், ஊடல்களும் அவற்றின் நிமித்தங்களுமாக, முறையே குறிஞ்சி, பாலை, நெய்தல், முல்லை, மருதம் என்பவற்றிற் பல துறைகளில் விரித்து நாடகம்போல் பேசப்படும். உலகத்துப் பொருள்களை நாம் அவை தோன்றுவதற்குரிய நிலம், காலங்கள், அந்நிலத்தில் கருக்கொண்டு தோன்றிய பலவகைப் பொருள்கள், அந்நிலத்திலும் காலத்திலும் நிகழுதற்குரிய ஒழுக்கங்கள் என மூக் கூறுகளில் அடக்கி விடலாம். இவற்றையே தமிழ் ஆசிரியர்கள் முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள், என வகுத்தோதுவர். இவற் றுள் உரிப்பொருளே ஏனையவற்றிலும் சிறந்ததாதலின் அம் முறைபற்றி ஈற்றில் வைக்கப்பட்டது.

"முதல் கரு உரிப்பொருள் என்ற மூன்றே,
நுவலுங் காலை முறைசிறந் தனவே
பாடலுட் பயின்றவை நாடுங் காலை."

இவ் வைந்திணை மருவிய அகப்பொருட்டுறைப்பாடல்களை, பல்வேறு காலத்திருந்த புலவர்கள் பலராற் பாடப்பட்டனவும், கடைச்சங்கத் திறுதிநாளில் சான்றோர் சிலரால் ஒவ்வொரு முறைபற்றித் தொகுக்கப்பட்டனவும் ஆகிய தொகை நூல்களில் நாம் காணலாகும். அப்பாடல்களுள், அகநானூற்றில் உள்ளவை அடியளவாற் சிறுமை பதின்மூன்றும் பெருமை முப்பத்து ஒன்றுமாக அடிநிமிர்ந்து ஒழுகுவன. இக் காரணம்பற்றி இந்நூல் நெடுந்தொகை யென்றும் வழங்கும். களிற்றியானை நிரை, மணிமிடை பவளம், நித்திலக்கோவையென மூவகையாயுள்ள இந்நூலில், இன்னசெய்யுள் இன்ன திணையாகுமென்று கற்பார் எளிதி னறிந்துகொள்ளற்கும், கோத்த முறை பிறழாது நின்று நிலவற்கும், பெருந்துணையாகப் பாலைத்திணை யெல்லாம் ஒற்றை எண் பெற்ற பாடல்களாகவும், குறிஞ்சித் திணையெல்லாம் இரண்டு எட்டு என்னும் எண்களைப் பெற்ற செய்யுட்களாகவும், முல்லைத்திணை யெல்லாம் நான்கு என்னும் எண் பெற்ற செய்யுட்களாகவும், மருதத்திணை யெல்லாம் ஆறு என்னும் எண்பெற்ற பாடல்களாகவும், நெய்தற்றிணை யெல்லாம் பத்து என்னும் எண் பெற்ற செய்யுட்களாகவும் வைக்கப்பட்ட மிக்க வியக்கத் தக்கதொரு முறைவைப்பு அமைந்துள்ளது. இதனால் இந்நூலுள் பாலைத்திணைக்கு இருநூறு, குறிஞ்சித் திணைக்கு எண்பது, மருதம் முல்லை நெய்தல் என்னும் மூன்று திணைகட்குந் தனித்தனி நாற்பது செய்யுட்களுள்ளன என்று உணர்ந்துகொள்ளலாம்.

இவ்வைந் திணையில் முல்லைத் திணை, இருத்தலையும் அதன் நிமித்தங்களையும் விரித்துரைப்பது. கூடல், பிரிதல், ஊடல், இரங்கல் முதலிய ஒழுக்கங்களுக்கு ஏற்ற முதற் பொருளும், கருப்பொருள்களும் அமைந்துள்ளவாறு,

இருத்தலாகிய உரிப் பொருளுக்கு ஏற்ற முதற் பொருள்களில் நிலம் காடும் காடு சார்ந்த இடமும்; பெரும்பொழுது கார்; சிறுபொழுது மாலை.

தமிழ் மக்களுடைய நாகரிக வளர்ச்சியில் இம் முல்லை நிலமும் அந் நில வாழ்க்கையும் ஒரு சிறந்த நிலையை அடைந்துள்ளதோடு, மருதநில வாழ்க்கைக்கு அது, அடிப்படையாயு மமைந்துள்ளது. வேட்டையாடி உணவுண்டு மலைகளில் திரிந்த மக்கள், ஆங்குக் கிடைக்கும் உணவுப் பொருள்கள் போதாமல் மலைகளினின்றும் காடுகளில் சென்று வாழத் தொடங்கி இருக்கலாம். ஆடு, மாடு, எருமை முதலிய காட்டு விலங்குகளைப் பழக்கி, அவற்றை வளர்த்து அவை அளிக்கும் பால், தயிர், வெண்ணெய், நெய் முதலியவற்றையும் ஆடுமாடுகளையும் விற்று, ஒய்வோர் இடையரும் சொத்துடையவராயினர் திருமணங்களும் கற்பு முறையில் நடக்கத் தொடங்கின. மாலைகளாலும் தழைகளாலும் அலங்கரித்த பந்தரின் கீழ் ஆண்களும் பெண்களுமாகிய சுற்றத்தினர் கூடி விருந்துண்ட பின், மக்களை ஈன்ற தாலி தரித்த நான்கு பெண்கள் மணமகளை முழுக்காட்டிப் புத்தாடை புனைவித்து, அணிகலன்கள் அணிவித்து மணமகனுக் களிப்பர். எண்ணிக்கையற்ற ஆடு மாடுகளை வைத்திருக்கும் குடும்பத்தவர்களின் தந்தை செல்வத்தால் அடையக்கூடிய எல்லா முதன்மைகளையும் பெற்றான். பல குடும்பங்களுக்கு அவன் தலைவனானான். கோன் (கோனார்) என்னும இடையனைக் குறிக்கும் சொல்லே அரசனையும் குறிப்பதனால், ஒரு நாட்டிற்குத் தலைவனாயிருக்கும் அரசனின் தலைமை முல்லை நிலத் தலைவனினின்றே தோன்றியிருக்கலாம் என்பர் ஆராய்ச்சியாளர். மந்தைகளை மேய்க்கும் இடையனது கோலே, அரசியலைக் குறிக்கும் பிற்றைநாட் செங்கோலாகி யிருக்

கலாம். இவ்விடையர்கள் குறிஞ்சிநில மக்கள்போல் நாடோடிகளா யில்லாமல் ஒரே இடத்தில் தங்கி, வாழ்க்கையை நடத்தினவர்க ளாதலின், நாகரிகம் வளர லாயிற்று.

சங்க இலக்கியங்களில் அகப்பொருள் தொடர்புள்ள அகநானூறு, கலித்தொகை, ஐங்குறுநூறு, நற்றிணை, குறுந்தொகை முதலிய நூல்களின் முல்லைத் திணைகளி லிருந்தும், முல்லைப்பாட்டு, நெடுநல்வாடைகளி லிருந்தும், பெருங்கதை, சிந்தாமணி, பெரிய புராணம் முதலிய பிற்கால நூல்களின் சிற்சில பகுதிகளிலிருந்தும் நாம் முல்லைநில மக்களின் (பொதுவர், இடையர், ஆயர், கோவலர்—பொதுவியர், இடைச்சியர், ஆய்ச்சியர், கோவித்தியர்) நாகரிகம், பழக்க வழக்கங்கள், நடை, உடை, எண்ணங்கள், அந்நிலத்துத் தெய்வம், உணவுப் பொருள்கள், விலங்குகள், மரங்கள், பறவைகள், பறை, தொழில், யாழ், ஊர், நீர்நிலைகள், பூக்கள் முதலியவற்றோடு அந்நிலத்துக்குரிய ஒழுக்கம் முதலிய எல்லா வாழ்க்கை நிலைகளையும் நாம் கண்டு களிக்கலாம். உள்ளதை உள்ளவாறே, கற்பனைகளும், புனைந்துரைகளும், உயர்வு நவிற்சிகளுமின்றி களங்கமற்ற நீர்நிலையானது தன் கரை மருங்கிலுள்ள செடி கொடிகள் மரங்கள் முதலியவற்றைத் திரைச்சீலையில் தீட்டிய ஓவியம் என்ன எடுத்துக் காட்டுவதுபோல், பண்டைக்காலப் புலவர்களின செய்யுள் ஓவியங்கள் காட்டா நிற்கும். இதுவே முற்காலத் தமிழ்ப் பாடல்களுக்கும் பிற்காலப் பாடல்களுக்கும் உள்ள வேற்றுமையாகும். இயற்கைப் பொருள்களின் விளக்க மட்டுமன்றி, வாழ்க்கையில் நடைபெறும் செயல்களும், மக்களியற்கை யுங்கூட இங்ஙனமே தன்மை நவிற்சியில் நுவலப்படும். இதுவே சிறந்த செய்யுளின் இயற்கையாகும். அக்காலச்

செந்தமிழ்ப் புலவர்கள் உலக இயற்கையிலும் மக்க ளியற்கையிலும் காணப்படும் அருமை பெருமை களைத் தம் மனம் போனபடி யெல்லாம் திரித்துக் கூறாமல், அவற்றின் வழியே தமதுணர்வை நிறுத்தி நின்றனர். உலகத்தில் கண் முதலான புலன்களுக்கு விளங்கித் தோன்றும் அழகினை எல்லாம் தன்னுள்ளே நெருங்கப் பொதிந்து வைத்துப் பின் னவற்றை நம் அறிவினிடத்தே புலப்படும் வண்ணம் தோற்றுவித்து மாறுதல் இல்லா இனிய ஓசையுடன் ஒற்றுமைப்பட்டு நடைபெறும் இயல்பினை உடையதுதான் பாட்டெனப்படும். சங்க நூல்களின் பாட்டுகளெல்லாம் இத் தன்மையனவே. இன்னும், இப் பாடல்களில் வரும் நிலத் தோற்றங்களும், பருவ காலங்களும், ஒழுக்கமும், ஊண் உடை பழக்கங் களும், அந் நிலங்களில் கருக்கொண்டுள்ள பொருள்களும், பிறவும் அவ்வத் திணைகளுக்கு ஏற்றவையும் பொருந்திய வையுமாயே அமைந்துள்ளன. இப் பாடல்களில் காணப் பெறும் உவமைகளும், உவமை நயங்கள் எல்லாம் பொருந்தியுள்ளன; அருமையும் பெருமையுமுடைய ஏற்ற பொருள்களை பொருத்தமான உவமைகளால் அமைக்கப் பட்டுள்ளன. இயற்கைப் பொருள்களை, ஆங்காங்குத் திரிந்து நேரிற்கண்டு, இப் புலவர்கள் பெருங் களிப்பும், பெருகிய மன வெழுச்சியும் உடையவராய் வலியும் வருத் தமுமின்றிப் பொருளுக்கு ஏற்ற சொற்கள் தாமே வந் தடையப் பாடினராதலின் இவர்கள் கண்ட உவமைகளும் இயற்கை விளக்கங்களும் தன்மை நவிற்சிச் சொற்றொடர் களில் எழிலுற அமைந்து பொருள்களை நாம் நேரிற் கண்டு களிப்பது போலவே விளக்குவது ஒரு வியப்பன்று.

முல்லைத் திணை உரிப் பொருளாகிய இருத்தலிலும் அதன் நிமித்தங்களிலும் நாம் தலைவியின் கற்புடைமை

யையே காணலாகும். வெண்மை நிறம் வாய்ந்த முல்லை மலர்கள் கற்பிற்கு ஓர் அறிகுறியாம். "முல்லை சான்ற கற்பு" என்றன்றோ இக் கற்புடைமை புலவர்களால் புகழ்ந்து பேசப்படுகிறது. இல்வாழ்க்கையில் "பகை களை தல் பற்றிப் பிரிந்து, வினை முற்றி மீள்வோன், பாசறையி னின்று ஊர் நோக்கி வரும் காலம் கார்ப் பருவமாகிய ஆவணி புரட்டாசி மாதங்களாதலின் அவை வெப்பமும், தட்பமும் மிகாது, நீரும் நிழலும் பெறுதலும், ஊர்ப் பக்கத்துக் காடும் சோலையும் காட்சி பெருக மாவும் புள்ளும் மகிழ்ந்து விளையாடுதலும், மாலையிற் பசுக்கள் மன்றிற் புகு தலும, தீங்குழல் இசைத்தலும் பிறவும் காமக்குறிப்பை மிகுவித்துப் பிரிவாற்றிக்கொண்டு தனித்திருக்கும் தகு வியது கற்பு நிலையைப் பெருகக் காட்டுதலின் இருத்தலை முல்லைக்கு" உரியதாக்கி முற்காலத்தவர் புலநெறி வழக் கஞ் செய்தனர் போலும். இத் திணை அப் பெயர் பெறுவ தற்கு அந் நிலத்தில், மிக்கு விளங்கித் தோன்றும் முல்லைப் பூக்களை காரணம் என அறிக. "முல்லை சான்ற முல்லையம் புறவு" (சிறுபாண், கஅசு) "முல்லைசூழ் முல்லை வேலி" (சிந்தாமணி-முத்தி-சசுச) என்ற வாக்குகளை நோக்குக. இனி நக்கீரரும் நச்சினார்க்கினியரும் இந்நிலங்கட்குரிய ஒழுக்கங்கள் அப் பெயர்களைப் பெற்று—(அதாவது இருத் தல் முல்லை என்று பெயர் பெற்று) பிறகு அந் நிலத்திற்கு மாயின என்று கருதுவர். "குறிஞ்சியாகிய ஒழுக்கம் நிகழ்ந்த நிலமும் குறிஞ்சி எனப்பட்டது என்னை? விளக் காகிய சுடரிருந்த இடமும் விளக்கெனப்பட்டது போல்" எனக்களவியல் உரைகாரர் கூறுவர். (சூ—கஉ) மற்றை நிலங்கட்கும் இவ்வாறே கூறிக்கொள்ளலா மன்றோ! நச்சி னார்க் கினியரும் "முல்லை முதலிய பூவாற் பெயர் பெற்றன இவ் வொழுக்கங்களெனின், அவ்வந்நிலங்கட்கு ஏனைப் பூக்

களும் உரியனவாதலின் அவற்றாற் பெயர் கூறுதலும் உரிய எனக் கடாயினார்க்கு விடையின்மை உணர்க'' என பூவினால் திணை, பெயர் பெற்றதை மறுப்பார். முல்லை குறிஞ்சி என்ற மலர்களால் காடு மலை முதலிய நிலங்கள் அப்பெயர்கள் பெற்றன எனக் கொள்வதால் படும் இழுக் கொன்றுமில்லை. அந் நில ஒழுக்கங்களும் பின் அப் பெயர் பெற்றன.

அகநானூற்றிற் கிடக்கும் நாற்பது முல்லைத் திணைப் பாடல்களிலும் நாம் ஒருவாறு மேற்கூறிய "முல்லை ஒழுக் கத்தையும்," முல்லை நிலத் தோற்றங்கள் முல்லை நிலக் கருப் பொருள்கள் முதலியவற்றையும் காணலாம். சங்க கால நடையையும் போக்கையும் ஒட்டியே, இயற்கை நிலைமாறுபா மல், தன்மை நவிற்சியாக இவ் விளக்கங்களும் உவமை களும் வருகின்றன என்று மீட்டும் விதந்தோத வேண்டிய தில்லை. இப் பாடல்களில் வரும் பல துறைகளில் மிகவும் பெருவரவினவா யுள்ளன:—"தலைமகன் பாசறைக்கண் நெஞ்சிற்குச் சொல்லியதும்," "தேர்ப்பாகற்கு வினை முற்றி மீளும் தலைமகன் கூறியதும்".—"பருவங்கண்டு அழிந்த தலைவி கூறலும்" "வினைமுற்றிய தலைமகனது வரவு கண்டு உழையர் சொல்லியதும்" இடையே விரவி வருகின்றன. இன்னும் சில துறைகளும் உள.

முல்லைத் திணைக்குப் புறப் பொருள்கள், "மாயோன் மேய காடுறை உலகமும்," காரும், மாலையுமாம். காடு களில் கார்கால மழை பொழிதலும், மேகங்கள் கருக் கொண்டு எழுந்து ஒலித்தலும், மேகம் ஒலிக்க, பெரிய கரிய மயில்கள் தோகை விரித்து, கொல்லை யுழவர் உழு வொழிந்த நிலத்தில் உள்ள குருந்த மரத்தி லிருந்து இனி கடி மகளிர்போல் கூவுதலும் அக் காலத்து அடிக்கும்

வாடைக் காற்றின் நிலையும் ஆகிய அக் காலச் செய்தி களும் இயற்கை முறை பிறழாமல் ஈண்டுப் பேசப்படு கின்றன.

காடுகவின் எதிரக் கனைபெயல் பொழிதலின் (கசுச)

காலை வானத்துக் கடுங்குரற் கொண்மூ
முழங்குதொறும் (கஎச)

.........நெடுமாத் தோகை
காமர் கலவம் பரப்பி ஏமுறக்
கொல்லை உழவர் கூழ்நிழல் ஒழித்த
வல்லிலைக் குருந்தின் வாங்குசினை யிருந்து
இளிகடி மகளிரின் விளிபடப் பயிருங
கார்......... (கஅச)

அகலிரு விசும்பகம் புதையப் பாஅய்ப்,
பகலுடன் கரந்த பல்கதிர் வானம்,
இருங்களிற் றினநிரை குளிர்ப்ப வீசிப்
பெரும்பெய லழிதுளி பொழித லானாது (உகச)

நனிசேட் பட்ட மாரி தளிசிறந்
தேர்தரு கடுநீர் தெருவுதொ றொழுகப்
பேரிசை முழக்கமொடு சிறந்து (உ நச)

ஆறு தெறிதரும் வாடை (உகூச)

மங்குல் மாமழை விண்ணதிர்பு முழங்கித்
துள்ளுப்பெயல் கழிந்த பின்றை (உகூச)

இருவிசும் பதிர முழங்கி......
இருபெயல் அழிதுளி தலைஇ வானம்
பருவஞ் செய்த (உஎச)

இங்ஙனம் மழை பொழிந்த கானிலத்தில் வெப்பமும் தட்பமும் மிகாது, நீரும் நிழலும் மிக்குள்ளன. மாவும் புள்ளும் துணையோ டின்புற்று விளையாடுவன. புல்லை மேய்ந்து கொல்லேற்றோடு புனிற்றா கன்றை நினைந்து மன்றிற் புகுதலுறும்.

இத்தகைய காலத்து இந் நிலத்தில் கருக்கொண்டனவாயுள்ள பறவைகளும், மரங்களும், செடி கொடிகளும், விலங்குகளும், இப் பாடல்களிற் பயில்வன சிலவற்றைப் பார்ப்போம். பொறி வரி இனவண்டுகள் (க௩௪) முல்லைப் பூக்களில் மொய்க்கின்றன. பெருமையுடைய கரிய மயில் விரும்பத்தக்க கலாபத்தைப் பரப்பி அழகு மிகக் கொல்லையுழவர் உழவு ஒழித்த காட்டு நிலத்துள்ள குருந்த மரத்தின் வளைந்த கிளைகளில் இருந்து கிளி கடியும் பெண்கள் விளிப்பது போல அகவும். (க௩௪) மணல் மலிந்த முற்றத்தில் மணலில் அடிச்சுவடு படியும்படி மனையுறையும் செங்காலையுடைய புறவின் சேவல் தன் பெடையோடு இறுகப் பறந்து பறந்து பயின்று மேற் செல்கின்றன (உ௫௪).

இந் நிலத்திற் பயிலும் சில பூக்கள் வருமாறு. நறிய முல்லை யரும்புகளும் தோன்றியும் உள (க௱௪). எங்குப் பார்த்தாலும் முல்லைப் பூக்களே அதிகமாகக் காணப்படுகின்றன. (க௩௪, க௯௪, க௮௪, உ௫௪, ௩௱௪) இம் மலரால் லேயே இத்திணை பெயர் பெற்றுள்ளது என்க. அந்தூ வண்டுகள் மொய்த்து, நிலவெறும்படி தொகுதியாயுள்ள முகைகள் விரிகின்ற வளைந்த காலையுடைய பிடவுகள் பூத்தல் அடிக்கடி கூறப்படுகின்றது. (க௫௪, க௮௪, க௰௪, ௩௪௪) காதலரைப் பிரிந்த செயலற்ற மகளிரின் கண்ணீர் வாரும் கண்கள்போல் கருவிளை மலர்கள் மலரும் (உ௬௪) அவரையினது பசிய பூவும் பயில்கின்றது (உ௬௪).

இனி ஆண்டுக் கருக்கொண்டு தோன்றிய பொருள்களில் விலங்குகளும் அவற்றின் இயல்புகளும், செயல்களும் விவரிக்கப்படுவதைப் பார்த்துக் களிப்போம். யானைகள் மதில் முகம் குத்தித் தொடி சிதைந்த மருப்பினவாய்க் கட்டுத் தறிகளை முறிக்கின்றன. (க௪௪). முறுக்குண்ட

கொம்புகளைக் கொண்ட இரலையும் (கருச), தெள்ளறல் பருகிய திரிந்த மருப்புடைய எழில்மிக்க கலையும், புள்ளிகள் கொண்ட அதன் பிணையும் (கஅச), தழையை வெறுத்த தெறித்த நடையுடைய மடப் பிணையும் திரிகின்றன(உ௨ச). இளம் மான்குட்டிகளைத் திருடி யுண்ண, அற்றம் பார்த்திருக்கும் குறு நரி, மழை பெய்தலினால் அஞ்சி நடுங்கி, முள்ளுகள் செறிந்த குறுந் தூறுகள் கெடும்படி ஓடும் (உஎச). சிறிய இலையையுடைய நெல்லி மரத்தின் காய் போன்ற கண்களையுடைய குறுமுயல்கள் வளைந்து கிடக்கும் வரகுக் கதிர்களை அருந்தி, கொடிகளிடை ஒடுங்கித் துயின்று பின் துயில் நீத்துத் துணையோடு போய்க் குறைந்து நீர்நிற்கும் நீர் நிலைகளில் நீருண்ணும் (உஅச). கன்றுகளோடு கறவைப் புல்லினம் காடுகளில் திரிகின்றன (௩௫ச) இவ் விலங்குகளின் செயல்களும் குணங்களும் உள்ளவாறு கூறப்படுதல் நோக்குக. ௩0ச-ம் செய்யுளில் ஒரு மான் குடும்பம் அமைதியோடு வதியும் காட்சி ஓவியம்போல் நம் மனக்கண்முன் நின்று நம் கருத்தைக் கவர்ந்து மகிழ்ச்சியை அளிக்கின்றது. அக் காட்சியைக் காண்க.

"குருஉத் தளிர் பொழிந்த பெரும்புலர் வைகறை
செய்துவிட் டன்ன செந்நில மருங்கிற்
செறித்துநிறுத் தன்ன தெள்ளறல் பருகிச்
சிறுமறி தழீஇய தெறிநடை மடப்பிணை
வலந்திரி மருப்பின் அண்ணல் இரலையொடு
அலங்குசினைக் குருந்தின் அல்குநிழல் வதிய." (௩0ச)

மரங்களிற் குருந்தும் கொன்றையும் அடிக்கடி வருகின்றன.

இனி முல்லை நிலத்து மக்களாகிய ஆயர், காட்டிடத்தே மந்தைகள் பரந்து சென்று மேய, மரநிழலிற் றங்கி

யிருந்து குழல்களில் இனிய பாக்களை இசைத்து ஊதுவர் அவர்களின் குழல்கள் மூங்கில், கொன்றைப் பழம் முதலிய வற்றாலானவையாம். இவர்களில் ஒரு பிரிவினர் புல்லின மாகிய குறும்பாடுகளை வளர்த்துத் திரிபவர். இவர்களே குறும்பர்களென்று அழைக்கப்பட்டனர். இவர்கள் ஆடு களையும் மாடுகளையும் அழைக்க வாயை மடித்துச் சீழ்க்கை அடிப்பர். அவர்களுடைய புன் குரம்பையாவின் கால்களில் ஆடுகள் தின்பதற்குத் தழைகள் கட்டப்பட்டிருக்கும்.

தயிர் புள்ளியாகத் தெறித்த வாயையுடைய மோர்ப் பானையைப், பூவாற்செய்த சும்மாட்டின்மீது தலையிலே வைத்துக் குறிஞ்சி நிலத்தே போய்க் காலையிலே மோரை விற்கும், தாளுருவி அசையும் காதும் பணைத்த தோளும் ஆற்றின் கருமணல் போன்ற கூந்தலும் நல்ல மாமை நிறமு முடைய ஆய்மகள், பறவைகள் துயிலெழுகின்ற வைகறை யில் எழுவள். எழுந்து, முடைக்காளானது வெள்ளிய முளைகளை ஒத்த குவிந்த முகிழ்களையுடைய இனிய தயி ரைப் புலியினது முழக்கத்தையுடைய மத்தைக் ஆரவாரிக் கும்படி கடைந்து, வெண்ணெயெடுத்து, பின் மோருக்கு விலையாகக் கிடைத்த நெல்லைக்கொண்டு சமைத்த உணவாற் சுற்றத்தாரை ஊட்டுவிப்பாள். இவள் நெய்யை விற்ற விலைக்கு, பாலெருமையையும், கரிய எருமை நாகினையும் வாங்குவாள்.

இடையர் செருப்பை விடாமற் கிடக்கும் காய்த்த காலினையுடையர். பசுக்களுக்கு வருத்தம் செய்யும் தடி யூன்றிய கையினர். உறிகளைச் சுமந்து செல்லுதலால் தழும்பு மிகுந்த மயிர் செறிந்த தோளினையுடையர். காட்டு மரங்களின் உயர்ந்த கிளைகளிலுள்ளவும் கொடிகளிலுள் ளவுமாகிய பல பூக்கள் கலந்து நெருங்கத் தொடுத்த மாலை யினை அணிந்தோர். இவர் பாற்சோறுண்பர். இவர்கள்

பசுத்திரளோடு காட்டிற்றங்கி, தீக்கடை கோலால் நெருப் புண்டாக்கி, தீக்கொள்ளியாற் றுளையிட்ட குழலிடத்தில் பாலை, குறிஞ்சி முதலிய பண்களைப் பாடுவர். இவர்கள் குரம்பைகள் மாரிக்காலத்து மேகத்தை ஒப்ப வரகு வைக் கோலால் வேயப்பட்டுள்ளன. இன்னோரன்ன இவர்கள் வாழ்க்கை நிலைகளைச் சங்கத் தொகை நூல்களின் முல்லைப் பாடல்களிலும், முல்லைப்பாட்டு, நெடுநல்வாடை, சிந்தா மணி, பெரும்பாணாற்றுப்படை முதலியவற்றிலும் காண லாகும். ஏறுகளைத் தழுவிய இளங்காளையருக்குத் தம் மகளிரை மணம் புரிவிக்கும் முல்லைநில மக்களின் திருமண வழக்கங்களும் மண முறைகளும் முல்லைக் கலியி லுணர்க. இந் நூலிற் காணும் சில பழக்க வழக்கங்களையும் நோக்கு வோம். கோவலர் செங்காலுறுகுமேயும் வலிய நடை யுடைய பசுக்களை முல்லை நிலத்தே பரப்பி, தாம் குறிய மலைச்சாரல்களில் பூத்த நறிய பூவைச் சூடுவர் (கச). பசுக் களை மேய்க்கும் கோவலர் (உகச)..........

"குழையமன் முசுண்டை வாலிய மலர
வரிவெண் கோடல் வாங்குகுலை வான்பூப்
பெரிய சூடிய கவர்கோற் கோவலர்
எல்லுப்பெய லுழந்த பல்லான் நிரையொடு
நீர்திகழ் கண்ணிய ஊர்வயிற்"

பெயர் தருகின்றனர். (உசச)

திண்காழுறியில் பானையைச் சுமந்து கொண்டு போகின்றவன் தண்டூன்றி நடக்கின்றனன். தினைக் கள் ளுண்டு இழுத்துக் கட்டிய வில்லராய் இவர்கள் வேட்டமும் போவதுண்டு (உஅச). மாடுகளை விளித்து வாய்மடித்துச் சீழ்க்கை அடிப்பர். (நகூச) குழல்வாய் வைத்து ஊதுவர் கோவலர் (நடுச). விரிவும் களம்பழமும், பழுப்புறு விளை தயிரும், வரகுச் சோறும், சேதாவின் வெண்ணெயும்,

பாலடிசிலும், அரிசியோடு ஈயல் பெய்தட்ட புளிச்சோறும் இவர்கள் உண்ணும் உணவுப் பொருள்களில் சில. பாலுடை யடிசிலும் பயிலுவர். (கூசா) கவைத்த கதிரையுடைய தினையும் சோளமும், எள்ளும், கொள்ளும், அவரையும், துவரையும், பயறும், உழுந்தும், பிறவும் இந் நிலமக்கள் பயிர் செய்யும் கூலங்களாம்.

தலைவன் பாசறைக்கண் தனித்திருக்குங்கால் தனிப் பட்டு, "முல்லை சான்ற கற்பு" நெறியில் நிற்கும் தலைவி யின் தோற்றம் எப்படி இருக்கும் என்று காட்டும் ஓவி யத்திலே தான் இத் திணையின் உரிப்பொருளை நாம் காண் கின்றோம். முதற்கண் குறித்தாங்கு, தலைமக்களின் இல் லற நெறியின் அடிப்படையான கற்புநெறியே இத் திணை யிலல்லவா அமைந்திருக்கின்றது! தன் மனையாளைப் பிரிந்து மாற்று வேந்தரோடு போர் செய்யச் செல்லுந் தலைவன், "கார்காலத் தொடக்கத்தில் திரும்பி வருமளவரை யில் நீ ஆற்றிக்கொண்டிரு" என்று கூறிப் பிரிய, அச் சொல்வழியே ஆற்றி இருப்பவள் கார்காலம் வரக்கண்டு, இன்னும் வந்திலனே காதலன் என ஆற்றாமை மிகுவது இயல்பே. எனினும் இங்ஙனம் ஆற்றாது வருந்தல் கண வன் கற்பித்த சொல், திறம்பியதாமாதலின் அவன் வருங் காறும் ஆற்றுதலே முறையாம் என்று உட்கொண்டு பொறுமையுடன் இருத்தலே இத் திணையின் நுட்பமாம். இங்ஙனம் தனித்த நிலையில் கற்புடைத் தலைவியர் தங்களை ஒப்பனை செய்துகொள்ளார். நீள நினைந்து நெக்குருகிக் கண்ணீர் விட்டு ஏங்கி நிற்பர். இந் நிலைகளை யெல்லாம் வரைந்து காட்டும் சில செய்யுள் ஓவியங்களை இந் நூலின் முல்லைப் பாடல்களில் காண்போம்.

வருவேன் என்று தலைவன் கூறிச்சென்ற காலம் தவறியதால், அரியேறு கண்கள் நீரைச் சிந்தாநிற்கத்

தலைவி கார்காலத்துப் பூக்கும் முல்லைமலர்களை அணிந்து ஒப்பனை செய்யாது வனப்பிழந்த கூந்தலை உடையளாய் இருக்கின்றாள் (கஅஅ) தெய்வத் தன்மை பொருந்திய கற்பொடு, "குடிக்கு விளக்காகிய" புதல்வனைப் பயந்துள்ள புகழ் மிகு சிறப்புடன் கூடிய நன்னராட்டியாவாள் தலைவி (கஅச), என்று வருவாரோ என் இன்னுயிர்த்தலைவன் எனத் தன் சில் கோல் எல்வளை ஒடுக்கிப் பல்கால் அருங்கடி வியனகர் நோக்கி, வருந்திக்கொண்டு இருப்பாள். (உஉச). கண்ணீர் சொரிந்து "கழிபடருழந்த தனால் பசலை பரந்த மேனியளாய்த்" (உகூச) தலைவியின் கூந்தல் சடையேறியுள்ளது. கண்களும் சிவந்துள்ளன (உசச); சுருங்கக் கூறின் தலைமகள், "முல்லை சான்ற கற்பின் மெல்லியற்குறுமகள்" (உஎச); கடவுட் கற்பின் மடவோள் (ௐகச) ஆவாள். இக் காட்சியோடு, நெடுநல்வாடையில் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் பாசறைக்கண் இருப்ப அவன் தலைவி வீட்டிலிருக்கும் நிலையும், முல்லைப்பாட்டுத் தலைவியின் நிலையும் ஒப்பிட்டுப் படித்தற்குரியன.

'முல்லை' என்னும் அகவொழுக்கத்தோடு வஞ்சி என்னும் புறவொழுக்கம் இயைபுடையதாம். "வஞ்சிதானே முல்லையது புறனே". ஓர் அரசன் வேற்று அரசன் நாடு கைப்பற்றும் பொருட்டுப் படை எடுத்துச் செல்லும் துறையாகிய வஞ்சியோடு கற்புநெறி காட்டும் முல்லைத் திணை பொருந்துவது யாங்ஙனமெனிற், காட்டுதும். மனைவி தன் காதலனைப் பிரிந்து மனைக்கண் தங்கி ஆற்றியிருப்பதுபோல், வேந்தர்க்குற்றுழிப் பிரிந்த அவள் கணவனும் அவளைப் பிரிந்து கார்காலத்திற் போரின்மையின் பாடிவீட்டின்கண் இருப்பான். மேலும் தலைமகள் வீடு காட்டின்கண் இருப்பதுபோல் பாடிவீடும் பகைவர் நகர்க்கு அரணான காட்டின்கண் அமைக்கப்படும். இவ்வாற்றான், முல்லையும்

வஞ்சியும் தம்முள் இயைபுடையவாயின என்க. இப் பாசறைக்கண் தலைமகன் இருப்பதும் அவன் உடல்நிலை உள்ள நிலைகளும் பாடி வீட்டின் அமைதிகளும், அரண்களும் பிறவும் முல்லைப் பாட்டு, நெடுநல்வாடைகளில் மிகமிக நுணுக்கமாய்க் கண்முன் காட்சிபோல் வரையப்பட்டிருக்கின்றன. அகநானூற்று முல்லைப் பாடல்களிலும் ஆங்காங்கு முல்லை நிலத் தலைவன் அரசற்குற்றுழிப் பிரிந்து போர்மேற் போதலும், பாசறைகளும், அவற்றுள் தலைவியை நினைந்து அவன் தயங்கி நிற்கும் தன்மையும், அவன் அந்நிலையில் தலைவியைப் பற்றி என்ன நினைத்தான் என்பதும், வினைமுற்றி மீளுங்கால் எவ்வளவு விரைவில் அவன் மனம் தேர்செல்லுமுன்பே தலைவியைச் சென்றடைந்து விடும் என்பதும் நுட்பமாய்ப் பேசப்படுகின்றன. ஒரு சில சான்றுகள் தருதும்.

பாசறைக்கண் தங்கும் தலைமகன் தன் நெஞ்சை நோக்கி,

"வேந்தனும் வெம்பகை முரணி யேந்திலை
விடுகதிர் நெடுவேல் இமைக்கும் பாசறை
யடுபுகழ் மேவலோடு கண்படை யிலனே"

என்று கூறுகின்றான். தலைவியையே நீள நினைந்து நெக்குருகுகின்றான் தலைவன். பெரும் பருவம் வந்துவிட்டதாக கருதிய தலைவி இன்னும் தலைவன் வாராமைக்கு அழிந்து தோழியைப் பார்த்து, பாசறையில் இருக்கும் தலைவர் தனித்திருக்கும் எம் நிலையறியாராயினும் தம் நிலையையாவது நன் குணர்ந்தனரா என்று பாசறையின் பெருமையையும் ஆண்டுத் தலைவன் நிலைமையையும் கூறுகின்றாள்.

"கூதிர்நின் றன்றாற் பொழுதே காதலர்
நந்நிலை யறியா ராயினும் தந்நிலை
யறிந்தனர் கொல்லோ தாமே, ஓங்குநடைக்

காய்சின யானை கங்குற் சூழ
அஞ்சுவர விறுத்த தானை
வெஞ்சின வேந்தன் பாசறை யோரே." (உசுச)

"காய்சின வேந்தன் பாசறை நீடி
நந்நோய் அறியா அறனி லாளர்" (உகூச)

என்பன பாசறைக்கண் தலைவனைப் பற்றிய தலைவி கூற்றுகள்.

தலைவி நினைப்பதைப்போலவே, தலைவனும் தலைவியைப்பற்றி நினைப்பனன்றோ? பாசறைக்கண் தலைமகனது மனநிலை என்னுங் கொல்? "என் நிலையை அவள் அறிவாளோ?" என்று நினைக்கும் ஒரு தலைவன் மனநிலையைப் பாருங்கள்.

..................."காரெதிர் காலை—
ஏந்துகோட் டியானை வேந்தன் பாசறை
வினையொடு வேறுபுறத் தல்கி நன்றும்
அறவ ரல்லர்நம் அருளா தோரென
நந்நோய் தன்வயின் அறியாள்
எந்நொந்து புலக்குங்கொல் மாஅ யோளே!" (ௗ0ச)

மதவலி மிக்க வலிமையுடைய யானைப் படையோடு இடி போல் ஒலிக்கும் வெற்றி முரசம் இயம்ப வெற்றிக்கொடியோடும் தங்கியிருப்பன். (ௗ௲ச)

இனி இயற்கை யழகில் ஈடுபட்டு, கண்கொள்ளா இயற்கைக் காட்சிகளையும் அவற்றின் நுட்பங்களையும், நோக்கங்களையும், மக்க ளியற்கையையும் கண்டு களித்த இப் பண்டைப் புலவர்கள் இவற்றை ஏற்ற இடங்களில் உவமைகளாக வைத்துப் பொருத்திக் காட்டும் சில உவமைகளையும் அவற்றின் நயங்களையும் காண்போம். வளைந்த நுகத்தில் கட்டப்பட்ட தலையை யுடைய, காற்றுப்போற் கடுகி நடக்கும் குதிரைகள் நுகம் அழுத்துந்தோறும் வெய்

துயிர்ப்பது, இழுத்து அழுத்தப்படுகின்ற கொல்லன் துருத்தியினின்றுவரும் வெம்மையுற்ற காற்றை ஒக்குமாம் (௨௨௪) கரிய சிறகையுடைய பறவைகள் பசையுற்ற பச்சை நெய் தோய்த்தன்ன உயர்ந்த பசிய மரக்கிளைகளில் உட்கார்ந்திருக்கின்றன (௨௪௪). முல்லை முகைகள் மலர்வன, வாய் திறந்து புன்முறுவல செய்தலை ஒக்கும். மழையில்லாத வானத்தின்கண் தெளிந்து விளங்கும் விண்மீன்கள் அழகு செய்வதை ஒத்து, முசுண்டை மலர்கள் வெண்மை யன வாய் மலருகின்றன (௨௬௪). முயலது குழைய திரண்ட கண் சிறிய இலைகளையுடைய நெல்லிமரத்தின் காய்களை ஒக்கும் (௨௮௪). காதலனைப் பிரிந்த தலைவி கண்கள் நீரைச் சிந்துகின்றதுபோல் கருவிளை மலர்கள் தேங்கிய நீரைச் சிந்தி மலர்கின்றனவாம் (௨௯௪). காதலரைப் பிரிந்திருக்கும் தலைவியின் நிலையை விளக்கும் முல்லைத் திணையில் இவ்வுவமை மிகவும் சிறப்புற்று விளங்குவதாகும். காற்றிலுதிர்ந்த பழம்பூக்கள் பல கலந்து கீழே கிடப்பன, சிரலின் சிறகை ஒக்கும் (௩௨௪). கடல் நீருண்டு முழங்கும் மேகம் பெய்வதற்குக் கால் வாங்குவது களிற்றுத் தடக்கையை ஒக்கும். தேரில் கட்டப்பட்ட நான்கு குதிரைகளின் நிறமும் வரிசையும் விளங்குகின்ற அன்னத்தின் சிறகு விரித்தலை ஒக்குமாம். தவளைகள் ஆடுகளத்தில் முழங்கும் பறை போல் கறங்குகின்றன. கொன்றை மலர்கள் கொத்தாகத் தொங்குவது "பொன்னவிரிழை தூக்கி" யதுபோலுள்ளது; வினைமுற்றி மீளுந் தலைவன் தன் பாகன் (௩௩௪) தன் குறிப்பறிந்து மிக விரைவாகத் தேர் செலுத்தலைக் கண்டு அத் தேர்ப்பாகனைப் பார்த்து,

"வான்வழங் கியற்கை வளிபூட் டினையோ
மானுரு வாகநின் மனம்பூட் டினையோ
வுரைமதி வாழியோ, வலவ"

என்று கேட்கிறான். இது தேர்ப்பாகனுடைய களனை இருத பன்ன அரசன் மேலாடை வீழ்ந்ததை யெடு என்று கூற

மளவில் தேர் "நாலாறு காதம் நடந்ததே" என்ற புகழேந்தியின் கூற்றை நமக்கு நினைவூட்டுகின்றது. இது போன்ற உவமைகள் பலவற்றை இன்னும் நாம் காணலாம்.

இதுபோன்றே முல்லைநில மக்களின் பன்முக நாகரிக வாழ்க்கையும், நடை உடை எண்ணங்களும், குறிக்கோள்களும், பழக்க வழக்கங்களும் பிறவும் முல்லைத் திணைப் பாடல்களினின்றும் நாம் உய்த்துணரலாம்.

ஒரு நாட்டின் பண்டைக்கால நிலைமையை யுணர்வதற்குரிய பல சான்றுகளில், செப்புப் பட்டையங்களும், கல்வெட்டுக்களும்[1] பண்டைக் கட்டடங்களும்[2] நாணயங்களும்[3] சிறப்பாக இல்லாத பழங்காலத்திலும் அக்காலத்தெழுந்த சான்றோர் நூல்களே சிறந்த சான்றாகும். பல்லவர்களின் ஆட்சித் தொடக்கத்திற்கு முன்பு கி. பி. முதலிரண்டு நூற்றாண்டுகளிலும் அதற்கு முன்பும் நிலவிய தமிழ் மக்களின் வாழ்க்கை நிலைகளை உணர்வதற்கு அக்கால நூல்களாகிய சங்க இலக்கியங்களே துணைபுரிவன, பண்டைத் தமிழ் நாகரிகம் என்னும் பெறலரும் மணிகள் இக் களஞ்சியங்களினுள் மறைந்து கிடக்கின்றன. இவற்றைச் சிறந்த அறிவாற்றல் வாய்ந்த புலவர்களைக் கொண்டு எடுப்பித்துக் கழுவிக் கவின்பெற விளங்கும்படி எல்லோருக்கும் காட்டுவிக்கின்றனர். சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார் தம் மொழியின் அருமை பெருமை யறியாது அவற்றை மறந்து நிற்கும் தமிழர்களின் தூக்க நிலையைப் போக்கி அவர்களுக்கு ஊக்கமளித்து அவர்தம் பண்டைப் பெருமையை நினைவூட்டி உள்ளக்கிளர்ச்சியைக் கொடுக்கும் இத்தொண்டு, மிகமிக இக்காலத்தில் போற்றற்பாலதொன்றும்.

1. Epigraphic. 2. Archaeological. 3. Numismatic.

# ந. மருதம்

[திரு. பூ. ஆலாலசுந்தரஞ் செட்டியார், எம். ஏ.]

## க. தோற்றுவாய்

மக்கள் அடைதற்குரிய பேறுகள் அறம், பொருள், இன்பம், வீடு என நான்காகும் என்பர் பெரியோர். இவ் வாறு பகுத்துக் கூறல் வடமொழி வழக்காகும். திருக் குறளில் காமத்துப்பாலுக்குத் தோற்றுவாய் கூறப்போந்த பரிமேலழகர், "இவர் பொருட் பாகுபாட்டினை அறம் பொருள் இன்பம் என வடமொழி வழக்குப்பற்றி யோதுத லான்" என்று கூறியுள்ளனர். மேலே கூறப்பட்ட நான் கினையும் அகம், புறம் என இரண்டனுள் அடக்குதல் தமிழ் நூன் முறையாகும். "சிறைவான் புனற்றில்லை" என்ற திருச்சிற்றம்பலக் கோவையார் 20-ஆம் செய்யுளில் வந்துள்ள "உயர்மதிற் கூடலி னாய்ந்தவொண் டீந்தமிழின் றுறை வாய் நுழைந்தனையோ" என்ற வரிக்கு உரைகூறப் போந்த பேராசிரியர் "தமிழின் துறைகளாவன ஈண்டு அகமும் புறமும்" என்று கூறியது இவண் நோக்கற்பால தாகும். இன்பம் அகப்பொருளுள் அடங்கப்பெறும். அறம் பொருள் வீடு புறப்பொருளுள் அடங்கும்.

இவ் வகப்பொருளானது களவு கற்பு என இருவகைத் தாம். களவென்பது "பிணி மூப்பிறப்புக்க ளின்றி என்ஞ் ஞான்று மொருதன்மையராகிய உருவும் திருவும் பருவமும் குலனுங் குணனும் அன்பும் முதலியவற்றால் தம்முள்

ஒப்புடையுடையராய தலைமகனுந் தலைமகளும் பிறர் கொடுப்பவும் அடுப்பவுமின்றி ஊழ்வகையால் தாமே எதிர்ப்பட்டுப் புணர்வது" என்பர் பரிமேலழகர். இவ்வொழுக்கம் களவு என்று பெயர் பெற்றதன் காரணத்தை உச்சிமேற் புலவர் கொள் நச்சினார்க்கினியர் தொல்காப்பியக் களவியலின் தோற்றுவாயில் நன்கு விளக்கிக் காட்டியுள்ளனர் "இருமுது குரவராற் கொடை யெதிர்ந்த தலைவியை அவர் கொடுப்பக் கொள்ளாது இருவருந் தாந்த உள்ளத்தோடு எதிர்ப்பட்டுப் புணர்ந்த களவாதலின் இது பிறர்க்குரிய பொருளை மறையிற் கொள்ளுங் களவன்றாயிற்று. இது வேதத்தை 'மறைநூல்' என்றாற்போல "சிறந்த அன்பாலாகிய இவ்வொழுக்கம் களவு என்று பெயர் பெற்றது" என்பர். இறையனார் அகப்பொருள் உரையாசிரியரும் இதே கருத்துடையவர் என்பது அன்னார் உரையினால் நன்கு அறியக் கிடக்கின்றது "ஒத்த அன்பினராய் இன்பத் துறையில் நின்று இல்லறம் புரிந்தாரைப் பின்னர் வீடுபேற்றின்பம் உறுமாறு வஞ்சித்துக் கொண்டு சென்று தன்னெறிக்கண் நிறீஇயினமையின் களவியல் என்னும் பெயர்த்தது. (இறையனார் அகப்பொருள், சூ. க. உரை.)

"இன்பமும் பொருளு மறனு மென்றாங்(கு)
அன்பொடு புணர்ந்த வைந்திணை மருங்கில்
காமக் கூட்டங் காணுங் காலை
மறையோர் தேஎத்து மன்ற லெட்டனுள்
துறையமை நல்யாழ்த் துணைமையோ ரியல்பே"
(தொல் - களவியல் - க)

என்ற சூத்திரத்தின்படி இக் களவானது வேதத்தில் கூறிய எண்வகை மணத்துள் காந்தருவத்தின்பாற்படும். காந்தருவத்திற்கும் களவொழுக்கத்திற்கும் ஒரு சில வேறுபாடு உண்டு. அதாவது காந்தருவர்க்குக் கற்பின்றிக் களவு அமைய

வும் பெறும். ஆனால் தமிழர் ஒழுக்கத்தில் கற்பின்றிக் களவு அமையாதென்பது உரையாசிரியர் கூற்றால் நன்கு விளங்குகின்றது.

கற்பாவது, தலைவியை அவளது பெற்றோர் வேள்விச் சடங்கோடு கொடுக்கத் தலைவன் அவளை மணந்து இல்லறத்தை நல்லறமாக நடத்துதல்.

"காமஞ் சான்ற கடைக்கோட் காலை
யேமஞ் சான்ற மக்களொடு துவன்றி
யறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியுஞ்
சிறந்தது பயிற்ற லிறந்ததன் பயனே"

(தொல். கற்பியல்: ௫௧.)

என்ற சூத்திரத்தின்படி தலைவனும் தலைவியும் இல்லறத்தைச் செவ்வனே நடத்தி மக்கட்பேறு முதலிய பேறுகளைப் பெறுவர். பின்னர்ச் சிறிது காலம் செல்ல அவ்வில்லறத்தில் வெறுப்புற்று அறம் பொருள் இன்பம் என்ற மூன்றினும் சிறந்த வீட்டின்பத்தினைப் பெறுதற்கு வழியாகிய வானப்பிரத்தம் சந்நியாசம் முதலிய இவற்றின்கண்ணே நின்று, மெய்யுணர்ந்து வீடு பெறுவர். களவியல் கற்பியல் ஆகிய இவ்விரண்டு இயல்களினுமுள்ள துறைகள், முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் முதலியவற்றை ஈண்டு விரிக்கிற் கட்டுரை பெருகுமாதலின் அவைகளை அகப்பொருள் நூல்களுள் கண்டு கொள்க.

எட்டுத் தொகையுள் நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, கலித்தொகை, அகநானூறு ஆகிய இவை ஐந்தும் அகப்பொருளைப்பற்றியன. குறுந்தொகையின் செய்யுட்கள் நான்கடிச் சிறுமையும் எட்டடிப் பெருமையும் பெற்றுள்ளன. ஒன்பதடிச் சிறுமையும் பன்னிரண்டடிப் பெருமையும் உடையது நற்றிணையாகும். ஆனால் அகநானூற்று அடிகளின் அளவு, சிறுமை பதின்மூன்று,

பெருமை மூப்பத்தொன்று. எனவே இதற்கு நெடுந்தொகை என்ற பெயரும் உண்டு. இது களிற்றியானைநிரை, மணிமிடை பவளம், நித்திலக்கோவை என மூன்று பிரிவாகப் பிரிக்கப்பட்டுள்ளது. இதில் பாலைத்திணை ஒற்றை எண் பெற்ற செய்யுளாகவும், குறிஞ்சி இரண்டு எட்டு என்ற எண்களைப் பெற்றும், முல்லை நான்கு என்ற எண் பெற்றும், மருதம் ஆறு என்ற எண் பெற்றும், நெய்தல் பத்து என்ற எண் பெற்ற செய்யுளாகவும் விளங்குகின்றன. எனவே இதில் பாலைத் திணையைப்பற்றிய பாக்கள் உ00. குறிஞ்சித் திணையைப்பற்றியவை அ0. மருதம், முல்லை, நெய்தல் இவைகள் ஒவ்வொன்றும் ச0 செய்யுட்கள் பெற்றுள்ளன. அகநானூற்றைத் தொகுத்தவர் மதுரை உப்பூரிகுடி கிழான் மகனார் உருத்திர சன்மர் என்பர். மருதத் திணைபற்றிய நாற்பது செய்யுட்களை இருபத்திரண்டு புலவர்கள் பாடியுள்ளனர். இனி அச்செய்யுட்களைச் சிறிது ஆராய்வோம்.

## உ. தலைவி கூற்று

க. தலைவன் தலைவியைப் பிரிந்து பரத்தையை நாடிச் சென்றான். ஆண்டு அவளுடன் காவிரி நதியில் வேழ வெண்புணை தழுவிப் புனலாடினான். சில நாட்கள் கழிந்தன. அவன் நெஞ்சம் மீண்டும் தலைவியை நாட, அவன் அவளிடம் சென்றனன். தலைவி தன் புதல்வனுடன் இருப்பதைக் கண்ட தலைவன் அவளைப் பாராட்டு முகத்தான் "மாசில் கற்பின் புதல்வன் தாய்" என்று ஒரு சில பொய்ம்மொழி புகன்றனன். அதைக் கேட்ட தலைவி அவனை நோக்கி "உறந்தையினிடத்துக் காவிரியாற்றில் கொறுக்கச்சியால் செய்த தெப்பத்தில் குழையணி மூதவிய இழைகளை அணிந்த பரத்தையுடன் நேற்று நீ புன

லாடி இன்று என்னிடம் வந்து யான் கற்புடையாள் என்றும், புதல்வன் தாய் என்றும் சில மொழிகளைப் புகன்று என் முதுமை எள்ளல் வேண்டா. யாம் எம் முதுமைக்குப் பொருந்துவேம். மத்தியின் கழார் நாடு போல எனது இளமை கழிந்தது. இனி உன் பொய்ம் மொழிகள் எமக்கு எவ்வாறு இனிமையைப் பயக்கும்" என்று புலந்து கூறினாள்.

"..................உறந்தை யாங்கண்
கழைநிலை பெறாஅக் காவிரி நீத்தங்
குழைமாண் ஒள்ளிழை நீவெய் யோளொடு
வேழ வெண்புணை தழீஇப் பூழியர்
கயநா டியானையின் முகனமர்ந் தாஅங்
கேந்தெழில் ஆகத்துப் பூந்தார் குழைய
நெருநல் ஆடினை புனலே யின்றுவந்
தாக வனமுலை யரும்பிய சுணங்கின்
மாசில் கற்பின் புதல்வன் தாயென
மாயப் பொய்ம்மொழி சாயினை பயிற்றியெம்
முதுமை யெள்ளல்அஃ தமைகுந் தில்ல
..................................................
பல்வேன் மத்தி கழாஅ ரன்னவெம்
இளமை சென்று தவத்தொல் லஃதே
இனிமையெவன் செய்வது பொய்ம்மொழி யெமக்கே"
(அகம்—சு)

இச் செய்யுளில் "புதல்வன்தாய் என்றது கொண்டு முதுமை எள்ளல் என்றாள்" என்பர் குறிப்புரை ஆசிரியர். தலைவி, தான் புதல்வனைப் பயந்ததால் தன் இளமை சிறிது கழிந்தது என்று கருதுகிறாள். இக் கருத்து 'பரத்தையோடு பொழுது போக்கி நெடிது துய்த்துவந்த தலைமகனோடு தலைமகள் புலந்து சொல்லியது' என்ற துறையில் வந்துள்ள ஐங்குறு நூறு எழுபதாவது செய்யுளால் வற்புறுத்தப்படுகின்றது.

"பழனப் பன்மீ னருந்த நாரை
கழனி மருதின் சென்னிச் சேக்கும்
மாநீர்ப் பொய்கை யாண ரூர
தூயர் நறியர்நின் பெண்டிர்
பேஎ யனையமியாஞ் சேய்பயந் தனமே"

(ஐங்குறுநூறு—௭௰)

௨. தலைவியின் சிறிய புதல்வன் மிக்க அழகுடன் விளங்கினான். அவன் தாமரை போன்ற அழகிய கைகளும், பவளம் போன்ற சிவந்த வாயும், நாவொடு நவிலா நகைபடு மழலைச் சொற்களும் கண்டோர் உள்ளத்தைக் கொள்ளை கொண்டன. ஒரு முறை அவன் தேரோடும் வீதியில் நடந்து சென்றான். அதுபோழ்து தலைவனுடைய பரத்தை அப் புதல்வனைக் கண்டாள். அவனது எழில் நலம் அவன் தந்தையின் எழில் நலத்தைப் போன்று விளங்கியதைக் கண்ட பரத்தை அச் சிறுவனின் அருகிற் சென்றாள். ஆண்டு ஒருவரும் இல்லை என்பதை உணர்ந்து அச் சிறுவனை நோக்கி 'என் உயிரனையாய்! வருக;' என அழைத்துத் தன் மார்பகத்தே அணைத்துக்கொண்டாள். இதனைக் கண்ட தலைவி பரத்தையைப் பார்த்துக் 'குற்ற மற்ற குறுமகளே! நீயேன் மயங்குகின்றாய்? நீயும் இச் சிறுவனுக்கு ஒரு முறையில் தாயாகின்றாய்' என்று கூற

அதனைக் கேட்ட பரத்தை தலைவியைக் கண்டு, தன் களவினை ஒத்துக்கொள்பவள்போல் தலைகுனிந்து நின்றாள். ஈண்டுத் தலைமகள் பரத்தையை அணங்கருங் கடவுள் என்கிறாள். அணங்கருங் கடவுள் என்பதற்குப் பிறரை வருத்துகின்ற எய்தற்கரிய தெய்வ மகள் என்ற குறிப்புரையாசிரியரின் கருத்து ஈண்டு நோக்கற்பாலதாகும்.

"...யாவரும் விழையும் பொலந்தொடிப் புதல்வனைத்
தேர்வழங்கு தெருவிற் றமியோற் கண்டே
கூரெயிற் றரிவை குறுகினள் யாவருங்
காணுந ரின்மையிற் செத்தனள் பேணிப்
பொலங்கலஞ் சுமந்த பூண்தாங் கிளமுலை
வருக மாளவென் னுயிரெனப் பெரிதுவந்து
கொண்டனள் நின்றோட் கண்டுநிலைச் செல்லேன்
மாசில் குறுமகள் எவன்பே துற்றனை
நீயுந் தாயை இவற்கென யான்றன்
கரைய வந்து விரைவனென் கவைஇக்
களவுடம் படுநரிற் கவிழ்ந்துநிலங் கிளையா
நாணி நின்றோள் நிலைகண் டியானும்
பேணினென் அல்லனோ மகிழ்ந வானத்
தணங்கருங் கடவு ளன்னோள்நின்
மகன்றா யாதல் புரைவதாங் கெனவே."

(அகம். கசு)

இது 'பரத்தையர் சேரியினின்றும் வந்த தலைமகன் யாரையும் அறியே னென்றாற்குத் தலைமகள் சொல்லியது' என்ற துறையின்பாற்படும். ஈண்டுத் தலைவியினது பரந்த நோக்கமும் நாகரிகப் பண்பும் போற்றற்குரியனவாகும்.

ஈ. பரத்தை மனைக்குச் செல்கின்ற பாணன் தன் மனைக்கு வந்தானாகத் தோழிக்குத் தலைமகள் சொல்லியது என்ற துறையுள்ள அகம் நசுஉ-ஆம் செய்யுள் நமக்குச் சிறிது நகைச் சுவையினை ஊட்டுவதாகும். பரத்தை மனைக் குச் செல்ல வேண்டிய பாணன் தன் மனைக்கு வந்ததும், தான் அவனுக்கு எம்முறையில் பதில் அளித்தாள் என்ப தையும் தலைவி தோழியினிடம் கூறினாள்.

"தோழி! தலைவனைப் பரத்தை மனைக்கு அழைத்துச் செல்ல வேண்டுமென்ற கருத்துடன் பாணன் நம் மனை யிடத்து வந்து தெருவில் யாழ் வாசித்துப் பின்னர் நம்

வீட்டிற்குள் வந்தான். அதைக் கண்ட எனக்கு அடக்க முடியாத உவகை தோன்றிற்று. ஆனால் யான் அதை அடக்கிக்கொண்டு அப் பாணனிடத்துச் சென்று 'இம் மனையன்று; அஃது உன் மனை' என்று கூற அவன் சாலவும் இளிவந்து எனது இகழ்ச்சியும் அவனது இளிவரவும் தோன்றும்படி வருந்தி என்னைத் தொழுது நின்றான். இது நகையாகின்ற தன்றோ" என்று தலைவி தோழியினிடம் கூறினாள். இதைப் பிறன் பேதைமை பொருளாகத் தோன்றும் நகைக்கு உதாரணமாக எடுத்துக் காட்டுவர் பேராசிரியர். (தொல். பொருள். உ௫உ). இவ்வாறு தலைவி கூறிய நாகரிகப் பண்புடன் விளங்கும் கூற்றுச் சாலவும் வியத்தற் குரியதன்றோ?

### ௩. பரத்தை கூற்று

௧. பரத்தை, தலைவனைத் தன் வசப்படுத்திக்கொண்டாள் என்று, தலைவி கோபித்துக் கூறினாள். அதைக் கேள்விப்பட்ட பரத்தை தலைமகளுக்குப் பாங்காயினார் கேட்பச் சொல்லுகின்றாள். "காண்பார்க்கு மகிழ்ச்சி விளைக்கும் வண்ணம் நாங்கள் முழவை ஒலித்துக் கூத்தாடினோம். அதைக் காணும் பொருட்டுத் தலைவன் எம் சேரிக்கு வந்தான். அதை உணர்ந்த தலைவி மிகவும் வைதாள் எனக் கேள்வியுற்றேன். 'கழலும் மாலையும் அணிந்த என் கணவனைக் கண்டீரோ' என ஆதிமந்தி வருந்திக் கூற அவள் கணவனைக் காவிரி இழுத்துச் சென்றதுபோல யானும் இத் தலைவனை என்னிடத்தே கொண்டு கையால் பற்றிக் கொண்டேன்" (அகம்: எசு)

இதனைப் "புல்லுதல் மயக்கும் புலவிக் கண்ணும்" (தொல்-பொருள்-கருக) என்ற துறைக்கு உதாரணமாகக் கூறுவர் நச்சினார்க்கினியர். "தலைவன் தனது முயக்கத்

தைத் தலைவியிடத்துந் தம்மிடத்தும் இடைவிட்டு மயக்குதலால் தலைவிக்கண் தோன்றிய புலவியிடத்தும் காமக் கிழத்தியர் புலந்து கூறுப. இதனுள் எஞ் சேரி வந்தெனக் கழறுப வென்ப அவன் பெண்டிர் என முன்னை ஞான்று புல்லுதல் மயக்குதலால் தலைவி புலந்தவாறும் அதுகண்டு காமக் கிழத்தி கொண்டு கை வலிப்பலெனப் பெருமிதம் உரைத்தவாறுங் காண்க."

உ. தலைமகள் தன்னைப் புறங்கூறினாளாகக் கேட்ட பரத்தை தலைமகள் பாங்காயினார் கேட்பக் கூறுகின்றாள்.

"நீர்த்துறையுடைய ஊரனாகிய தன் கணவனைத் தலைவி நம்மோடு புலக்கும்படி சொன்னாள் என்று பிறர் கூற யான் கேட்டேன். நான் தலைவி செய்ததுபோல் செய்யேன். ஆனால் தோழீ! நீ என்னுடன் வருவாயாக. நாம் தலைவியின் வீட்டின் பக்கத்தே சென்று பாண்டியன் போர் செய்யும்போது, யானையைப் பெறும் பாணன் கொட்டுகின்ற முழவின் கண்போல என் வயிறு வருந்துகின்றது என்று நம் கைகளை வீசித் தலைவியின் மனையிடத்தே பலர் கேட்கும்படி கூறி வருவோம்" என்றாள் பரத்தை. (அகம்-கoசு)

ங. தலைமகட்குப் பாங்காயினார் கேட்பச் சேரிப் பரத்தை கூறிய கூற்று கற்போர் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் தகையதாக விளங்குகின்றது. "வாளைமீனை உண்ணவேண்டுமென்ற விருப்பங் கொண்ட நாரை அம்மீன் தன்னை அறியாவகை மையப் மையச் செல்லும். அதுபோல தலைவன் வேறு பரத்தையரிடம் செல்லாமற் படி என்னிடம் வருதற்கு யான் மையப் மையச் செல்கின்றேன். அவன் யான் வசிக்கும் சேரிக்கு வரட்டும். அவ்வாறு அவன் வந்தால் அவனுடைய பெண்டிர் காணும்படி

அவனுடைய தாரும் தானையும் பற்றி, ஆரியர் பிடியானை யால் களிற்றைப் பிடிப்பதுபோல் என் அழகினால் யான் அவனை என் வயமாக்குவேன்; அவ்வாறு செய்யேனாயின் இரந்தோர்க்கு ஈயாதவரது செல்வம் போல் எனது அழகானது பரந்து கெடுவதாக"

"நீளிரும் பொய்கை யிரைவேட் டெழுந்த
வாளை வெண்போத் துணீஇய நாரைதன்
அடியறி வுறுதல் அஞ்சிப் பைப்பயக்
கடியிலம் புகூஉங் கள்வன் போலச்
சாஅய் ஒதுங்குந் துறைகேழ் ஊரனொடு
ஆவ தாக இனிநாண் உண்டோ
வருகதில் அம்மவெஞ் சேரி சேர
அரிவேய் உண்க ணவன்பெண்டிர் காணத்
தாருந் தானையும் பற்றி ஆரியர்
பிடிபயின் றுதரூஉம் பெருங்களிறு போலத்
தோள்கந் தாகக் கூந்தலிற் பிணித்தவன்
மார்புகடி கொள்ளே னாயின் ஆர்வுற்று
இரந்தோர்க் கீயா திட்டியோன் பொருள்போற்
பரந்து வெளிப்படா தாகி
வருந்துக தில்லயாய் ஓம்பிய நலனே."

(அகம்: ௨௭௬)

மேலே காட்டிய செய்யுளினின்று சேரிப் பரத்தைக்குத் தலைவன்மாட்டுள்ள அன்பு எத்தகையது என்பது தெற்றெனத் தெரிகின்றது. இதுபோலவே "காதற்பரத்தை தலைமகற்குச் சொல்லியது" என்ற துறை அமைந்த அகம்-௩௯௬ ஆம் செய்யுளில்,

"தொடுத்தேன் மகிழ்ந செல்லல்..........
......வஞ்சி யன்னஎன் நலந்தந்து சென்மே"

என்று காதற்பரத்தை கூறும் கூற்றுரை கற்போர் உள்ளத்தைப் பிணிக்கும் தகையதாகும். காதற்பரத்தைக்குத்

தலைவன் மீதுள்ள அன்பு ஐங்குறுநூறு—௬0 ஆம் செய்யுளாலும் நன்கு விளங்குகின்றது. "உலகியல் பற்றித் தலைவன் தன் மனைக்கண் ஒருஞான்று போனதே கொண்டு, அவ்வழிப் பிரியாது உறைகின்றானென்று அயற் பரத்தையர் பலரும் கூறினா ரென்பது கேட்ட காதற்பரத்தை, அவர் பாங்காயினார் கேட்பத் தன் தோழிக்குச் சொல்லியது" என்ற துறையில் அமைந்துள்ளது அச் செய்யுள்.

"அம்ம வாழி தோழி மகிழ்நன்
ஒண்டொடி முன்கை யாமழப் பிரிந்துதன்
பெண்டி ரூரிறை கொண்டன னென்ப
கெண்டை பாய்தர வவிழ்ந்த
வண்டுபிணி யாம்பல் நாடுகிழ வோனே."

(ஐங்குறுநூறு—௬0)

## ௯. தோழியின் பேச்சுத் திறமை

"உறுக ணோம்ப றன்னியல் பாகலி
னுரிய தாகுந் தோழிகண் ணுரனே."

(தொல்—பொருளியல், ௬௫)

தலைவிக்கு வந்த வருத்தத்தைப் பரிகரித்தல் தோழியின் கடனாதலின் அவள்மாட்டு அறிவுளதாகக் கூறல் உரித்தாகும் என்பர் நச்சினார்க்கினியர். இதனால் தோழி அறிவுடையளாகப் பேசுதல் இயல்பாகும் என்பது பெறப்படுகின்றது. தலைவன் தலைவியைப் பிரிந்து பரத்தையினிடத்துச் சென்றான். சில நாட்கள் கழிந்தபின் மீண்டும் தலைவியை நாடி வந்தான். அவ்வாறு 'வாயில் வேண்டிச் சென்ற தலைமகற்குத் தோழி வாயில் மறுத்தாள்' என்ற துறைக்கு உதாரணமாக உள்ளது அகம் ௬௬-ஆம் செய்யுள். தோழி தலைவனை நோக்கிக் கூறுகின்றாள்: "சிவந்த

கண்களையுடைய எருமை தனக்கு இருப்பிடமாகிய கொட்டிலைச் சேறாக்கிக் கொண்டு தளையையும் அறுத்துக் கொண்டு பழனத்திற்குக் காவலாக விளங்கிய வேலியைத் தன் கொம்பால் ஒடித்து, மீன்கள் பயந்து ஓடத் தாமரை சூழ்ந்த வள்ளையை மயக்கி, மலர்தனின்றி விளங்கும் தாமரையை அருந்தும் ஊர! யாம் புலப்போம். அதை நீ கேட்க உனக்கு என்ன உரிமை உளது? நீ பரத்தையை மணந்தாய் என்று ஒருசில பெண்கள் எம் மனையிடத்து வந்து கூறினர். அவர்கள் கூறியதைக் கேட்டோமே ஒழிய நீ பரத்தையை மணந்தாய் என்று நாங்கள் சொல்ல மாட்டோம். அள்ளூரைப் போன்ற சிறந்த வளையலை யணிந்த என் தலைவி மெலியினும் மெலிக. பெரும! நீ பரத்தையிடம் செல்லுவதை விலக்குவார் யாவர்?"

"சேற்றுநிலை முனைஇய செங்கட் காரான்
ஊர்மடி கங்குலின் நோன்தளை பரிந்து
கூர்முள் வேலி கோட்டின் நீக்கி
நீர்முதிர் பழனத்து மீனுடன் இரிய
அந்தூம்பு வள்ளை மயக்கித் தாமரை
வண்டூது பனிமலர் ஆரும் ஊர
யாரை யோநிற் புலக்கேம் வாருற்(று)
உறையிறந் தொளிருந் தாழிருங் கூந்தல்
பிறரும் ஒருத்தியை நம்மனைத் தந்து
வதுவை அயர்ந்தனை யென்ப அஃதியாம்
கூறேம் வாழிய எந்தை செறுநர்
களிறுடை அருஞ்சமம் ததைய நூறும்
ஒளிறுவாள் தானைக் கொற்றச் செழியன்
பிண்ட நெல்லின் அள்ளூ ரன்னஎன்
ஒண்டொடி நெகிழினும் நெகிழ்க
சென்றீ பெருமநின் தகைக்குநர் யாரே"

(அகம்: சௌ)

இச் செய்யுளில் முதல் ஆறு வரிகளுக்குக் குறிப்புரை ஆசிரியர் கூறும் உள்ளுறை யுவமம் நோக்கற்பாலதாகும். "எருமை தனக்கு நிலையென்று புகுந்த கொட்டிலை நீரா லுஞ் சாணகத்தாலுந் தானே சேறுக்கிக்கொண்டு தளை யையு மறுத்துக்கொண்டு, பழனத்துக்குக் காவலாகிய வேலியையுங் கோட்டா லெடுத்து மீன்க ளிரியத் தாமரை யைச் சூழ்ந்த வள்ளையை மயக்கி, மலர்ச்சியின்றி வண் டொடு குவிந்த தாமரையை ஆர்ந்தாற்போல, நீயே ஆதரித்துக் கொள்ளப்பட்ட இவளை நீதானே வேறு படுத்தி, நாணமாகிய தளையையும் அறுத்துக்கொண்டு, பரத்தையர்க்குக் காவலாகிய விறலியையும் பாணனுகிய கோட்டாலே நீக்கி, அப் பரத்தைய ருடனுறையும் தோழி மார் இரிய அப் பரத்தையருடைய தாய்மாரையும் மயக்கி அகமலர்ந் துன்னை எதிரேற்றுக்கொள்ளாத மகளிரை நுகர்வான் ஒருத்தனல்லையோ என்றவாறு." இனி, "சென்றீ பெருமநிற் றகைக்குநர் யாரோ" என்று தோழி கூறியதின் காரணத்தை ஆராய்வாம். தலைவிக்கு வந்த வருத்தத்தைப் போக்குதல் தோழியின் கடனுகும் என் பது முன்னரே கூறப்பட்டது. தலைவன் தலைவியைவிட்டுப் பிரியான் என்றதைத் தோழி நன்குணர்ந்தவளாதலின், "பெரும! நீ பரத்தையிடம் செல்வதை விலக்குவார் யாவர்?" என்றுள். இக் கருத்து மேலே தலைப்பில் காட்டிய (தொல். பொருள: சரு) சூத்திரத்திற்கு நச்சினார்க்கினியர் கூறும் உரையால் விளங்குகின்றது. "உறுகண் கத்தாற் பொருட் டாகத் தலைவி வருந்தினும் நீ செல்லென்றுள் தலைவன் செல்லாமை அறிதலின்." (பொருளியல், சரு. உரை) தோழி தலைவனிடத்து "யாம் புலப்பேம், அதைக் கேட்க உனக்கு என்ன உரிமை உண்டு?" என்று முதலில் கடுமையாகக் கூறி, அதன் பிறகு "நீ பரத்தையை மணங்

தாய் என்று சில பெண்கள் எம் மனைக்கு வந்து கூறினர். ஆனால் நீ பரத்தையை மணந்து கொண்டாய் என்பதை நாங்கள் சொல்லோம். எம் தலைவி மெலியினும் மெலிக; பெரும! நீ பரத்தையிடம் செல்வதை விலக்குவார் யார்?” என்று பின்னர் நயமாகக் கூறும் திறன் சாலவும் பாராட்டற்குரியதன்றோ!

## ரு. திருமண முறை

“வாயில் மறுத்த தோழிக்குத் தலைமகன் சொல்லியது. தலைமகளைக் கூடி இன்புற்றிருந்த தலைமகன் பண்டு நிகழ்ந்தது சொற்று இன்புற்றிருந்ததாம் போலும்” என்ற துறையினையுடைய (அகம்: அசு-ஆம்) செய்யுளில் பண்டைக் காலத் தமிழரது திருமண முறை நன்கு சித்திரித்துக் காட்டப்பட்டுள்ளது. தீய கிரகங்கள் இடம் விட்டு நீங்கச் சந்திரன் உரோகிணியோடு சேரும் குற்றமற்ற சிறந்த நாள் வந்தது. அதுபோழ்து குளிர்ந்த திருமணப் பந்தலிடத்துப் புது மணல் பரப்பப்பட்டது. ஆண்டுப் பூமாலைகள் தொங்க விடப்பட்டிருந்தன. இரவு கழிந்தது; காலைநேரம் வந்தது. மணப்பந்தரிடத்து விளக்குகள் அணியணியாக எரிந்து கொண்டிருந்தன. திருமணத்திற்கு வந்திருந்த முதிய நல்ல பெண்கள் தம் தலையில் நீர்க்குடமேந்தி முன்னும் பின்னுமாக அவைகளை மாறி மாறிக் கொடுக்கப் புதல்வரைப் பெற்ற மகளிர் நால்வர் கூடி “இவள் கற்பு நெறியினின்றும் வழுவாமல், தன்னைக் கொண்ட கணவன் விரும்பத்தக்க மனைவியாகுக” என வாழ்த்தி மணமகளை நீராட்டினர். இவ்வாறு மணமகளை நீராட்டுதல் வதுவை நன்மணம் என வழங்கப்பட்டது. பின்னர்ப் பெற்றோர் “நீ பெரிய இற்கிழத்தியாகுக” என மணமகளை வாழ்த்தி அவளை மணமகற்குத் தந்தனர். ‘திருமண வீட்டில் மிக்க சோற்றுக்

குவியல் கிடந்தது' என்று கூறப்பட்டுள்ளதால் உற்றோரும் மற்றோரும் உண்டு களித்தனர் என்பது பெறப்படுகின்றது.

இச் செய்யுளில் வாயில் மறுத்த தோழிக்குத் தலைமகன் தனக்கும் தலைவிக்கும் நடந்த திருமணத்தைப் பற்றிக் கூறி, பின்னர்த் தலைவி தன்னுடன் எவ்வாறு நடந்து கொண்டாள் என்பதையும் கூறினான்.

திருமணத்தன்றே தலைவனும் தலைவியும் ஒன்று கூடினர். அதுபோழ்து தலைவன் தலைவியின் முகத்தின் மறைப்பை நீக்க, உடனே தலைவி அஞ்சி நெட்டுயிர்த்தாள். பின்னர்த் தலைவன் இனிய நகையுடன், தலைவியின் மனக் கருத்து யாதென வினவ, மானின் மருண்ட பார்வையினையுடைய தலைவி அகமகிழ்ந்து நாணத்தால் முகத்தைத் தாழ்த்தித் தலைவணங்கி நின்றாள். எனவே தலைவி, தன்னிடத்து அன்புடையவள் என்றும், அதனால் தோழி வாயில் மறுத்தல் தகாதென்றும் தலைவன் கூறினான் என்பது போதரும்.

“மதைஇய நோக்கு—செருக்கின நோக்கு; என்றது எக்காலத்தும் அவள் என்னளவில் அன்புடையளா யிருப்பள்; அவளறிவதொன்றுண்டோ? உன்னுடைய கொடுமையல்லவோ இந்த மாறுதலெனத் தோழியொடு புலந்து கூறினான்” என்று குறிப்புரையாசிரியர் கருத்து ஈண்டுக் கருதத் தக்கதாகும்.

“கற்பெனப் படுவது கரணமொடு புணரக்
கொளற்குரி மரபிற் கிழவன் கிழத்தியைக்
கொடைக்குரி மரபினோர் கொடுப்பக்கொள் வதுவே”
(தொல். கற்பியல், சூ. க)

என்ற சூத்திரத்திற்கு மேலே கூறிய அகம் அ௬-ஆம் செய்யுளை உதாரணமாகக் கூறினர் நச்சினார்க்கினியர். இச் செய்

யுளை உதாரணமாகக் காட்டி ஒரு சில குறிப்பும் அவர் கூறி யுள்ளனர். அதாவது, "இதனுள் வதுவைக்கு ஏற்ற காரணங்கள் நிகழ்ந்தவாறும், தமர் கொடுத்தவாறுங் காண்க. சுற்றஞ் சூழ்ந்து நிற்றலானும் தமர் அறிய மணவறைச் சேரலானும் களவாற் சுருங்கின்ற நாண் சிறந்தமையைப் பின்னர்த் தலைவன் வினவ, அவள் மறுமொழி கொடாது நின்றமையைத் தலைவன் தோழிக்குக் கூறிய வாறு காண்க. இதனானே இது களவின்வழி நிகழ்ந்த கற்பாயிற்று" என்றனர்.

(தொல். கற்பியல், சூ. ௧ உரை)

பண்டைத் தமிழ் மக்களது திருமண முறை மருதத் திணைக்குரிய அகம் ௧௩௬-ஆம் செய்யுளிலும் குறிப்பிடப் பட்டுள்ளது. அங்கும் அது தலைமகன் கூற்றாகவே விளங்குகின்றது. மேலே காட்டப்பட்டுள்ள பண்டைத் தமிழர் திருமண முறைக்கும் தற்காலம் தமிழ் மக்களிடத்தே நடை பெறும் திருமண முறைக்கும் உள்ள வேறுபாட்டினை அறிஞர் ஆராய்ந்து அறிந்துகொள்வாராக.

## ௬. மருதத்திணையில் வந்துள்ள உவமைகள்

1. மத்தியின் கழார் நாடுபோல் தலைவியின் இளமை கழிந்தது—செ. ௬.

2. புதல்வனுடைய கைகள் தாமரையின் அகவிதழினை ஒத்தன—௧௬.

3. முள்ளியின் பக்கலில் தோன்றி வாழும் பூ அதனை விட்டுப் பிறர்க்குப் பயன்பட்டவாறு போலத் தலைவியுடன் பிறந்த நெஞ்சு அவளை விட்டுத் தலைவன்பாற் சென்றது (உள்ளுறையுவமம்)—௨௬.

4. தலைவன் பரத்தையை மணந்தான் என்ற அலர்—பாண்டியன் நெடுஞ்செழியன் தலையாலங்கானத்து வெற்றி பெற்றபோது அவனுடைய வெற்றி வீரர்கள் ஆர்த்த ஆர்ப்பினும் பெரிதாயிற்று—௩௬.

5. போரில் பகைவரது யானையை வெட்டும் வாள் தானை யுடைய அள்ளூர்போன்ற ஒள்ளிய வளையணிந்த தலைவி—௪௬.

6. பாணன் தலைவி வீட்டிற் சென்று கலங்குதல்—புனிற்றுப் பாய்ந்ததை ஒத்தது—௫௬.

7. பரத்தையைத் தலைவி வைததின் ஆரவாரம்—அஃ்தையின் அவைக்களத்தே புகும் பொருநர் பறையறைதலினும் மிக்கதாய் விளங்கியது—௭௬.

8. ஆதிமந்தியின் கணவனைக் காவிரி இழுத்துச் சென்றதுபோல் பரத்தை, தலைவனைத் தன்னிடத்தே வைத்துக் கொள்ளல்—௮௬.

9. வயலில் மீன்கொத்திப் பறவை மீன்களை அருந்துதற்குக் குதித்தல்—எரியில் பொரி தெளித்தாற் போன்று விளங்குதல்—௧0௬.

10. பாணன் கொட்டும் தண்ணுமையின் கண் போன்று பரத்தையின் வயிறு வருந்துதல்—௧0௬.

11. புன்கு, பொரிபோல் மலர்தல்—௧௧௬.

12. நண்டின் கண்கள் வேம்பின் அரும்புகளைப் போன்று விளங்கின—௧௭௬.

13. எருமையை மேய்த்தற்காக ஓட்டிச் செல்லும் சிறுவர்கள் அதன் முதுகின்மேல் ஏறிச் சென்றனர். அக்காட்சி துறுகல்மேல் மந்தி வீற்றிருப்பதனை நிகர்த்தது—௨0௬.

14. மழைத்துளிகள்போல் மாம்பூ விழுதல்—௨௩௬.

15. கள்ளன் திருடுவதற்குப் பையப் பையச் செல்வதுபோல் - மீன் உண்ணச் சென்ற நாரை மெல்ல அடி வைத்துச் செல்லுதல்—௨௭௰.

16. பிடியானையால் களிற்றைப் பிடிப்பதுபோல் பரத்தை, தனது எழிலால் தலைவனைத் தன்வயமாக்குதல்—௨௭௰.

17. தலைவனைத் தன்வயமாக்கத் தவறினால் தனது அழகு இரந்தோர்க்கு ஈயாதவன் செல்வம்போல் கெட்டொழிவதாக என்று பரத்தை கூறுதல்—௨௭௰.

## ௭. வரலாறு

1. திதநர்:—(௬, ௨௨௰) இவன் தித்தன் வெளியனெனவும், வீரைவெளியன் தித்தன் எனவுங் கூறப்படுவோன் என்பர் அகநானூற்றுப் பதிப்பாசிரியர்.

ஆனால் பாணர் என்ற ஆராய்ச்சி நூலில் வித்துவான் வே. வேங்கடராஜுலு ரெட்டியார் அவர்கள் "தித்தன், தித்தன் வெளியன், வெளியன் தித்தன் என்னும் பெயர்களை நோக்குமிடத்து முதலில் தித்தன் என்பவனும் அவனுக்குப்பின் தித்தன் மகனாகிய வெளியன் என்பவனும், அவனுக்குப்பின் வெளியன் மகனாகிய தித்தன் என்பவனும் வாழ்ந்திருத்தல் வேண்டும் எனத் தோன்றுகின்றது. வெளியன் தித்தன் என்பவன் தித்தனுக்குப் பெயரனாவானாகலின் பாட்டனாகிய தித்தனது பெயர் இடப்பெற்றான் எனக்கொள்ளுதல் சிறக்கும்" என்பர். தித்தன் என்பவன் கொடையிற் சிறந்தவன் என்பதும் உறையூரிலிருந்து அரசாண்டான் என்பதும்,

"மழைவளர் தரூஉ மாவண் டித்தன்
பிண்ட நெல்லின் உறந்தை யாங்கண்." (அகம், ௬.)

என்பதனால் தெரிகின்றது. இவனுக்குக் கற்பிலும் அழகி லும் சிறந்த ஐயை என்ற ஒரு மகள் உண்டு. (அகம், சு)

2, மத்தி:—காவிரிக் கரையிலுள்ள கழார் என்பது இவனது ஊர். (சு) இவன் பரதவர்க்குத் தலைவன் (உஉசு).

3 தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ் செழியன்:—இவன் தலையாலங் கானத்துப் போரில் தன்னை எதிர்த்து வந்த சேரன், செம்பியன், திதியன், எழினி, எருமையூரன், இருங்கோவேள், பொருநன் என்ற எழுவரையும் ஒரு பகலில் வென்று அவர்களது முரசும் வெற்றிக் குடையும் அகப்படுத்திக் களவேள்வி செய்தான் (நடசு). இவன் நீடூர் கிழவோனாகிய எவ்வி என்பவனை வென்றான் (உசுசு).

4. அஃதை:—இவன் தன் சபைக்கு வருகின்ற பொருநர்க்குக் கள்ளும் களிறும் வழங்கினான். (எசு)

5. ஆதிமந்தி:—இவள் ஆட்டனத்தி என்பவனுடைய மனைவியாவாள். ஒருகால் ஆட்டனத்தி, விழாக் காலத்தில் காவிரியில் நீராடச் சென்றான். அதுபொழுது அவன் காவிரிப் புனலால் இழுக்கப்பட்டுக் கடலிற் சேர்ந்தான். இதை அறிந்த ஆதிமந்தி தன் கணவனைத் தேடி எங்கும் காணாது கடைசியில் மருதி என்பவள் காட்டக் கண்டாள். (எசு, உநசு, உஎசு.) நற்றிணைப் பதிப்பாசிரியரும் அக நானூற்றுப் பதிப்பாசிரியரும் சிலப்பதிகாரத்திலுள்ள சான்றினைக் கொண்டு ஆதிமந்தி கரிகால் வளவன் மகள் என்பர். *ஆனால் வே. வேங்கடராஜுலு ரெட்டியார் அவர்கள் ஆதிமந்தி கரிகால் வளவன்மகள் அல்லள் என்ப தற்கும் அவள் கணவனாகிய ஆட்டனத்தி சேரவேந்தன் அல்லன் என்பதற்கும் பல சான்றுகள் கூறியுள்ளனர்.

* P. 83. Paranar by V. V. Reddiar.

6. அன்னி மிஞிலி:—“இவள் ஓர் அழகு வாய்ந்த பெண்மணி. இவள் தந்தையை ஊர் முதுகோசர் கண்ணைக் களைந்து அவமானப்படுத்திவிட இவள் மிகச் சினந்து அக்கோசரை அழித்துவிடுவதென்று சபதஞ் செய்து பரிகலத்து உண்ணுமலும் வெளிய ஆடை உடாமலும் தான் கொண்ட சினக்கோலத்தை மாற்றுமலுமிருந்து குறும்பியனுக்கும் திதியனுக்கும் அக் கோசர்பால் பகையுண்டாகும்படி உரைத்து, அக் கோசரைக் கொல்வித்துச் சினந் தணிந்து, பேருவகையு மெய்தி, அத் திதியனது அழுந்தைக் கண்ணே பண்டைக் கோலத்தோடு செருக்குற்று உலாவினள்.” (அக. ௧௯௬) என்பர் அகநானூற்றுப் பதிப்பாசிரியர். அன்னி மிஞிலியைப் பற்றி நற்றிணையின் உரையாசிரியராய பின்னத்தூர் அ. நாராயணசாமி ஐயர் அவர்கள் வேறுவிதமாகக் கூறுகின்றனர். “அன்னி என்பவன் திதியனது காவல் மரமாகிய ஒரு புன்னை மரத்தை விரும்பி, அம் மரம் நிரம்பப் பூத்திருக்கும்போது அதனை வெட்டிச் சாய்த்தனன். அது காரணமாகத் திதியனுக்கும் அன்னிக்கும் போர் மூண்டது. அப்போரில் திதியன் வெற்றி கொண்டு அன்னியைப் பற்றி அவன் கண்ணைப் பிடுங்கி விட்டான் (அகம், ௧௯௬). அன்னியின் புதல்வனாகிய மிஞிலி யென்பவன் கடுஞ்சினமடைந்து தனக்குப் படைத்துணை பெறுகுமளவும் தான் பரிகலத் துண்ணுமலும் வெளிய உடைகளை யுடுத்தாமலும் சிலகால மிருந்தான். பின்பு வெற்றி மிக்க குறும்பியன் என்பவனால் திதியனை மரபோடழியக் கொல்வித்து மிக்க மகிழ்ச்சி யுடையவனாகித் திருவழுந்தூரிற் பெரிய ஆரவாரத்தோடு சென்று வந்தா னென்பதாம். அன்னி மிஞிலியைப் பற்றிக் கூறப்போந்த வித்துவான் வே. வேங்கடராஜுலு ரெட்டியார் அவர்கள் “இப் பெயர் பெண்பாற் பெயர் எனத் தெரிகின்

றது. 'கொடுங்குழை அன்னிமிஞிலி' (அகம், கஙக) என்பது காண்க. இவள் தந்தையின் பசு கோசர்களின் பயிரை மேய்ந்து அழித்ததற்காக அவர்கள் இவள் தந்தையின் கண்ணைக் களைந்து விட்டனர். இவள் அச் செயலைப் பொறுக்க முடியாமல் அவர்களை ஒறுக்க உறுதிகொண்டு, தான் சினத்தால் மேற்கொண்ட படிவத்தை மாற்றுமலும் கலத்தில் உண்ணுமலும் வெள்ளிதான தூயவுடையை யுடுக்காமலும் ஒரே நிலையிலிருந்து சூழ்ச்சி செய்தாள். அக்காலத்தில் அழுந்தூரிலிருந்த வீரனாகிய திதியனது வலிமையை யறிந்து அவனிடம் சென்று தன் குறைகளைச் சொல்லி வேண்டிக் கொண்டாள். அவன் கோசரின் கொடுஞ் செயலையும் அன்னி மிஞிலியின் உள்ளத்துறுதியையும் அறிந்து கோசரின் உயிரைச் செகுத்தான். அது கண்ட அன்னி மிஞிலி தன் சினம் தணியப்பெற்று உவகை பொங்கியெழக் காதில் குழையணிந்து அத் திதியனது அழுந்தூரில் உலவித் திரிந்தாள்." என்று கூறியுள்ளனர். நம் முன்னோர் தங்கள் வரலாற்றினையும் தங்கள் காலத்தில் நடந்த நிகழ்ச்சிகளையும் தொகுத்து நூல்கள் பல எழுதி வைத்திருப்பின், இதுபோன்ற ஐயப்பாடுகள் நமக்கு உண்டாவதற்கு இடமில்லை சங்க நூல்களுள்—சில ஆசிரியர்கள் பெயர்களைக் கொண்டு அவர்கள் ஆண்பாலரோ பெண்பாலரோ என அறியக்கூடவில்லை. ஆனால் மேலே காட்டிய வரலாற்றுப் பகுதியினின்று அன்னி மிஞிலி பெண்பாலர் எனக் கொள்வதே பொருத்த முடையதாக விளங்குகின்றது. அவ்வாறு கொளவதற்கு அகநானூற்றுச் செய்யுளும் இடம்

இதுகாறும் கூறிய வரலாறுகளன்றி அகநானூற்றில் மருதத் திணையில் ஆதன் எழினி, கரிகாலன், ஆய்எயினன்,

கட்டி, பாணன், ஆரியப்பொருநன், எவ்வி, பழையன் முதலியோர்களைப் பற்றிய குறிப்புகள் வந்துள்ளன. அவைகளை ஈண்டு விரிக்கிற் கட்டுரை பெருகுமாதலின் இதனோடு நிறுத்துகின்றேன்.

## அ. முடிவுரை

மருதத் திணைக்கு ஊடலும் ஊடல் நிமித்தமும் உரிப் பொருளாகும். இவ் ஊடல் வேண்டற்பாலதோ என்ற வினவிற்கு விடை இறுப்பார் போன்று ஆசிரியர் திருவள்ளுவர் ஊடலின் சிறப்பினைக் குறிப்பிடுகின்றார்.

“ஊட லுணர்தல் புணர்தல் இவைகாமங்
கூடியார் பெற்ற பயன்.”

(புணர்ச்சிமகிழ்தல் - ௧௦)

இக்குறளினுக்கு விசேடவுரை கூறிய பரிமேலழகர் “ஆடவர்க்குப் பிரிவென்ப தொன்றுளதாதன்மேலும், அதுதான் பரத்தையர் மாட்டாதலும் அதனை யறிந்து மகளிர் ஊடி நிற்றலும், அவ்வூடலைத் தவறு செய்தவர் தாமே தந் தவறின்மை கூறி நீக்கலும், பின்னு மவ் விருவரும் ஒத்த வன்பினராய்க் கூடலுமன்றே புனை வரைந் தெய்தினோர் பெற்ற பயன்” என்றார். இதனால் ஊடலின் சிறப்புப் பெறப்படுகின்றது.

“கூடலும் ஊடலும் கோவலற் களித்து”

(சிலப்பதிகாரம், ௩: ௧௦௬) என்ற வரிக்கு அடியார்க்கு நல்லார் உரை கூறும்போது ஊடலின் காரணத்தையும் கூறியுள்ளார். “பின்னர் ஊடலளித்தலாவது எண்ணில் காமமெரிப்பினு மேற்செலாப் பெண்மையும் நாணும் அழிவந்து குறையுற்றுக் கூடுந்துணையும் நீயிர் பிரிவாற்றி யிருந்தீர்; அன்பிலீரென ஊடுவது.” (சிலப்பதிகாரம், ௩: ௧௦௬. வரி. உரை) சங்கச் செய்யுள்களில் தலைவனுக்கும்

தலைவிக்கும் உண்டாகும் ஊடலும் அதுபற்றி அவர் உரையாடுதலும் மிக்க நாகரிகப் பண்புடன் விளக்கப்பட்டுள்ளன. உதாரணமாகப் பரத்தையினின்றும் வந்த தலைமகன் தலைமகளை நோக்கி "மாசில் கற்பின் புதல்வன் தாய்" என்று கூற, அதற்குத் தலைமகள் "எம் முதுமையினை எள்ளல் வேண்டா; யாம் எம் முதுமைக்குப் பொருந்துவேம். எமது இளமை கழிந்தது; உன் பொய்ம்மொழி எமக்கு எவ்வாறு இனிமையைப் பயக்கும்" (அகம் - கூ) என்று கூறினாள் என்பதினின்று தலைவியின் உரையாடும் திறம் நன்கு விளங்குகின்றது. இதற்கு நேர் முரணாகத் தற்காலத்தில் நாடகங்களில் தலைவர் தலைவியாகிய இருவர்க்கும் உண்டாகும் பிணக்கத்தில் அவர்கள் உரையாடும் நாகரிகமற்ற மாற்றங்கள் கேட்போர் செவிக்கு வெறுப்பை உண்டாக்குகின்றன. சங்கச் செய்யுளில் நாம் காணும் ஊடல் சாலவும் நுணுக்கமுடையதாக விளங்குகின்றது. இது கருதியே ஆசிரியர் திருவள்ளுவனார் 'புலவி நுணுக்கம்' என்று ஓர் அதிகாரம் வகுத்துள்ளனர். சில சமயத்தில் தலைவி தக்க காரணமின்றியும் புலத்தல் உண்டு. தலைவன் தலைவியை நோக்கிக் "காதன் மிகுதியால் இப் பிறப்பில் யாம் ஒருவரையொருவர் விட்டுப் பிரியமாட்டோம்" என்று சொல்ல, அதைக் கேட்டவுடன் தலைவர் இம்மை என்று கூறியதால், அவர் தம்மை மறுமையிற் பிரிவதாகக் கருதியுள்ளார் என நினைத்துக் கண்ணீர் உகுத்தாள்.

"இம்மைப் பிறப்பிற் பிரியல மென்றேனாக்
கண்ணிறை நீர்கொண் டனள்."

(குறள், புலவி நுணுக்கம் - ௫)

மற்றும் தலைவன் தலைவியை நோக்கி, "உன்னைப் பிரிந்திருந்த காலத்து யான் உன்னை நினைத்தேன்" என்றான்.

அதைக் கேட்ட தலைவி, தலைவன் 'நினைத்தேன்' என்றதனால் ஒரு காலத்து மறந்து பின்னர் நினைத்ததாகப் பொருள் கொண்டு தலைவனிடம் ஊடினாள்.

"உள்ளினே னென்றேன்மற் றென்மறந்தீ ரென்றென்னைப்
புல்லாள் புலத்தக் கனள்" (புலவி நுணுக்கம் - ௬)

இதுபோல் புலவி நுணுக்கத்திற்குப் பல உதாரணங்கள் உள்ளன. இதனால் தலைவியின் கூரிய உணர்ச்சி நன்கு தெளிவாகின்றது.

உரைநடையினும் செய்யுள்கள் மக்கள் உள்ளத்தைக் கொள்ளை கொள்கின்றன. இது கருதியே ஆங்கிலப் புலவர் மாதியூ அர்னல்டு என்பவர் "Poetry is simply the most beautiful impressive and widely effective mode of saying things and hence its importance" என்று கூறியுள்ளனர். சங்கச் செய்யுளில் தன்மை நவிற்சியணி ததும்பக் காணலாம். சங்கப் புலவர்கள் இயற்கை யன்னையின் எழில் நலங்களைக் கண்டு இன்புற்று அவைகளைத் தம் பாக்களில் புகுத்தியுள்ளனர். அவர்கள் தமது உணர்வின் வழி உலக இயற்கையினை நிறுத்திக் கொள்ளாது, இவ்வுலக இயற்கையின் வழியே தமது உணர்வைச் செலுத்தினர். "புன்கு பொரிபோல் மலர்தல்," "நண்டின்கண் வேம்பின் அரும்பு போன்று விளங்குதல்," "மழைத் துளிகள்போல் மாம்பூ விழுதல்" ஆகிய இவைகள் போன்ற பிற உவமைகளும் நிகழ்ச்சிகளும் சங்கப் புலவர்கட்கு இயற்கையின் மாட்டுள்ள புலமையினை வெளிப்படுத்துவனவாகும். சங்க நூல்களில் சாதிப் பிணக்கு சமயப் பிணக்கு ஆகிய இவைகள் விளங்குதல் இல்லை என்பது ஒருதலை. மேலும் சங்கச் செய்யுட்களில் வடமொழிச் சொற்களும் சொற்றொடர்களும் மிகவும் குறைவாக வுள்ளன; இத்துணைய என்று கணக்கிட்டு விடலாம். அக்காலப் பழக்க வழக்கங்

களையும் தமிழ் மக்களது நாகரிக நிலையினையும் சங்க நூல்களினின்று நாம் அறிகின்றோம். இந் நூல்களிலுள்ள சில பகுதிகள் சில மன்னர்களின் கால ஆராய்ச்சிக்குப் பயன் படுகின்றன. இத்துணைச் சிறந்த சங்க நூல்களைத் தமிழ் மக்கள் எவ்வாறு போற்றுகின்றனர் என்பதை இனிக் கூறுதும்.

தமிழ் மக்கள் சங்க நூல்களைப் படியாதிருப்பதற்குப் பல காரணங்களுள் ஒன்று அவைகளின் அதிக விலையே யாம். "இருவே றுலகத் தியற்கை திருவேறு, தெள்ளிய ராதலும் வேறு" என்பதற்கு இலக்காகத் தமிழ்ப் புலவர் களுள் பலர் வறுமையாற் பிணிக்கப்பட்டுள்ளனர். எனவே சங்க நூல்கள் குறைந்த விலைக்குப் பதிக்கப்படுதல் வேண்டும். அந் நூல்களைப் பதிப்பிக்கும் புலவர் பெரு மக்களுக்குச் செல்வர் தக்க பொருளுதவி புரிதல் வேண்டும். அவைகளைப் பதிப்பவர்களும், ஏழை மக்களும் இவைகளை வாங்கிப் படிக்க வேண்டும் என்ற நோக்கத் துடன் அவைகளைக் குறைந்த விலைக்குப் பதிப்பித்தல் வேண்டும். மேனாட்டில் ஒரு நூலுக்குப் பல பதிப்புக்கள் உண்டு. ஆங்கில ஆசிரியர் சேக்ஷ்பியர் எழுதிய ஹாம்லெட் என்ற ஒரு நாடகத்திற்கு அநேக பதிப்புக்கள் வெளி வந்துள்ளன. அதுபோலவே சங்க நூல்களும் பல பதிப்புக்க ளாக வெளிவருதல் வேண்டும்; அவைகளுள் பல பதிப்புக்கள் குறைந்த விலைப் பதிப்புக்களாக இருத்தல் வேண்டும். உதாரணமாக அகநானூறு என்பதற்கு ஒரே பதிப்பு தான் தற்போது உள்ளது. இதைப் பற்றிப் பல ஆராய்ச்சிப் பதிப்புக்கள் வெளிவருதல் வேண்டும். அக நானூற்றிற்கு இதுகாறும் சிறந்த விளக்கவுரை வெளி வரா திருப்பது தமிழ் மக்கள் செய்த தவக்குறைவே யாகும்.

நற்றிணைக்கு திரு. அ. நாராயணசாமி ஐயர் அவர்கள் எழுதிய விளக்கவுரை போன்று அகநானூற்றுக்கு ஒரு விளக்கவுரை வெளிவந்தால், அதில் பொதிந்துள்ள உண்மைகளையும் அழகினையும் கற்றோரும மற்றோரும் நன்கு உணர இயலும். சங்க நூல்களின் அழகினை மக்கள் உணர வேண்டு மொயின் அவைகளிலுள்ள சிறந்த செய்யுள்களைத் தொகுத்து அவைகட்கு எளிய இனிய பயின்ற நடையில் உரை எழுதி அடக்க விலைக்கு விற்றல் வேண்டும். எக் காரணத்தாலோ தற்போது தமிழ் மக்களிடத்து இலக்கியச் சுவையுள்ள நூல்களைப் படிக்கும் மனப்பான்மை பெருகி வருகின்றது. தமிழ் மக்கள், தங்கள் நாகரிகத்தைப் பளிங்கு போல் எடுத்துக்காட்டும் சங்க இலக்கிய நூல்களைச் சிறப்பு வகையிற் படித்து, அதனாலாய பயனைப் பெறும்படி எல் லாம் வல்ல இறைவன் இன்னருள் புரிவானாக!

# ௪. பாலை

[வித்துவான், முருக இலக்குவனார்.]

காதலாற் கூடிக் கலந்த இருவரது பிரிவு ஒழுக்கத் தினைக் குறிப்பது பாலைத்திணையாகும். பிரிந்தாரை ஊழ் கூட்டிவைக்கக் கூடுதல் குறிஞ்சி; பிரிதல் பாலை; பிரிந்த வழி ஆற்றியிருத்தல் முல்லை; ஆற்றாது இரங்குதல் நெய்தல்; பிரிந்தது காரணமாக ஊடுதல் மருதம். காதல்வாழ்க் கையின் நிகழ்ச்சிகள் அனைத்தும் இவ்வைந்து பிரிவினுள் அடங்குமாறு காண்க. இவ்வைந்தினுக்கும் வேறுபட்டன வாய நிகழ்ச்சிகள் யாதொன்றும் காதல் வாழ்க்கையில் இலதாதலும் கண்கூடு. இவற்றையே அன்பின் ஐந்திணை எனப் பொருளிலக்கணம் கூறும். இவ்வைந்திணையுள் பாலைத்திணையும் ஒன்றாகும். பாலையாவது பிரிதல் என மேலே கூறப்பட்டது. பிரிவு குறும்பிரிவு, நெடும்பிரிவு, பெரும்பிரிவு எனப் பலவேறு வகைப்படினும் யாவும் பாலை யின்பாற் படுதல் தெளிவு. மனம் ஒன்றே, தொழிற்படும் புலன்கள் வேறுபாட்டால் ஐந்தாயினவாறுபோல, பாலைத் திணை ஒன்றே அத்திணைகாரணமாக நிகழும் நிகழ்ச்சி வேறுபாடுகளால் ஐந்திணையாயிற் றெனல் தவறாகாது. பாலை நிகழ்ச்சியின்றேல் கூடுதலும், இருத்தலும், ஊடுத லும், இரங்கலும் நிகழுமாறில்லை யன்றோ! எனவே பாலைத் திணையை அடிப்படையாகக் கொண்டே ஏனைத்திணைகள் முகிழ்த்தனவாதல் அறிகின்றோம். அகநானூற்றுச் செய்

யுட்களில் ஒன்றுவிட்டொன்று பாலைச் செய்யுளாக நிற்பது மேற் சொல்லிய கருத்திற்கு அரண் செய்வதாகும்.

அன்பினைந்திணைக்கு வித்துப் போல்வதேயன்றி அதன் விளைவும் பயனுமாகிய இன்பத்தினைச் சிறக்கச் செய்வதும் பாலைத்திணையே யாகும். என்னை?

"ஊடுதல் காமத்திற் கின்பம் அதற்கின்பம்
கூடி முயங்கப் பெறின்"

"உணலினும் உண்ட தறலினிது காமம்
புணர்தலின் ஊட லினிது"

என்பன திருவள்ளுவர் மொழிகளாகும். இன்பம் சிறக்க வேண்டுமேல் காமம் சிறக்க வேண்டும். காமம் சிறக்க வேண்டுமேல் புலவியோ ஊடலோ நிகழ்தல் வேண்டும். புலவிகளோ ஊடலோ நிகழ வேண்டுமேல் பிரிதல் நிகழ வேண்டும். எனவே, பிரிதல் நிகழாவழிக் காமம் சிறவா தாதலால் இன்பமும் சிறவாதாதல் அறிகின்றோம்.

"இல்லை தவறவர்க் காயினும் ஊடுதல்
வல்ல தவரளிக்கு மாறு"

என்பது திருக்குறள். இதன் கருத்து, ஊடுதற்குரிய தவறு பாடு யாதொன்றும் தலைவன்மாட் டில்லையாயினும், அஃது டையான் போலக் கருதிக் கற்பனை செய்து கொண்டா வது ஊடுதல் அவனது தலையளியைத் தாவற்றுகின்றது என்பதாம். இதனுள், "இல்லையாயினும்" என்ற உம்மை எதிர்மறை யாதலால் தவறுபா டுடையாதலே பெரும் பான்மை என அறிகிறோம். ஆகவே, காதலின்பம் சிறக்க வேண்டுமாயின் பிரிதல் நிகழவேண்டும் எனல் முடி கின்றது.

இதனை இன்னும் சிறிது விளங்கக் காணுதல் தக்கது. தானே அவளே எனத் தமியராய் இருவர் எதிர்ப்பட்ட

வழி, முன்னறியாத ஒரு புதிய உணர்ச்சியும் வேட்கையும் தழைக்கப் பெற்றவர்களாய்த் தம்மிற் கூடிக் கலக்கின்றனர். அவ்வேட்கை யுணர்ச்சியே காதல் எனப்படுவது முன் ஒருகாலும் கண்டறியாத புதிய இன்ப நுகர்ச்சியைப் பெற்ற அவர்கள், தங்கள் உள்ளமும் உயிரும் ஒன்றி மகிழ்ச்சிக் கடலில் மிதக்கின்றனர். அவ்வாறு கூடிக் கலந்த அவர்கள் யாதானுமொரு காரணம் பற்றிப் பிரிகின்றனர். மருவி யுறைந்த காலத்து இன்பநுகர்ச்சிகளும், நிகழ்ச்சிகளும் ஒன்றன்பின் ஒன்றாக இருவர் உள்ளத்தும் தோன்றுகின்றன. அன்றியும் ஒவ்வொரு வரும் பிறரிடத்துக் கண்ட சிறப்பியல்புகளை யெல்லாம் நினைத்துப் பார்க்கின்றனர்.

"அன்பும் மடனும் சாயலும் இயல்பும்
என்பு நெகிழ்க்குங் கிளவியும் பிறவும்
ஒன்றுபடு கொள்கையொடு" (அகம் - உஉ௫)

எனத் தலைவனும்,

"என்கைக் கொண்டு தன்கண் ஒற்றியும்
தன்கைக் கொண்டென் நன்னுதல் நீவியும்
அன்னை போல இனிய கூறியும்"

எனத் தலைவியும் நினைந்தவாறு காண்க. இவ்வாறு அவற்றை யெல்லாம் இடையறாது நினைந்து நினைந்து காதல் உணர்வு முறுகப் பெற்றவர்களாய், மீண்டும் ஒருவரை ஒருவர் தலைகூடப் பெறும் காலத்தை மிக்க ஆர்வத்தோடு எதிர் நோக்குகின்றனர். பிரிந்துறையும் காலத்தில் இருவர் உள்ளத்தும் எவ்வளவிற்கு ஆர்வம் பெருகுகின்றதோ அவ்வளவிற்கு, அவர்கள் மீண்டும் மருவிய காலத்துப் பெறும் இன்பம் பெருகுகின்றது. நுகர்வாரது ஆர்வத்தின் அளவே நுகரும் இன்பத்திற்கு அளவாகும் என்ற கருத்தினை ஆசிரியர் திருவள்ளுவனார்,

"ஊடலில் தோற்றவர் வென்றார் அதுமன்னும்
கூடலில் காணப் படும்"

என்ற திருக்குறளால் சுவை நலம் தோன்றக் கூறுகின்றார். எனவே, இன்ப வெள்ளத்துள் அழுந்தித் தம்மை மறந்திருந்த காதலர்களை நினைவு உலகிற்குக் கொண்டு வந்து, முன்னைய இன்ப நுகர்ச்சிகளையும், நிகழ்ச்சிகளையும் எடுத்துக் காட்டுவதும், மீண்டும் அந் நுகர்ச்சிக்கண் வேட்கையைப் பெருக்கி இன்பத்தினைச் சிறக்கச் செய்வதும் பாலைத் திணையாதல் புலனாகின்றது. அமைதியான உறக்கத்தின் இனிமையை விழித்த காலத்து நினைத்துப் பார்த்து மகிழ்வதுபோல, உணர்வழியுமாறு கலந்து மகிழ்ந்த இன்பத்தின் அமைதியினைப் பிரிந்த காலத்திலே தான் நினைத்துப் பார்த்து மகிழ்தல் கூடும்.

இனி, கூடி மகிழும் குறிஞ்சியும், ஊடி மகிழும் மருதமும் போலாது முல்லையும் நெய்தலும் தனித்துறைவாரது நிகழ்ச்சிகளையே குறிப்பனவாயினும், பாலைத் திணைபோலும் சிறப்பு அவற்றுக் கின்மையும் காணத் தக்கது. முல்லையின் உரிப்பொருள் இருத்தல். அஃதாவது தனித் துறையும் தலைவி பிரிவுத் துன்பம் தோன்றுதலவாய், முல்லை நிலத்தில் இயற்கை நிகழ்ச்சிகளைக் கண்டு மனம் அமைந்து இருத்தலாம். எனவே, முன்னைய இன்ப நிலையும் வேட்கையும் தோன்றாமல், நினைவும் தொழிற்படாமல் இருத்தல் என்பது புலனாகின்றது. நெய்தலின் உரிப்பொருள் இரங்கல். அஃதாவது, தனிமை ஆற்றாத் தலைவி கைகடந்த துன்பத்தினளாகி, நெஞ்சழியப் பெற்று, சொல்லத் தகாதனவும் சொல்லி அரற்றுதலாம். எனவே 'நினைவும், உணர்வும் அழிந்து தனது நிலையும் மறந்து புலம்புதல்' என்பது புலனாகின்றது. ஆகவே, நினைவு அவிந்து கிடக்குமாறு செய்யும் முல்லையினும், நினைவழிந்து புலம்புமாறு செய்யும்

செய்தலினும், வரம்பிகவாமல் நினைவைத் தொழிற்படுத்தி, இன்ப நுகர்ச்சியை எடுத்துக் காட்டி வேட்கையைப் பெருக்கும் பாலை சிறந்த தென்பது முடிகின்றதன்றோ!

“பொருளிலார்க் கிவ்வுலகம் இல்லை” என, வள்ளுவர் கூறுகின்றார், அப் பொருளைத் தருவது பாலைத் திணையாதலால், காரணத்தைக் காரியமாக்கிப் பாலையின்றேல் இவ்வுலகம் இல்லை எனக் கருதவும் இடம் தருகின்றது. அறமும், பொருளும், இன்பமும் என எண்ணுவழியும், இன்பமும், பொருளும், அறமும் என எண்ணுவழியும் பொருள் இடை நிற்றலால், அப்பொருள் ஏனைய இரண்டிற்கும் ஒத்த இன்றியமையாமை யுடைத்தென அறிகின்றோம். அவ்வழியே செல்வோமாயின் அறத்திற்கும் பாலை காரணமாகின்றது. இதுவரை கூறியவற்றால் பாலைத் திணைக்கு மூன்று வகையான சிறப்புக்கள் இருத்தலைக் கண்டோம்.

1. தான் அடிப்படையாக நின்று ஏனைத் திணை வேறுபாடுகளைத் தோன்றச் செய்தல்.

2. அன்பின் ஐந்திணையின் பயனாகிய இன்பத்தினைச் சிறக்கச் செய்தல்.

3. உலகம் நடைபெறுதற் கின்றியமையாத பொருளிற்குத் தான் காரணமாய் நிற்றல்.

அகநானூற்றில், முதற்கண் பாலைச் செய்யுள் நிற்பதும், ஏனை நான்கு திணைகளும் இருநூறு செய்யுட்களைப் பெறத் தானொன்றுமே இருநூறு செய்யுட்களைப் பெற்று நிற்பதும் பாலைத் திணையைப் பற்றி மேலே சொல்லிய என் கருத்துகட்கு அரண் செய்வதாகும்.

இனி, நூலுள் நுழைந்து பாலைச் செய்யுள் நலத்தைச் சிறிது காண்போம். பழந்தமிழ்ப் புலவர்கள் அனைவரும்

புலமைக்கு வரம்பாகத் திகழ்ந்தவர்கள். உலகப் பொருள் களையும், அவற்றின் இயற்கை நிகழ்ச்சிகளையும் நுணுகித் நுணுகித் தெளிய உணர்ந்து, அவற்றைத் தம் செய்யுட் களில் திறம்பட அமைக்கும் ஆற்றல் சான்றவர்கள். தங்கள் கருத்தினைத் தாங்கள் கருதியதற்கு மேலும் பிற ருணருமாறு தெளிய உணர்த்தும் தனி வன்மை அவர் கட்கே உரியது. எனது உள்ளத்தில் தோன்றிய கருத் துக்கள் பலவற்றைப் பிறழாமற் பிறருணருமாறு கூற வகையறியாது பலகாலும் விழித்ததுண்டு. அக் கருத் துக்களைப் பழம் புலவர்கள் சிலர், மிகத்தெளிவாக எளிய இனிய நடையில் தெரிவிப்பதைக் கண்டு ஆ! எனது நெஞ்சு நிறைந்து பொங்கிய மகிழ்ச்சியை யாரே அளக்க வல்லார்! மாறிவராது, மலை மறைந்தொளியாது என்றுமொன்றும் அறிவுச் செழுஞ்சுடர் பரப்பித் திகழும் கதிர்க்கூட்டங்களே அப் புலவர்கள் எனல் பொருந்தும். அகநானூற்றுப் பாடல்கள் ஒவ்வொன்றையும் ஓர் இலக்கணமாக வைத்துக்கொண்டு ஒரு சிற்றிலக்கியம் எழுதிவிடலாம்; அல்லது ஒரு சிறு கதை எழுதிவிடலாம். காதல் வாழ்க்கை என்னும் சகட் டினைத், தன்னியல்பில் செல்லவிடாது விலங்கி இடர்ப் படுத்தும் நிகழ்ச்சிகளையும், அவ்வழி நம்பினோர் மேற் கொள்ளத் தகும் கடப்பாடுகளையும் பலவேறு வகையில் சுவைநலம் தோன்றத் தெரிவிக்கும் நூல்களுள் அகநானூ றும் ஒன்று. அந்நலங்களுட் சில வருமாறு:

தலைவியின் உளப்பாடு பெறாமல் பிரியுங் குறிப்பொடு புறப்பட்டுவிட்டான் தலைமகன். அவனை வழியனுப்ப வரு வாள்போல வெளியே வருகின்றாள் தலைவி. ஆகத்துப் புதல்வனை ஒடுக்கி இருக்கின்றாள். உள்ளம் தாங்காது பொங்கிப் பெருகுகின்றது காதல் வெள்ளம். பிரிவை நினைந்து கலங்கியவளாய்த் தயங்கித் தயங்கி மெல்ல

மெல்ல அடிமேல் அடிவைத்து வருகின்றாள். வந்தவள் தனது நலமிக்க சேவடிப் பெருவிரலால் நிலம் கிளைத்து நிற்கின்றாள். தலைவன் தன்னோடு உறைந்த ஞான்றெல்லாம் உலகமே தன்னோடிருப்பதாகக் கருதிக் களித்தவள், பிரிவை உணர்ந்ததும் உலகத்திற்கே தான் வேறாகிவிட்டதாக நினைக்கின்றாள். அஃதாவது தன் உற்றாரும் மற்றாரும் தலைவனேயாகக் கருதிக் களித்தவள், இப்பொழுது தனது தனிமையை நினைக்கின்றாள். தலைவனிடத்துக் கொண்ட மட்டற்ற காதல் பொங்கித் ததும்பி நடனமாடுகின்றது அவள் முகத்தில். உள்ளத்தொடுபடாத பொய்யான முறுவலைச் சிறிது தோற்றுவிக்க வருந்தி முயலுகின்றாள். வெள்ளிய பற்களின் முனைமட்டும் தோன்றுமாறு சிறிதே முறுவலும் செய்கின்றாள். தலைவனது கருத்தினை உணர்ந்த அளவிலே நிகழ்ந்த இவற்றைச் சித்திரித்துக் காட்டும் அடிகள் வருமாறு :

" அளிநிலை பொறாஅ தமரிய முகத்தள்
விளிநிலை கொள்ளாள் தமியள் மென்மெல
நலமிகு சேவடி நிலம்வடுக் கொளாஅக்
குறுக வந்துதன் கூரெயிறு தோன்ற
வறிதகத் தெழுந்த வாயல் முறுவலள்
கண்ணிய துணரா அளவை "

அவன் வினைமேற் செல்லுதலை அவள் விரும்பவில்லை. அவன் பிரிந்து செல்லும் வழியின் கொடுமையைக் கூறித் தடுக்க விரும்புகின்றாள். அவள் கொடுமை யுடையதாக நினைத்த வழியின் இயல்பு இது :

மிகப் பழமையானதொரு காட்டினைக் கடந்து செல்லவேண்டும். அங்கே ஓமை மரங்கள் அடர்ந்தும் உயர்ந்தும் நிற்கின்றன. நீரில்லாமையால் அவைகள் எல்லாம் வேர்முதல் உலர்ந்து தலையெல்லாம்

கரிந்து நிற்கின்றன. அதனை அடுத்த மலை மேடுகளில் பளிங்கினைப் போன்ற நெல்லிக் கனிகள் உதிர்ந்து கிடக்கின்றன. அக் கனிகள் பார்ப்பவருக்குச் சூதாடு கருவியைப் போலும் தோற்றத்தினைத் தருகின்றன. அன்றியும், அரம்போலும் கூர்மையவான பருக்கைக் கற்கள் விரல் முனைகளைப் புண்படுத்துவனவாகப் பரப்பி வைத்தாற்போல மேட்டு நிலங்களிற் கிடக்கின்றன.

இத்தகைய நீரற வறந்த வழியினைக் கடந்து செல்லுதல் ஒல்லுமதோ எனக் கருதுகின்றாள். அன்றியும், அவள் தன்னை எதிர்ப்பட்டுக் கூடிய தலைநாள் சொல்லிய சொற்களையும் நினைவு கூர்கின்றாள். அஃதாவது, "ஒரு ஞான்றும் நின்னைப் பிரியேன்; பிரியின் அச் செயல் அறச் செயலாகா தொழிக" எனக் கூறியது. செலவினைத் தவிர்க்க இவைகளே அவளால் குறித்துக் கொள்ளப்பட்ட காரணங்களாகும்.

இனி, அவ் வழியின் இயல்பு நிகழ்கள் பலவற்றை அவளுக்குணர்த்தி, அவளுடைய கருத்தினை மாற்றுவதைச் சிறிது காண்போம். பழமையான காட்டகத்தே வளர்ந்து முதிர்ந்தது, அந்த ஓமை மரம். அஃது ஆண்டு தோறும் வேனிலுழந்து, கிளைகளெல்லாம் வாடிச், சேர்ந்தார்க்கு நிழலின்றி வேரோடு வெம்பிக் கரிந்து நிற்கின்றது. அதனை நன்னர் உணர்ந்து வைத்தும், அரிது முயன்று நீர் தேடிவைத்துக்கொண்டு ஒரு ஞான்றும் வாடாதிருக்க வழிதேடிற்றிலது. அம் மரம், காலமும் இடமும் அறிந்து நீர்தேடிச் சேமிக்காத ஓமை மரம், ஒருகால் கரிந்து நிற்க நேரிடுவது போல், பழமையான இந்த உலகம் நடைபெறுதற் கின்றியமையாத அரும்பொருளைக் காலமும், இடமும் கருதித் தேடிக் கொள்ளாக்கால், தமது

வாழ்க்கையாகிய பழுமரமும் ஒருகால் கரிந்து நிற்க நேரிடும். தானும் வளம்பட வாழாது, கிளைஞரைத் தாங்குதலும் இன்றி, தன் குலப் பெருமையும் கெடுமாறு செய்துவிடும் வறுமை என்னும் உண்மையை, ஓமை மரம் எடுத்துக் காட்டுகின்றது. அதனால் அவன் பொருள்மேற் செல்லுவது தக்கதே என நினைக்கின்றாள்.

முதிர்ந்த மரங்களின் நெடிய வேர்கள் செல்லும் ஆழம் வரை நீரின்றி வறந்த அக்காட்டுவழியே செல்லும் தலைவன் என்ன துன்புறுவானோ எனக் கவல்கின்றாள். உடனே, கதிரவனால் தெறப்பட்ட மலைமேட்டில் உதிர்ந்து கிடக்கும் நெல்லிக் கனிகள் சூதாடு கருவியைப்போல் தோன்றுவதை நினைக்கின்றாள். அஃது பல உண்மைகளை உணர்த்துகின்றது. ஒன்று : நீர் வேட்கை மிக்க தலைவன் நீரில் வழி அந் நெல்லிக் கனியை உண்டேனும் வேட்கை தணிதல் கூடும் என்பது. இரண்டு : பளிங்கெனத் தோன்றிய அந் நெல்லிக்கனி, முன் உவர்த்துப் பின் இனிப்பது போல, உலகறிந்த செயலாகிய தக்கதொரு பொருட்பிரிவு இப்பொழுது துன்பம் தருமாயினும் முடிவில் பேரின்பம் தருவதென்பது. மூன்று: அந் நெல்லிக்கனி பார்ப்பவர்க்குச் சூதாடு கருவியைப்போல் தோன்றும் என்றதால், தக்க செயலாயினும் அவனது பிரிவு வஞ்சமோ, சூதோ என எண்ணும்படி அவளது நெஞ்சைக் கவற்றுகின்றது என்பது.

வெவ்விய பருக்கைக் கற்கள், தீட்டியது போலும் கூர்மையை யுடையவாய் மேட்டு நிலத்தே கடந்து வழிச் செல்வாரைப் புண்ணுறுத்துமாறு போல, கௌவை நல்லணங்குற்ற கொடிதறி பெண்டிர் அம்பலும் அலருமாகிய தீயசொற்களைப் பலர் முன்னிலையிலும் கூறி நெஞ்சு புண்

னுறச் செய்வர் என்பதனைக் கூறக் கருதினுள். கருதியவள், ஆடவர்க்குயிரெனப்பட்ட வினை முடித்தற் பொருட்டு அத் துன்பத்தைத் தலைவன் ஏற்றுக்கொள்வதுபோலப் பெண்டிர்க் குயிரெனப்பட்ட கற்பினை ஆளுதற்பொருட்டுத் தானும் இத் துன்பத்தை ஏற்றுக்கொள்ள வேண்டும் என மறிந்துணர்ந்தாள். இவ்வாறெல்லாம் உணர்ந்தா ளாயினும், "பிரியேன்" என்று சொல்லியவன் பிரிதலை அவளால் பொறுக்க முடியவில்லை. ஆதலால், யாதாயினும் ஆக, ஏன் அவ்வாறு அப்பொழுது கூறினன் என்பதையாவது கேட்டுவிடுவோம் என எண்ணுகின்றாள். தொன்று என்னை எதிருற்ற ஞான்று, "அறத்தாறன்று" எனச் சொல்லிய சொல் அவ்விடத்தோடே சென்றதுபோலும் என்று தன் கருத்தைக் குறித்துக் காட்டுகின்றாள்.

"... ... ... ... ஒண்ணுதல்
வினைதலைப் படுதல் செல்லா நினைவுடன்
முளிந்த ஓமை முதையலங் காட்டுப்
பளிங்கத் தன்ன பல்காய் நெல்லி
மோட்டிரும் பாறை ஈட்டுவட் டேய்ப்ப
உதிர்வன படூஉம் கதிர்தெறு கவாஅன்
மாய்த்த போல மழுகுநுனை தோற்றிப்
பாத்தி யன்ன குடுமிக் கூர்ங்கல்
விரனுதி சிதைக்கும் நிரைநிலை யதர
பரன்முரம் பாகிய பயமில் கானம்
இறப்ப எண்ணுதி ராயின் அறத்தா
றன்றெனமொழிந்த தொன்றுபடு கிளவி
அன்ன வாக என்னுநள் போல"

என்ற இவையே மேற்சொல்லிய கருத்துக்கள் பொதிந்த அடிகளாகும்.

மேற் சொல்லிய அனைத்தும் குறிப்பினுற் காட்டி, முகத்தினுல் உரைக்கின்றுள். "பிரியேன்; பிரியின் தரி

யேன்" என்று அவன் தலைநாள் சொல்லிய சொற்கள் செவிமாறாது நின்றிசைக்கின்றன. அவற்றை உன்னு தோறும் அவள் உள்ளம் கனலுகின்றது. எனினும், தலைவன் வினைமேற் செல்லும் காலத்துக் கலங்கிக் கண்ணீர் பெருக்குவது தகுவதன்றெனக் கருதி அதனை அடக்க முயலுகிறாள். அவள் அடக்க அடக்க அத் துன்பம் பொங்கிப் பெருகுகின்றது. இறைப்பவர்க்கு ஊற்று நீர்போல மிகுவதன்றோ அதனதியல்பு. அவள் ஒன்றனையும் வாய்விட்டுக் கூறவில்லை. நாவினைத் தடுத்துக்கொண்டாள். அதனைக் கண்ட அவளது நெஞ்சம், கண்ணையும், முகத்தையும் துணையாகக்கொண்டு தான் எண்ணியதை வெளியிடுகின்றது. நாவினைத் தடைசெய்ய அவளால் முடிந்ததே யன்றிக் கண்ணையும், முகத்தையும் தடைசெய்ய முடிந்ததில்லை. பெருகிவரும் கண்ணீரை இமைவிட்டுக் கீழிறங்காதவாறு தடுத்துக்கொண்டாள். இமையைத் தீய்ப்பதுபோலும் வெவ்விதாயிருக்கின்றது அக் கண்ணீர். கண்ணிற் பாவை தோன்றாதவாறு நீர் பரந்து, கண்ணெல்லாம் நிரம்பித் ததும்புகின்றது. வருந்தி அதற்கு அணையிடும் அவளது ஆற்றல்தான் என்னே! அவ்வாறு அணையிட்டுக்கொண்டு, தன்னால் ஆற்றகில்லாப் பிரிவுத் துன்பத்தினையும், அதனைத் தான் அடக்கி வைத்துக்கொள்ள வருந்தி முயலுவதையும் ஓவியம்போலும் எழுதிக் காட்டிக்கலங்கி நோக்கினாள்.

அடக்க முயன்றதன் வழியே பெருகிப் பெருகி வளரும் துன்பத்தை அவளால் பொறுக்க முடியவில்லை. பிரிவு வெடிப்பினை வெடித்துத் துன்பக்கனலை வாரி வீசும் எரிமலை போலும் என எண்ணுகின்றாள் தான் கொண்ட காதலை. நெருப்புப்பற்றி எரிவதுபோல நெஞ்சம் குழுறி நின்ற தலைவி, தன் ஆகத்திருந்த புதல்வனுடைய உச்சியை மோந்து நெட்டுயிர்ப்புவிட்டாள். அப் புதல்வன் முடியி

விருந்த செங்கழுநீர் மாலை, அவளுடைய அழற்கொழுந்து போலும் மூச்சுக்காற்று பட்டதால் வாடிக் கரிந்து தன் அழகுகெட்டு நின்றது. அதனைக் கண்ட தலைமகன், தலைவி உள்ளம் புழுங்கி வருந்துகின்ற வருத்தத்தை உணர்ந்தான். உடனுறையும் பொழுதே இவ்வாறு புழுங்குகின்ற இவள், பிரிந்தால் என்னிலையாவாளோ எனக் கருதித் தனது செலவினைத் தவிர்த்துக் கொண்டான். இக் கருத்துக்கள் பொதிந்த எஞ்சிய அடிகள் வருமாறு:

"முன்னங் காட்டி முகத்தின் உரையா
ஓவச் செய்தியின் ஒன்றுநினைந் தொற்றிப்
பாவை மாய்த்த பனிநீர் நோக்கமொ
டாகத் தொடுக்கிய புதல்வன் புன்றலைத்
தூநீர் பயந்த துணையமை பிணையல்
மோயினள் உயிர்த்த காலை மாமலர்
மணியுரு விழந்த அணியழி தோற்றம்
கண்டே கடிந்தனம் செலவே ஒண்டொடி
உழைய மாகவும் இனைவோள்
பிழையலள் மாதோ பிரிதும்நாம் எனினே."

கண்ணினும், செவியினும் திண்ணிதின் உணரும் நுண்ணுணர்வினோர்க் கல்லது ஏனையோர்க்கு மெய்ப்பாட்டுப் பொருள் கோடல் அரிதென்பர் தொல்காப்பியர். அத்தகைய மெய்ப்பாட்டினைத் தான் உணர்ந்த தன்றியும், பிறரும் உணருமாறு உணர்த்தவல்ல பேராற்றலை என்னென்பது! தலைவன் பிரிவைக் குறிப்பால் உணர்ந்தாள் தலைவி. தான் கருகிய கருத்தை எல்லாம் கண்ணினும் முகத்தினும் குறிப்பாகக் காட்டியதன்றி, வாய்விட்டு ஒன்றையும் கூறினளில்லை. அதனைத் தெளிய உணர்ந்த தலைமகன் தான் செலவு தவிர்ந்ததைக் குறிப்பாற் காட்டினனன்றி வாய்விட்டுக் கூறினனில்லை. இந்த நிகழ்ச்சிகளை எல்லாம் பின்னர்த் தனியே யிருந்து தன் னெஞ்சிற்குக் கூறுகின்ற

ளுக இச்செய்யுளைப் பாடிய திறம் நம்மனோரால் அளந்து கூற இயலாத தொன்று. இத்துணைச் சிறக்கப் பாடும் தனி வன்மை காரணமாகவே இதனைப் பாடியவர், பாலை பாடிய பெருங்கடுங்கோன் என்று சிறப்பிக்கப்படுகின்றார். இவ் வாசிரியாது பாட்டுக்கள் அனைத்தும் நனிசிறந்தன வாகவே இருக்கின்றன. அகநானூற்றுப் பாலைச் செய்யுட்கள் அனைத்திற்கும் முடிமணி என வைத்துப் போற்றத்தகுவன பெருங்கடுங்கோன் செய்யுட்களாகும். இவரைப் போன்ற அறிவுத் தெய்வங்கள் நடமாடிய பழந்தமிழ் நாடன்றோ தமிழ்நாடு.

பொருள் வலிக்கப்பட்ட நெஞ்சினனாய்ப் பிரிந்துவிட்டான் தலைமகன். அவனது பிரிவாற்றாது கலங்குகலுற்றாள் தலைவி. அவளை ஆற்றுவித்தற் பொருட்டு, "நின்னைக் கலங்குமாறு விட்டுப் பிரிந்த காதலர், தம் செய்வினையகத்து நின் போலும் துன்புறுவாராக" என்று தோழி கூறினாள். அவ்வாறு தோழி கூறியது தலைவிக்குப் பொறுக்கவில்லை. அதனால், 'தோழி! அவரது பிரிவால் ஈண்டு நாம் நோய் உழக்குவமாயினும், தமது ஆள்வினையை அவர் குறையின்றி முடிப்பாராக' என்று கூறுகின்றாள் தலைவி. அச் செய்யுள் வருமாறு :

"அறன்கடைப் படாஅ வாழ்க்கையும் என்றும்
பிறன்கடைச் செலாஅச் செல்வமும் இரண்டும்
பொருளின் ஆகும் புனையிழை என்றநம்
இருளேர் ஐம்பால் நீவி யோரே
நோய்நாம் உழக்குவ மாயினும் தாந்தம்
செய்வினை முடிக்க தோழி"

இதனுள், அறன்கடைப் படுதலும், பிறன்கடைச் செல்லுதலும் ஆகிய இரண்டன் இழிவும், தனக்கு எவ்வாற்றானும் அந்நிலை நேர்ந்துவிடுதல் கூடாதெனை அவன் அஞ்ச

நின்ற அச்சமும் தோன்ற அறன் கடைப்படாஅ வாழ்க்கையும், பிறன்கடைச் செலாஅச் செல்வமும் என அளபெடை கொடுத்துக் கூறினார். இன்னும், அறன் கடைப்படாமையும், பிறன்கடைச் செலாமையும் ஆகிய இரண்டன் உயர்வும் அருமையும், அவை, பொருளானன்றிப் பிறவாற்றான் ஆகாதென்னும் துணிபும் அத்தகைய பொருள்பற்றிப் பிரியும் தனது பிரிவிற்குத் தலைவியும் உடன்படுதல் வேண்டுமெனக் கலங்கி வேண்டிக்கொள்ளும் காதன்மையும் என்றிவையெல்லாம் தோன்ற நிற்கின்றது அவ்வளபெடை ஓசை. அவை, பன்முறையும் சொல்லிச் சொல்லி இன்புறற்பாலன. இவ்வாறெல்லாம் காதலி மனங்கொள்ளக் கூறி, அவளது இருள்போலும் கரிய கூந்தலைத் தடவிப் பிரியலாற்றாது பிரிந்தான் தலைவன் எனச் சித்திரிக்கும் புலமைதான் என்னே! இன்றியமையாத ஆள்வினை முடித்தற்பொருட்டுச் சென்ற காதலர் குறையின்றி அவர் வினையை முடிப்பாராக என மனமார வாழ்த்தி நினைக்கும் தலைவியின் ஆற்றுதற் பண்பும் இங்கே புலனாகின்றது. பொருள்வயிற் பிரிந்த தலைமகன் வினை முடித்து வந்து சேர்ந்தான். தலைவி அவனை மகிழ் முகத்தோடு வரவேற்கவில்லை. பிரிவு நீட்டித்த தலைவனை நோக்கிப் புன்னகை அழுங்க நின்று, 'காதல! மகளிரைக் கலங்க விடுத்தல் தக்கதன்றென முன்னோர் கூறியதை இகழ்ந்தனிராகிப் பிரிந்துசென்ற நீவிர், ஆற்றிடை எம்மை நினைத்தலும் செய்திலிர் போலும்' என்று கூறிப் புலத்தலை மேற்கொண்டாள் தலைவி. அது கண்ட தலைவன் 'காதலீ! சிறந்த நினது பெண்மை நலங்களை எல்லாம் யான் மறந்துவிடுதலும் ஒல்லுமதோ! வழிப்படார்ந்த யான், நின்னை நினைத்தலும் செய்திலேன் என ஏதின்மை சொல்லாதே, ஆற்றிடை நிகழ்ந்ததொன்றனை யான் கூறக்

கேட்டனையாயின் இவ்வாறு நீ புலத்தல் செய்வாயில்லை’ என்று கூறிப் பின்வருமாறு நிகழ்ச்சியைக் கூறினன். மூங்கில் மரங்கள் நெருங்கிப் பின்னிக்கொண் டிருக்கின்ற உயர்ந்த காடு. அக் காட்டகத்து ஊகம் புற்கள் எல்லாம் முளிந்து கிடக்கின்றன. தழைகளெல்லாம் காய்ந்து சருகுபட்டு உதிர்ந்து கிடக்கின்றன. மூங்கில் மரங்கள் ஒன்றோடொன்று உரைசியதால் தீப்பொறி உண்டாயிற்று. அப்பொறி கீழே முளிந்தும் காய்ந்தும் கிடந்த புல் சருகு முதலியவற்றிடையே வீழ்ந்தது. அப் பொறி சிறிது சிறிதாகக் கனிந்து சருகுகளும் புற்களும்பற்றி எரியத் தொடங்கின. சுழற் காற்று விசையுடன் அடித்து நெருப்பிற்குத் துணை செய்தது. சிறுகச் சிறுகப் பற்றிய தீ, காற்றின் துணையால் காடு முழுவதும் பரந்து கவர்ந்து கொண்டது. அத் தீயைக் கண்டு அஞ்சி வழியறியாது தடுமாறிய வாணிகக் கூட்டத்தார் ஒரு பக்கம் ஓடுகின்றனர். தீயினைக் கண்ட புலிகளெல்லாம் முழையினைவிட்டு வெளிப்போந்து ஓடத் தொடங்கின. அவற்றைக் கண்ட யானைக் கூட்டங்கள் அச்சமுற்றனவாகி யாவும் ஒருசேரக் கூடின. இதற்குள் பொழுதும் போய்விட்டது. காட்டுத் தீ ஒருபக்கம், புலிகள் ஒரு பக்கம், யானை நிரைகள் ஒரு பக்கம், தனது வழி கெட்டுக் கலங்கி இருளைக் கண்ட ஏக்கம் ஒரு பக்கமாக மிகப் பேரல்லலுக்காளாகி அக் காட்டிடையே நின்றேன். அந் நேரம் யான் கண்ட தொன்றுண்டு. பரந்து கிடந்த பாயல் ஒன்றன்மேல் ஞெரேரென ஓர் இளமான் தோன்றியது போலும் நீ தோன்றினாய். தோன்றிய நீ, கழன்றுவிடும் வளைகளைத் தள்ளிக்கொண்டு, தாழ்ந்த நோக்கத்தோடு நிலங்கிளைத்துப் புலந்து நின்றனை. அது கண்ட யான், ‘இனிய நகையினை யுடையாய்! யாம் இத்துணைப் பேரல்லலுற்று நிற்க

வும் எம்மிடத்து ஊடல் வந்தது எவ்வாறு' எனக் கூறி, நின் புருவங்களையும், நெற்றியையும் தடவிக் கூந்தலைக் கோதினேன். ஞெரேரென நின் தோற்றம் மறையவே கனவுபோலப் பொய்யாகத் தோன்றியதை எண்ணி யான் ஏக்கற்று வருந்தினேன். நின்னை நினைத்தனம்; இதனால் உணருவாயாக என்றான். இக் கருத்தமைந்த செய்யுள் வருமாறு:-

“ஒழித்தது பழித்த நெஞ்சமொடு வழிப்படர்ந்
துள்ளியும் அறிதிரோ எம்மென யாழநின்
முள்ளெயிற்றுத் துவர்வாய் முறுவல் அழுங்க
நோய்முந் துறுத்து நொதுமல் மொழியல்நின்
ஆய்நலம் மறப்பனோ மற்றே சேணிகந்(து)
ஒலிகழை பிசைந்த ஞெலிசொரி சொண்பொறி
படுஞெமல் புதையப் பொத்தி நெடுநிலை
முளிபுல் மீமிசை வளிசுழற் றுறாஅக்
காடுகவர் பெருந்தீ யோடுவயின் ஓடலின்
அதர்கெடுத் தலறிய சாத்தொ டொராங்கு
மதர்புலி வெரீஇய மையல் வேழத்து
இனந்தலை மயங்கிய நனந்தலைப் பெருங்காட்டு
ஞான்றுதோன் றவிர்சுடர் மான்றூற் பட்டெனக்
கட்படர் ஓதி நிற்படர்ந் துள்ளி
அருஞ்செல வாற்றா ஆரிடை ஞெரேரெனப்
பரந்துபடு பாயல் நவ்வி பட்டென
இலங்குவளை செறியா இகுத்த நோக்கமொடு
நிலங்கிளை நினைவினை நின்ற நிற்கண்
டின்னகை யினைய மாகவும் எம்வயின்
ஊடல் யாங்குவந் தன்றென யாழநின்
கோடேந்து புருவமொடு குவவுநுதல் நீவி
நறுங்கதுப் புளரிய நன்னர் அமையத்து
வறுங்கை காட்டிய வாயல் கனவின்
ஏற்றேக் கற்ற உலமரல்
போற்றா யாகலின் புலத்தியால் எம்மே.” (௩௯)

## தாயர் குழந்தையை ஊட்டுதல்

அகன்ற மனையகமெல்லாம் சிலம்பொலி தழங்க ஓடி யும், ஆடியும் விளையாடுவாள் மகள். விளையாட்டு மகளிரோடு சிறிதுநேரம் பந்தாடி வருவாள். இதற்குள் அவளது உடம்பு இளைத்தும் களைத்தும் விட்டதென எண்ணிய தாய், பாற்சோறிட்ட வெள்ளி வள்ளத்தினைக் கையேந்திச் சென்று, "என் கண்ணன்னாய்! வாராயோ" என அன்புடன் அழைத்து, எனக்காக ஒரு பிடி உண்டனை யாயின், உன் தந்தைக்காக ஒரு பிடி உண்ணுதி அம்மே என உரைத்துரைத்து ஊட்டுவாள். தயார் குழந்தையை ஊட்டும் இம்முறையை இயற்கையாக ஆசிரியர் கயமனார் கூறுகின்றார்.

"சீர்கெழு வியனகர்ச் சிலம்புநக இயலி
ஓரை ஆயமொடு பந்துசிறி தெறியினும்
வாரா யோவென் றேத்திப் பேரிலைப்
பகன்றை வான்மலர்ப் பனிநிறைந் ததுபோல்
பால்பெய் வள்ளம் சால்கை பற்றி
என்பா உண்டனை யாயின் ஒருகால்
நுந்தை பாலும் உண்ணென் றூட்டி." (உகக)

இதனைப் பாலூட்டியதெனக் கூறுதலும் உண்டு.

தலைவி உடன்போக்குப் போய்விட்டாள். அவளைக் காணாது தாயரும் தோழியரும் கலங்குகின்றார்கள். நற் பண்பு மிகவும் உடையாள் அத் தலைவி. அவள் பிரிந்து விட்டதால் தோழியர்களெல்லாம் பெரிதும் துன்புற்று நிற்கின்றனர். தன் மகளைக் காணாது கலங்கிக் கண்ணீர் பெருக்கிய தாய், முன்னெல்லாம் தன் மகள் விளையாடிய இடங்களிற் சென்று தேடுகின்றாள். அங்கே ஒரு மணற் பாவை கிடந்தது. அத் தலைவி வைத்து விளையாடிக் கொண்டிருந்தது அப் பாவை. அதனைக் கண்டாள் தாய்

கலக்க மிகுதியால் அதனைப் பாவை என உணர்ந்திலள். தன் மகளேயாகக் கருதினள். கருதி அப் பாவையின் கண்ணையும் நெற்றியையும் மெல்லெனத் தடவிக்கொடுத் தாள்; அருகே கிடந்த வாடிய குவளை மலரை எடுத்து அப் பாவைக்குச் சூட்டினள்; சூட்டி அப் பாவையைத் தழுவி நின்றவளாகி, "மகளே! நினது இனிய தோளைத் தாராய்; இன்றேல் எனது இன்னுயிர் இறுக் கழிவ தாக" என்று கூறினள். அந் நிலையை ஊரவர் காண் கின்றனர். அவர்களும் தம்மை யறியாது கலங்கி நிற்கின் றனர். சிறிதளவில் தேறிய ஊரவர் அல்லது கண்டோர், தாயரையும் தோழியரையும் தேற்றுவிக்கக் கருதுகின்றனர். தலைவி பிரிந்து சென்ற நாட்டின் இயல்பையும் வளத்தை யும் கூறித் தேற்றும் சிறப்பு வியக்கத்தக்கதொன்று. குழி யில் வீழ்ந்த பெண் யானையின் ஓசைக்கு வெருவிய செவ் வாய்க் குழவி (எருமைக் கன்று) எருமை நல்லான் பெரு முலை மாந்துவதுபோல், அலர் வாய்ப் பெண்டிரின் தீய சொற்களுக்கு வெருவி எழுந்த நங்கள் மடவோள் தனக் குரிய காதலனை அடைந்து இன்புற்று வாழ்வாள்; ஆதலால் நீவிர் கவலுதல் ஒழிவீராக" எனக் கூறுகின்றனர். அச் செய்யுள் வருமாறு:

"கயந்தலை மடப்பிடி பயம்பிற் பட்டெனக்
களிறுவிளிப் படுத்த கம்பலை வெரீஇ
ஒய்யென எழுந்த செவ்வாய்க் குழவி
தாதெரு மறுகின் மூதா ளாங்கண்
எருமை நல்லான் பெறுமுலை மாந்தும்
நாடுபல இறந்த நன்ன ராட்டிக்கு
ஆயமும் அணியிழந் தழுங்கின்று தாயும்
இன்றோள் தாராய் இறீஇயரென் உயிரெனக்
கண்ணும் நுதலும் நீவித் தண்ணெனத்
தடவுநிலை நொச்சி வரிநிழல் அசைஇத்

தாழிக் குவளை வாடுமலர் சூட்டித்
தருமணற் கிடந்த பாவையென்
அருமக ளேஎன முயங்கினள் அழுமே." (௧௬௫)

பசுக் கூட்டங்களைப் பகைவர் கவர்ந்து சென்றனர். அதனைக் கரந்தை வீரர்கள் மீட்டுக்கொண்டு வந்தனர். கூற்றுவன் கைப்பட்ட உயிரை மீட்டுக்கொண்டு வருவது போல என அதன் அருமை கூறப்படுகின்றது. அத்தகைய வீரச் செயலை ஆசிரியர் மருதன் இளநாகனுர் கூறுகின்றார். அவர்களது வீரம் அருள் பற்றி எழுந்த வீரமாகக் கூறுகின்றார். பகைவர்களால் கொள்ளை யடிக்கப் பட்டுத் தம் தாய்ப் பசுக்கள் சென்று விட்டமையால் இளங் கன்றுகளெல்லாம் நடை மெலிந்து கண்ணீர்விட்டு நின்றன. பசுக்களை மீட்ட வீரர்கள் பசுக்களை மீட்டார்கள் என்று கூறாமல், கன்றின் கடைமணி உகுநீர் துடைத்தார்கள் எனக் கூறியது நனியும் இன்பம் தருவதாகின்றது.

"வீளை அம்பின் விழுத்தொடை மறவர்
நாளா உய்த்த நாமவெஞ் சுரத்து
நடைமெலிந் தொழிந்த சேட்படர் கன்றின்
கடைமணி உகுநீர் துடைத்த ஆடவர்."

பழந் தமிழர் நனியும் உயர்ந்ததும் தம்முள் ஒத்தது மாகிய இன்ப, நிலை இரண்டு கண்டனர். ஒன்று: தாமே முயன்றீட்டிய பொருளைப் பிறர்க்கும் பகுத்துத் தாமும் உண்டல்; இரண்டு: உயிருருகிச் செல்லும் காதலாற் பிணிக்கப்பட்டு, ஒத்த பண்புடையராய், ஒருவனும் ஒருத்தியுமாகக் கூடி மகிழ்தல். இதனையே திருவள்ளுவர்,

"தம்மில் இருந்து தமதுபாத் துண்டற்றால்
அம்மா அரிவை முயக்கு."

எனக் குறிக்கின்றார். அகநானூற்றுப் பாலைச் செய்யுட்கள் பலவற்றில் இக் கருத்துக் காணப்படுகின்றது. தாம் வளம்

பட வாழ்தலும், தம் கேளிரைத் தாங்குதலும், ஏற்றோர்க்கு இல்லை என்னாது ஈதலும் என்ற இம் மூன்றனையும் உயிரினும் சிறந்த அறமாகக் கொண்டொழுகினர் என்பது அச் செய்யுட்களால் உணரக் கிடக்கின்றது,

“கேள்கே டூன்றவும் கிளைஞர் ஆரவும்
கேள்அல் கேளிர் கெழீஇயினர் ஒழுகவும்
ஆள்வினைக் கெதிரிய ஊக்கமொடு புகல்சிறந்து.”

எனவும்,

“செறுவோர் செம்மல் வாட்டவும் சேர்ந்தோர்க்
குறுமிடத் துவக்கும் உதவி ஆண்மையும்.”

எனவும் வருவனவற்றால் அவை தெற்றென விளங்கும்.

# ரு. குறிஞ்சி

[வித்துவான் இ. சிவகுருநாதன்]

தமிழ்ச் செல்வர்காள் !

"இன்பம் இன்பம்" என்று ஆடி ஓடி அங்கும் இங்கும் அலைய வேண்டாம். அகநானூற்றைப் படியுங்கள். அழியா இன்பம் பெறலாம். அகநானூறு ஓர் இன்பக் கடல்; தமிழ் அமிழ்தத்தின் பெருந் தேக்கம். அக் கடல் கொழிக்கும் புலமை மணிகளோ பலப்பல. தமிழர்காள் ! திரண்டு வருக ! அகநானூற்றுக் கடலிடைப் படிக! தமிழ் அமிழ்தத்தைப் பருகுக ! புலமை மணி பெறுப் புகழ் உறுக !

அகநானூறு ஐந்திணை ஒழுக்கங்களையும் அறிவிக்கின்றது. அவற்றுள் குறிஞ்சித் திணையைக் குறித்து இவண் கூறுவல்.

அகநானூற்றுள் குறிஞ்சித் திணையைப் பற்றிய பாடல்கள் எண்பதே. எண்பது பாடல்களையும் பாடியவர்கள் நாற்பதின்மர். பல பாக்களை ஒரே புலவர் பாடுகின்றார். ஒரு பாடலையே பாடியவரும் உண்டு. எண்பது பாடல்களும் கூறும் துறைகள் எத்துணைய எனின், ஒருவாறு நாற்பதாகக் கொள்ளலாம். துறைகளிலும் ஒரே புலவர் பல துறைகளைப் பாடுகின்றார். ஒரு துறையையே பாடியவரும் உளர். குறிஞ்சியைப் பாடுவதற்கென்றே

கபிலர் பிறந்தனர்போலும்! குறிஞ்சித் திணையில் கபிலர் பாடியவையே பெரும்பகுதியாகும். இயற்கையைப் பாடுவதில் இவர் இணையற்றவர். எண்பதில் பதினேழு பாடல்கள் கபிலரால் ஆக்கப்பட்டன.

அவரை அடுத்து நிற்பவர் பரணர் ஆவர். வரலாற்றுப் பகுதியை உவமை காட்டுவதில் இவர் வல்லவர்: பெண் அழகை ஓவியம்போல் பாட்டில் தீட்டிக் காட்டுவார். இவர் பாடிய பாட்டுக்கள் கரு. 'கபில பரணர்' என்பது உலக வழக்கு அன்றோ! தோழர்கள் இருவரும் குறிஞ்சியைப் பாடுவதிலும் தோழமை கொண்டனர் போலும்! பாடிய பிற புலவர்களைப்பற்றிப் பின் இடம் வாய்த்துழிக் கூறுதும்.

## க. குறிஞ்சித் திணை

'குறிஞ்சி' என்றால் என்னை? மலையும் மலை சார்ந்த நிலமும் குறிஞ்சி எனப்படும். 'திணை' என்ற சொல்லுக்கு ஒழுக்கம் என்பது பொருள். குறிஞ்சி நிலத்தில் ஒழுகும் ஒழுக்கத்தினைக் 'குறிஞ்சித் திணை' என்பர். அந்நிலத்து ஒழுக்கம் யாது? ஒத்த அன்புடைய தலைவனும் தலைவியும் தம்முள் ஒன்றுகூடிப் புணர்தலும், அதற்குரிய காரணங்களும் ஆகும்.

புலவர்கள் குறிஞ்சியைப் புணர்ச்சிக்குரிய நிலமாகக் கொண்டது போற்றற்குரியது. குறிஞ்சி இயற்கை வளம் செறிந்தது; இன்பத்தைச் சிறப்பிக்க வல்லது. என்னை? மழை தவழும் மலையைக் காணுங்கள்! கருதுங்கள்!! ஆசினியும் அசோகும் மலையை அணி செய்யும்; தேமாவும் தீம் பலவும் மலைக்குத் தெய்வக் காட்சியை வழங்கும்; சந்தனமும் சண்பகமும் மலையை மாண்புறுத்தும்; கோங்கும் வேங்கையும் மலைக்கு அழகூட்டும். மற்றும் பல

மரங்கள் விண்ணைத் தழுவி முத்தமிடுவன போன்று ஓங்கி உயர்ந்து விளங்கும்.

மலர்ந்த முகத்தோடு மகிழ்ந்து நோக்கி மனங் கவரும் மங்கைபோல, குறிஞ்சியும் கோங்கும் மாதவியும் மல்லிகையும், மௌவலும் முல்லையும் யாண்டும் மலர்ந்து மணம் பரப்பி மனத்தை ஈர்க்கும்.

மலையிடையே பலா கொம்பில் பழுத்துத் தொங்கும்; வாழை குலையிற் பழுத்துத் திகழும்; மா கொத்திற் பழுத்து விளங்கும். அம் மலைவாழும் கடுவன் (ஆண் குரங்கு) வெடித்த பலாவின் தீஞ்சுளைகளைக் கடித்துக் கடித்துத் தன் மந்தியை (பெண் குரங்கை) உண்பிக்கும்; பைங்கிளி தன் செம்பவள அலகால் மாவின் தீங்கனிகளைக் கொத்திக் கொத்தித் தன் துணைக்குக் கொடுக்கும்; பொன்னிற வண்டுகள் மலரினை ஊதிக் கொடுத்துப் பெண் வண்டைத் தேன் உறிஞ்சப் பண்ணும். களிறு (ஆண் யானை) தன் காதல் மடப்பிடிக்கு (பெண் யானைக்கு)க் கரும்புகளை ஒடித்து ஒடித்து அதன் கவுள் நிறையக் கொடுக்கும்; கருங்குயில் செந்தளிர்களைத் தன் கூரிய அலகால் கோதிக் கோதித் தன் பெடைக்கு ஊட்டும்.

தன் பைந்நிறத்தால், தீந்தேனால், நறுமணத்தால், வண்டொலியால், பைம்புற்றரையால் ஐம்புலன்கட்கும் பெண்ணைப்போல இன்பமளிக்க வல்லது சோலையே அன்றி வேறு யாதுளது?

இத்தகைய சோலையின் நடுவண் அழகெலாம் உருண்டு திரண்ட தலைவியையும் தலைவனையும் சில காரணங்களால் புலவர்கள் ஒன்றுகூடச் செய்கின்றனர். ஒன்றுகூடியவர்கள் தம் கண்கள் ஓராயிரம் முறை கலந்து பேசுகின்றன; நெஞ்சு ஒன்றுபடுகின்றது; காதல் அரும்பி மலர்கின்றது.

உடன் நின்ற தோழி அதை அறிகின்றாள். அவர்களை மீண்டும் பலமுறையும் எதிர்படச் செய்கின்றாள். இடையே பல இடையூறுகள் தோன்றுகின்றன. தோழி தலைவியின் காதலைத் தாய்க்கு அறிவிக்கின்றாள்; தலைவனை மணம் பேசி வர வேண்டுகின்றாள். தலைவன் வரைவு மலிந்து வருகின்றான். மணம் நிகழ்கின்றது. காதலர் தம்முட் கலந்து மகிழ்ந்து வாழ்கின்றனர்.

இன்ன பிற செய்திகளைக் குறிஞ்சியில் புலவர்கள் தம் மேதகு புலமையால் வளம்பட விரித்துக் காட்டுகின்றனர். அச்செய்திகட்கிடையே அவர்கள் கூறும் உவமங்களும், நாட்டுச் சிறப்புக்களும், விலங்கினைப்பற்றிய செய்திகளும், பழந்தமிழர்களின் பழக்கவழக்கங்களும், இயற்கைக் காட்சிகளும், வரலாற்றுப் பகுதிகளும், அறிவுக்கு விருந்தூட்டுவனவாகும். அவற்றை முறையே இவண் கண்டறிவாம்.

## உ. காதலர் காட்சி

காட்சி வகை 1. சோலை நடுவண் ஓர் வேங்கைமரம் மலர்ந்து விளங்கியது. அம் மலர்களின் நிறம் அவண் விளையாடிய மங்கையர்கள் உள்ளத்தைக் கவர்ந்தது. மங்கையர் பலரும் மலர் பறிக்க ஒருங்கு திரண்டனர். ஓங்கி வளர்ந்த வேங்கையின் மலர்கள் அவர்கள் கைக்கு எட்டவில்லை. மலைநாட்டு மகளிர் வேங்கை மலர் பறிக்க வேண்டுவரேல், அம் மரத்தின்கீழ் நின்று 'புலி புலி' என்று கூவுவராம். அவ் வொலி கேட்டவுடன் வேங்கை மரம் மங்கையர்கள் மலர் பறிக்கத் தன் கிளைகளைத் தாழ்த்திக் கொடுக்குமாம்.

அதனையொட்டி மங்கையர்கள் 'புலி புலி' என்று கூவிக்கொண்டே மலர் பறித்தனர். அவர்தம் கூக்குரல்

சோலையின் வேறொரு பாங்கர் விற்கொண்டு விளையாடிய ஓர் ஆடவன் செவியில் உற்றது. ஆடவன் உண்மையாகவே ஒரு புலி வந்து யாரையோ அச்சுறுத்துகின்றது; அதன் அச்சத்தைக் கண்டு எவரோ அலமருகின்றனர்; விரைந்து சென்று அப்புலியைக்கொன்று அவர்தம் அல்லலை அகற்றுவோம்' என எண்ணி அவ்வொலி வந்த வழியை உற்று நோக்கி ஓடி வந்தான். வந்தவன் வேங்கை மரத்தடியைக் கண்டான். மங்கையர்கள் கூடி நின்று 'புலி புலி' என்று கூவுவதைக் கேட்டான். விரைந்து அவராருகே சென்றான்.

சென்றவன், நங்கைமீர்!! "புலி யாண்டுச் சென்றது?" என்று வினவினான். மீட்டும் "இதோ என் அம்புக்குப் புலியை இரையாக்குகின்றேன். புலி சென்ற திசையைச் சொல்லுக?" என்று கேட்டான்.

கேட்டவனுடைய கல்லென உயர்ந்த தோள்களையும், கணை தொடுத்து வில்லேந்திய கைகளையும், ஆரம் பூசிய அகன்ற மார்பையும், கழுநீர் மாலை விளங்கும் கழுத்தினையும் கண்டு வெட்கப்பட்டு, ஒருவர் முதுகிலே ஒருவர் மறைந்து நின்றனர். ஆடவனுக்கு எதிர்மொழி இயம்பிலர்.

அதைக்கண்ட ஆடவன், 'மையீரோதி மடவீர்! நீவிர் 'புலி புலி' என்று கூவியது பொய்யோ? நும் வாயில் பொய்யும் உண்டுகொல்!" என்று வியந்து கேட்டான். அங்ஙனம் கேட்குங்கால் மங்கையருள் ஒருத்தி அவ் வாடவன் உள்ளத்தைக் கொள்ளை கொண்டு விட்டாள். ஆடவனும் அவள்பால் தன் நெஞ்சை அளித்து விடுகின்றான். மைந்தன் மங்கையைப் பார்க்கின்றான். மங்கையும் எதிர்நோக்குகின்றாள். இருவர் உள்ளமும் தம் இருக்கையை மாற்றிக் கொள்ளுகின்றன.

இக் காட்சியைத் தங்கால் முடக்கொற்றனார் என்னும் புலவர், தீந் தமிழ்ப் பாவால் செப்புகிறார். அப்பாடல் ஈதாகும்:

"...மலிபூஞ் சாரலென் தோழி மாரோ(டு)
ஒலிசினை வேங்கை கொய்குவம் சென்றுழிப்
புலிபுலி என்னும் பூசல் தோன்ற......
வரிபுனை வில்லன் ஒருகணை தெரிந்துகொண்(டு)
யாதோ மற்(று)அம் மாதிறம் படர்என
வினவி நிற்றந் தோனே அவற்கண்டு......
நாணி நின்றனெ மாக......
மையீ ரோதி மடவீர்! நும்வாய்ப்
பொய்யும் உளவோ என்றனன்......
நின்மக ளுண்கண் பன்மா ணோக்கிச்
சென்றோன் மன்றவக் குன்றுகிழ வோனே."

(அகம் - ௪௮)

இச் செய்தியை வேறோர் இடத்தில் (அகம், ௫௨) நொச்சி நியமங்கிழாரும் குறிப்பிடுகின்றார்.

காட்சி வகை 2. மேட்டு நிலம். தினைக் கதிர்கள் விம்மி விளைந்து நிற்கின்றன. பைந்தினை கவர, செந்தார்ப் பைங்கிளிகள் பறந்து வருகின்றன. தினைப்புனத் தருகே வேங்கைமரக் கால்களால் அமைந்த ஒரு பரண். பரணிடை புனத்துள் போந்த கிளிகளை ஓட்டிக்கொண்டு இளமங்கையர்

ஓர் ஆடவன் பரணருகே ஓடிவந்தான். வந்தவன் அவண் இருந்த மங்கையரை நோக்கி, 'மடநல்லீர்! என் அம்பால் புண்பட்டுக் குருதி பொங்க இவ் வழியே ஓர் யானை போந்ததோ' என்று கேட்டான். கேட்டவனுக்கு இளநங்கையர் எதிர்மொழி ஈந்திலர். மங்கையருள் ஒருத்தியை, வந்தவனுடைய மலரணிந்த மார்பு கவர்ந்து

விட்டது. மைந்தனும் அவள் அழகில் ஈடுபட்டான். இக் காதலர் காட்சியைக் கபிலர் கூறுகின்றார்.

“ ...உருவ வல்விற் பற்றி யம்புதெரிந்து
செருச்செய் யானை சென்னெறி வினாஅய்ப்
புலர்குர லேனற் புழையுடை யொருசிறை
மலர்தார் மார்ப னின்றோற் கண்டோர்
பலரில் வாழி! தோழி! யவருள்......” (அகம்-அஉ)

ஊட்டியார் என்னும் ஒரு புலவரும், இதனை அகம் ௬அஅ-ல் அறிவிக்கின்றார்.

போந்தைப் பசலையார் என்னும் புலவர் நெய்தல் நிலத்து நிகழ்ந்ததாக ஒரு காட்சியைக் குறிப்பிடுகின்றார். காட்சி குறிஞ்சிக் குரியதாதலின் உரையாசிரியர் ஒருவர் அதனை “நெய்தலிற் குறிஞ்சி” எனக் கூறுகின்றார். அக்காட்சி யையும் இவண் காண்போம்.

காட்சி வகை 3. கடற்கரை. பெண்கள் பலர் மண் வீடு கட்டிக் கரையில் விளையாடினர். மணற் சோறு ஆக்கி மகிழ்ந்து இருந்தனர். அந் நிலையில் அவரருகே ஓர் ஆண்டகை வந்தான். வந்தவன், பெண்களைப் பார்த்து ‘மங்கையீர்! பொழுதோ கழிந்து விட்டது; யானோ மிக வருந்தி இவண் வந்திருக்கின்றேன்; நுங்கள் இல்லத்தில் உணவு கொண்டு ஓர் இரவு தங்கலாமா?’ என்று கேட்டனன். மங்கையர் நாணத்தால் தலைகுனிந்து மறைவில் நின்று, ‘ஐய இவை கொழுமீனாலாகிய தாழ்ந்த உணவு; நுமக்கு உரிய அல்ல’ என்றனர். அதைக் கேட்ட ஆடவன் விரைந்து ‘கொடியொடு கடலில் தோன்றும் கப்பல் களைக் காண்க’ என்று அவருக்குக் காட்டினான். காட்டியவன் அவர்தம் வீட்டைக் காலால் சிதைத்து அப்பால் அகன்று நின்று, அக் கூட்டத்துள் குறித்த ஒருத்தியையே பன்முறையும் பார்த்து, ‘நன்னுதால் யான் வறிதே

செல்லவா' என்று ஒரு மொழி கூறி நின்றான். அம் மொழிகேட்ட அவள் நெஞ்சு அழிந்தது. நெஞ்சு அழிந் தும் அதை வெளிக்காட்டாது 'போவீராக' என்றாள் அவன் போகாது அவள் உள்ளத்தைப் பிணித்து நின்றான். (அகம், ககO).

இங்ஙனம் புலவர்கள் காதலர்களைக் காட்சியால் கூட்டும் முறை காணக் காணக் களிபேருவகையைத் தரும்.

இக் காதலர் காட்சியைக் "கண்டதுங் காதல்" என இகழ்ந்துரைப்பவரோ வெனின், அறியாது கூறினை! கூட்டம் ஒன்றையே குறிக்கொண்டு, அஃது நிகழ்ந்தபின் அழிவது, அவர் கூறுங் "கண்டதுங் காதல்". அஃது காணுமிடத்து மறக்கப்படும்; அன்றிப் பிறரைக் கொண்டு நிறைவேற்றப்படும்.

இக் காட்சி எத்தன்மையதெனின், கண்டவிடத்துத் தோன்றிய அவர்தம் உள்ளன்பு, என்றும் மாறுபடாத தாய், வாழ்நாள் முழுவதும் பல்வழியினும் தழைநின்று, அவர்தம் வாழ்க்கையை உயரிய இன்பவழியில் ஒன்று கூட்டிச் செல்லும் ஓர் ஊன்றுகோல் ஒப்பதெனவறிக. இதனை யுட்கொண்டன்றோ ஆன்றோர் "மாறாக் காதலர்" என்றதூஉம். 'மாறா' என்பது ஈண்டுப் பிறிதின் இயை பின்மை நோக்கிற்று; 'வெண்டிங்கள்' என்றாற்போல. மாறுபடுவதைக் காதலென்னார். காமம் எனல் வேண்டும்.

தோழியின் துணை :—தான் கண்ட தலைமகளை மீண்டும் காணத் தலைவன் சோலைக்கு வருவான். தலைவியொடு பிரியாது உடனிற்கும் தோழியைக் கண்டு அவள்பால் தன் எண்ணத்தை அறிவித்துத் தோழியின் துணை கொண்டு தலைவியைப் பெற விரும்புவான்.

" மாதர் மெல்லியல் மடநல் லோள்வயின்
தீதின் றாக நீபுணை புகுகென
என்னும் தண்டு மாயின் " (அகம் - ௩௩௨)

என்ற பாடல் தலைவன் தோழியின் துணை வேண்டுதலைத் தெரிவிக்கும். தோழி, பின் தலைவன் கருத்தைத் தலைவிக்கு அறிவிப்பாள். அங்ஙனம் அறிவிக்குங்கால் தலைவி நெருநல் தலைவனைக் கண்ட குறிப்பை, தான் அறியாதவள்போல் சொல்லுவாள்; அக் குறிப்பைத் தான் அறிந்ததுபோலக் கூறின் நாணமிக்க தலைவி ஏதமுறுவாள என்று எண்ணியே. எடுத்துக்காட்டாக தலைவன் தலைவியொடு செய்த செயல்களை எல்லாம் தோழி தன்னொடு செய்ததாகக் கூறித் தலைவியை உடன்படுத்துகின்ற ஒரு செய்தியைக் காண்பாம்.

" அம்மே! நேற்றுத் தினைப்புனத்தில் புரவலன் போல் ஒருவன் வந்தான். அவன் இரவலன்போல் சில பணி மொழிகளைக் கூறிக்கொண்டு, தெய்வ மகளிரைப்போல என்னை வருத்தி இவண் இருக்கும் நீவிர் யார் என்று கேட்டுக்கொண்டே என்னைக் கட்டித் தழுவினன். அவன் அணைத்ததற்கு மகிழ்ந்தேனாயினும் அதனை அவன் அறிதல் அஞ்சிக் கடியமொழி கூறி அவன் கையை எடுத்துவிட்டேன். அது கண்டு வெருவிநின்ற அவன் யாதும் மறு மொழி கூறானாய் அலமந்து அப்பால் சென்றான். சென்ற வன் இன்னும் புனத்து வருதலை மறவான். என் தோள் அவனுக்கே உரிமையாதலை அறியானாகி என்னைப் பெற வந்து வந்து போகின்றான். அவனைக் கண்டு ஆறுதல் கூறு வம்; வா" எனத் தோழி அழைக்கின்றாள். (அகம், ௩௨)

இதனைக் கேட்ட தலைவி தன் அறிவுடைமையால் தோழி கூறுவதின் உட்பொருளை அறிந்து தானும் உடன்

படுகிறாள். தலைவியின் உடன்பாடு பெற்ற தோழி தலைவனுக்கு ஓர் இடம் காட்டிப் "பகற்குறியில்" வாவென்று பகருவாள்.

பகற்குறி :—பகலில் காதலர் பழகுமிடத்தைப் பகற்குறி என்பர். தலைவி தன் தோழியொடு பகலில் தினைப் புனத்தில் கிளி படியாவண்ணம் காவல் காப்பாள். தலைவன் அவண் வருவான்; இருவரும் கூடிக் கிளியோட்டுவர்; ஊசலாடுவர்; சுனை மூழ்கிக் குளிப்பர்; அருவியில் பாய்ந்து ஆடுவர்; குவளை மலர் பறித்துக் களிப்புறுவர்;. இங்ஙனம் விளையாடுங்கால் தினைப்புனத்துக் காவலை மறப்பர். அது கண்ட தோழி, தலைவியைப் பார்த்து,

'அறலன்ன கூந்தலாய்! தலைவனொடு விளையாடுதலையே விரும்பிப் புனத்தை மறந்தனையே. விளையாட்டொடு இடை இடையே பரணிலிருந்து எழுந்து கிளி ஓட்டிக் கொண்டிரு. அங்கும் இங்கும் போய்க் கிளியை அதட்டு. இல்லையேல் அன்னை நின் குரல் கேளாது கிளிகடி பாடலை நீ அறியாய் என எண்ணிக் காவலுக்கு வேறொருவரை வைத்துவிடுவாள். பின் நீ நின் தலைவனைக் காணல் அரிதாகும்' என்று கிளி ஓட்டச் சொல்லுவாள். (அகம், உஅ) அன்னையை ஏமாற்ற அவள் கூறும் இச்செய்தி இன்பூட்டுகின்றதன்றோ!

"நின், பூக்கெழு தொடலை நுடங்க வெழுந்தெழுந்து
கிள்ளைத் தெள்விளி யிடையிடை பயிற்றி
ஆங்காங் கொழுகா யாயின் அன்னை
சிறுகிளி கடிதல் தேற்றாள் இவளெனப்
பிறர்த்தந்து நிறுக்குவ ளாயின்
உறற்கரி தாகுமவன் மலர்ந்தமார்பே!" (அகம் - உஅ)

பகற்குறி யிடையீடு :—(பகலில் பழக நேரிடும் தடைகள்) தினை முற்றி அறுக்கவே புனக்காவல் நின்றுவிடும்.

தலைவி வீட்டினின்றும் வெளிவருதற் கியலாது. அஃதன்றி அவளுக்கு வீட்டில் காவல் கடுமையாக இருக்கும். ஆகவே பகற்குறி வாரற்க இரவுக்குறி வருக என்று இயம்புவர். அவர் இயம்பும் மொழி அவர் தம் உள் அன்பையுங் காட்டும். என்னை?

'தலைவ! பகல் வாராதே! ஏன் எனில் தாய் கண்ணினும் கடுமையான அன்புடையாளாகித் தலைவியைக் காப்பள். தந்தையோ, தலைவி வெளிவந்தால், இளைய மகளே! நின் சிறடி சிவக்க எங்குச் செல்கின்றாய்? என்று கேட்பான். தலைவியோ ஒருயிர் இருடல்கொண்ட இருதலைப் புள்ளைப்போல் நின்னிடம் நிறைந்த அன்புடையவளாய் இருக்கின்றாள்.'

"யாயே, கண்ணினுங் கடுங்கா தலளே
எந்தையும் நிலனுறப் பொறாஅன் சீறடிசிவப்ப
எவனில குறுமகள் இயங்குதி என்னும்
யாமே, பிரிவின் றியைந்த துவரா நட்பின்
இருதலைப் புள்ளின் ஓருயி ரம்மே." (அகம் - கஉ)

என்று தோழி கூறும் மொழிகள் பகற்குறியின் இடையீட்டை நன்கு காட்டும்.

இரவுக் குறி :—தலைவன், பகற்குறி பழுதுபடவே இரவில் குறியிடத்திற்கு வருவான். அவன் வரும் வழியோ பலவகை இடையூறுகள் நிறைந்த வழியாக இருக்கும். தலைவியின்மீது கொண்ட தணியாக் காதலால் அருவழியில் ஒரு தனியே வருவான்.

இரவுக் குறியில் தலைமகன் வந்தமையைத் தோழி தாயொரொடு படுத்திருக்கும் தலைவிக்கு அறிவிப்பாள். அவள் அறிவிக்கும் வகை அறிந்து இன்புறத் தக்கது. தாயர் உறங்கி விட்டனரா என்பதைத் தோழி முதலில் அறிய வேண்டும். இல்லையேல் தலைவியை ஏன் அழைக்கின்றாய்

என்று கேட்டு ஏதம் விளைப்பர். ஆதலின் தாய் தாயின்றமையை முன் அறிகிறாள். தோழி ஒரு நாள் தாயை விளித்து, 'அன்னாய்! நம் தோட்டத்தில் அருவி பாட, அதைக் கேட்டுக் குளிர்ந்த சுனையிலுள்ள கூதளம் குழையக் காரணம் யாது?' என்று முதலில் கேட்டாள். பதில் இல்லை. பின்னும் 'தாயே! வரக்கூட்டிறாற் போன்ற தளிர்களை யுடைய அசோக மரக்கிளையில் நாம் ஆடுவதற்காகக் கட்டிய ஊசற் கயிற்றைப் பாம்பென எண்ணி இடி இடிக்கின்றதே. இடியால் அடிமரமும் சாய்ந்து விழுகின்றதே! ஈதென்ன விந்தை' என்று கேட்டனள். இரு வினாவிற்கும் விடையில்லை. இல்லையாகவே அன்னையர் தாயின்றமையைக் கண்டு தலைவியை அழைத்துச் சென்றாள்.

> "அன்னாய் வாழிவேண் டன்னை, நம் படப்பைத்
> தண்ணயத் தமன்ற கூதளங் குழைய
> இன்னிசை அருவிப் பாடும் என்னதூஉங்
> கேட்டியோ, வாழிவேண் டன்னைநம் படப்பை
> ஊட்டி அன்ன ஒண்டளிர்ச் செயலை
> ஓங்குசினைத் தொடுத்த ஊசல் பாம்பென
> முழுமுதல் துமிய உருமெறிந் தன்றே
> பின்னுங் கேட்டியோ எனவுமஃ தறியாள்
> அன்னையுங் கனைதுயின் மடிந்தனள் அதன்றலை
> மன்னுயிர் மடிந்தன்றாற் பொழுதே, காதலர்
>
> வந்தனர் வாழி தோழி!" (அகம் - கஅ)

தலைவன் இரவுக் குறியில் தலைவியொடு கூடி மகிழ்ந்து செல்லும் செய்தி (அக. கசஉ, கருஉ, கஅஉ, நடஅ, உஅஉ) முதலிய பாடல்களில் அறியலாம்.

ஒருநாள தலைமகள் இரவில் தன் வீட்டுத் தோட்டத்தில் தனித்திருந்ததைச் செவிலி கண்டுவிட்டாள். கண்டவள் மறுநாள் தன் மகளைக் கண்டு,

'ஏடி, நேற்று மழை பெய்துவிட்ட நள்ளிரவில் தோட்டத்தின்மீதுள்ள பரணில் உனக்கு என்ன வேலை? நின்பொற்குழை புத்தொளிவீச, பின்னிவிட்டகூந்தல் பேரழகு ஈன, மலையிடையே மயில்கள் ஏறி யிறங்குவது போல் பரண்மீது ஏறி இறங்கினையே யாது காரணம்? என்றனள்.

மங்கை மறுமொழி கூறாது நாணத்தால் மயங்கி நின்றாள். அணித்தே நின்ற தோழி அளிக்கின்றாள் மறுமொழி. "அம்மே! இவளை வருத்தாதே! யான் சொல்வதை விரும்பிக் கேள்? நம் தலைவியா நள்ளிரவில தோட்டத்துப் பரணில் தோன்றினாள். நன்று! நன்று! தலைவியின் தன்மையைத் தெரியாயோ? இரவில் விளக்கில்லையேல் இல்லத்திலும் தனித்திருக்க நடுங்குவாள்; கூகை குழறினும அஞ்சி அரண் புகுவாள்; அதுவே யன்றி முருகனை ஒத்த வலிமையுடைய தந்தை வீட்டிலிருக்க இவளா புறத்தே செல்வாள். ஒருகால் நம் தோட்டத்தில் வாழும் தெய்வ அணங்கு, தன் பலியுண்ணத் தான் விரும்பும் வடிவங்கொண்டு வரும். அதனைக் கண்டு தலைமகள் என்று கருதினையோ! அன்றி உலகில் விழிப்பிடத்துப் போலக் கனவானது தூங்குபவர்களைக் கனவின்கண் மருட்டுதலும் உண்டு. அவ்வாறு நீ மருண்டனையோ" என்றாள்.

"உருமுரறு கருவிய பெருமழை தலைஇப்
பெயலான் றவிந்த தூங்கிருள் நடுநாள்
மின்னுநிமிர்ந் தன்ன கனங்குழை யிமைப்பப்
பின்னுவிடு நெறியிற் கிளைஇய கூந்தலள்
வரையிழி மயிலின் ஒல்குவனள் ஒதுங்கி
மிடையூர் பிழியக் கண்டனென் இவளென
அலையல் வாழிவேண் டன்னைநம் படப்பைச்

குருடைச சிலம்பிற் சுடர்ப்பூ வேய்ந்து
தாம்வேண் டுருவின் அணங்குமார் வருமே
நனவின் வாயே போலத் துஞ்சுநர்க்
கனவாண்டு மருட்டலும் உண்டே, யிவள்தான்
சுடரின்று தமியளும் பனிக்கும், வெருவர
மன்ற மராஅத்த கூகை குழறினும்
நெஞ்சழிந் தரணஞ் சேரும், அதன்றலைப்
புலிக்கணத் தன்ன நாய்தொடர் விட்டு
முருக னன்ன சீற்றத்துக் கடுந்திறல்
எந்தையும் இல்ல னாக
அஞ்சுவள் அல்லளோ இவளிது செயலே." (அகம் - ௧௫௮)

அதனைக் கேட்ட அன்னை வேறு மொழி கூறாது அப்பால் அகன்று சென்றாள். அன்பர்களே! ஒரு வினாவை எழுப்பி அதற்கு அறிவு நிரம்பிய ஆற்றலொடு விடை கொடுக்கும் புலவர் திறமையை எச்சொல்லால் போற்றுவது.

தலைவி இரவுக்குறியில் வீட்டினின்று வெளி வருங்கால் தன் காலில் அணிந்த சிலம்பொலியைப் பிறர் கேட்கா வண்ணம் அடக்கி வருவாளாம்.

" இளமழை சூழ்ந்த மடமயில் போல
வண்டுவழிப் படரத் தண்மலர் வேய்ந்து
வில்வகுப் புற்ற நல்வாங்கு குடச்சூல்
அஞ்சிலம் பொடுக்கி அஞ்சினள் வந்து." (அகம் - ௧௯௮)

பூவேய்ந்து வண்டு மொய்க்கும் தலைவி கூந்தலுக்கு இளமழை சூழ்ந்த மடமயிலை ஒப்பிடுகின்றார் புலவர். (௧௪௮)

தலைவன் தன் எஃகு வழிகாட்ட, கண்ணி சூடி ஓர் இரவு தலைவி இல்லத்துக்கு வந்தனன். வந்தவனை முருகன் என்று எண்ணி முகமன் கூறித் தாய் வழிபாடு செய்தாள்.

அதைக் கண்ட தலைவி உண்மை வெளிப்படில் தம் நட்பு என்னாகுமோ என்றஞ்சினள். (அகம - உஎஉ)

வேறொருநாள், எருத்தின் திமில் மேல் கயிறு புரளு வதுபோலத் தன் கழுத்தில் பூமாலை அசைய இரவில் வந்த தலைவனைச் செவிலி கண்டனள், கண்டவுடன் இல்லத் திருந்த தலைவியை நோக்கி, "அம்மே! நீ மிகவும் நல்ல வள்" என்று சொல்லி நகைத்தனள். (உசஅ)

ஏதமிக்க இரவு வழியில் வந்து சென்ற தலைவன் தன் ஊருக்கு இடையூறின்றிச் சேர்ந்ததை அறியக் கொம்பு ஊதுமாறு தலைவி வேண்டுவாள்,

"எற்கண்டு பெயருங் காலை யாழநின்
கற்கெழு சிறுகுடி எய்திய பின்றை
ஊதல் வேண்டுமாற் சிறிதே வேட்டொடு
வேம்பயி லழுவத்துப் பிரிந்தநின்
நாய்பயிர் குறிநிலை கொண்ட கோடே." (அகம் - நகஅ)

இரவுக்குறி இடையீடு :—இரவில் தலைவன் வரும் வழி யிலோ அல்லது தலைவி புறப்படும் வகையிலோ பல இடை யூறுகள் தோன்றுகின்றன. அவை குறித்த பாடல் பல வற்றில் இவண் ஒன்றின் கருத்தைக் காணுவம்.

## ந. இரவுக்குறி இடையீடு

ஒரு தலைவி இரவில் குறி யிடத்திற்குச் செல்லப் புறப் படுகிறாள். புறப்படுங்கால் அவளுக்குத் தோன்றிய இடை யூறுகள் பலப் பலவாம். அவை யனைத்தையும் அடுக்கு அடுக்காகக் கூறுகின்றாள். அம் மொழிகள் நம்மையும் அலமரச் செய்து, அவள்பால் இரக்கத்தை எழுப்புகின்றன. அவள் கூறும் மொழிகள் இவை :

ஊரில் திருவிழா நிகழின் தெருவில் ஓயாது மக்கள் செல வர இருப்பர்; விழா இல்லை என மகிழின் கள்ளுண்டு களித்தவர் வீதியில் தூங்காது திரிவர். ஊரார் உறங்கினும் வீட்டில் கடுஞ்சொல் உடைய அன்னை உறங்காள். அன்னை உறக்கம் கொள்வளேல், ஊர்காவலர் உறங்காத கண்ணராகி உலாவி வருவர். அவர் உறங்கினும் கூரிய பற்களை உடைய நாய் ஓயாது வழிப்போவாரைக் கண்டு குரைத்து ஊராரை எழுப்பும். நாய் வாய் அடங்கின், நிலா பகலென வீதி வீதியில் செல்வோரை விளக்கும். திங்கள் மறையினும் கூகைச் சேவல் மிகக் குழறும். அது நிற்க மனையிடையுள்ள கோழி கூவிக் குடும்பத்தினரை எழுப்பும். இவையெல்லாம் ஒருங்கு அடங்கிய ஒரு நாள் தலைவர் வாரார். இத்தகைய பல இடையூறுகளைக் கொண்டதாம் இரவுக்குறி.

“இரும்பிழி மாரி அழுங்கன் மூதூர்
விழவின் றாயினுந் துஞ்சா தாகும்
மல்ல லாவண மறுகுடன் மடியின்
வல்லுரைக் கடுஞ்சொ லன்னை துஞ்சாள்
பிணிகோ ளருஞ்சிறை யன்னை துஞ்சின்
துஞ்சாக் கண்ணர் காவலர் கடுகுவர்
இலங்குவே லிளையர் துஞ்சின், வைஎயிற்று
வலஞ்சுரித் தோகை ஞாளி மகிழும்
அரவவாய் ஞமலி மகிழாது மடியிற்
பகலுரு வுறழ நிலவுக்கான்று விசும்பின்
அகல்வாய் மண்டிலம் நின்றுவிரி யும்மே
திங்கள் கல்சேர்பு கனையிருண் மடியின்
இல்லெலி வல்சி வல்வாய்க் கூகை
கழுதுவழங் கியாமத் தழிதகக் குழறும்,
வளைக்கட் சேவல் வாளாது மடியின்
மனைச்செறி கோழி மாண்குர லியம்பும்
எல்லாம் மடிந்த காலை யொருநாள்
நில்லா நெஞ்சத் தவர்வா ரலரே.” (அகம் - கஉஉ)

இவ் விடர்ப்பாடு கண்டு தலைவி உள்ளம் என்ன பாடு படும்! இயம்பவும் வேண்டுமோ! தலைவிக்கு ஒருவகையிலா தடை? பல வழிகளிலும் தடை. [illegible] ணபம [illegible] ளுக்கு [illegible] டையிலல்லவா [illegible] க்கை கொள்ளும். இவ்வாறாகத் தலைவனும் தலைவியைக் காணாது வருந்திச் செல்லும் பாடல்கள் பல உள. அவ்விடத்துள் ஒரிடத்து அவன் தலைவியினிடத்துத் தனக்குள்ள பெருமதிப்பை,

"ஆன்ற கற்பின் சான்ற பெரியள்" (அகம் - ககஅ)

என்ற சொற்களால் கூறிக் காட்டுவது பாராட்டுதற்குரியது.

இவ்வகையாகப் பல இடையூறுகளைக் கண்ட தோழி தலைவனை விரைந்து மணம் செய்துகொள் என்று வேண்டுவாள். அவ்வேண்டுகோள் ஒன்றில தோழி,

"கழியக் காதல் ஆயினும் சான்றோர்
பழியொடு வரூஉம் இன்பம் வெஃகார்" (அகம் - ககஉ)

என்று கூறும் அறிவுரை அவர்தம் கற்பையும் களவின் குறிக்கோளையும் நனி காட்டும்.

இங்ஙனம் இடையூறுகளால் தலைவனைக் காணப்பெறாத தலைவி வருந்தி உடல் மெலிவள். அதுகண்ட அன்னையர் உண்மை யறியாது தெய்வத்தால் இவ் வேறுபாடு வந்ததெனக் கருதி வேலனுக்கு வெறியாட்டெடுப்பர்.

வேலன் வெறியாட்டு:—வேலனுக்கு அலரி மாலையைச் சூட்டி ஆடு அறுத்துக் குருதியொடு கலந்த தினை அரிசியைப் பலியாக வைத்துப் பூசை செய்வர். அவன் தலைவிக்கு வந்த நோய் முருகனால் நேர்ந்தது என்று கொண்டு முருகன் புகழ் கூறிச் சூத்திரப் பாவைபோல் கைவிரித்து ஆடுவான். வெறி பாடிய காமக்கண்ணியார் என்னும் புலவர் அகம் கூஅ-ல் இதை விளக்கமாகக் கூறுகிறார். இவ்

வெறியாட்டைக் கண்டு தலைவியும் தோழியும் கூறும் மொழிகள் படித்து இன்புறுதற்குரியன.

ஒருநாள் அன்னை வெறியாட்டிற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்தனள். அதனைத் தலைவி கண்டாள். கண்டவள் தோழியைப் பார்த்துக் கேட்கின்றாள். தோழி! இவ் வெறியாட்டால் நம் நோய் தணியாவிட்டால் களவு வெளிப்படுமே என் செய்வது? (அகம் : ௯௮) வேலனைக் கண்டு நம் முருகன் இரவில் காட்டுமான் அடிவழி ஒற்றி வேட்டைக்கு வருவனோ என வினவுவம் வா! (அகம். ௩௮௮) முருகனால் ஒருகால் நோய் நீங்கிவிட்டால் தலைவன் வேறு கருதி நம் அன்பில் மாறுபடுவானோ நீ கூறு என்பள் (அகம் - ௯௮)

தலைவி தோழிக்கும் தோழி தாயாருக்கும் தாமே தலைவனொடு தனக்கு உண்டாகிய நட்பை அறிவித்தலும் உண்டு. அங்ஙனம் அறிவித்தலை, அறத்தொடு நிற்றல் என்று கூறுவர். அறத்தொடு நிற்றல் என்ற சொல்லை உன்னுக! அதன் உயரிய பொருள் தெற்றென விளங்கும். அறம் பலவகைப்படும். உள்ளதை உள்ளவாறு உணர்த்தல் ஒருவகை அறம்.

தலைவி தலைவனிடைத் தோன்றிய தன் அன்பின் உண்மையைத் தோழிக்கு அறிவிப்பாள். தோழி அதனைச் செவிலிக்கு அறிப்பாள். செவிலி அன்னை, தந்தை இவர்கட்கு அறிவிப்பாள். அஃதறிந்த அவரும் ஆவன செய்வர். இன்றோ, காதல் என்னென்னவோ திருவிளையாடல்களைப் புரிகின்றது! பெற்றோரையும் உற்றோரையும் புறக்கணிக்கின்றது!

தலைவியும் தோழியும் தமது ஒழுக்கத்தைக் கூறுங்கால் முதலில் தலைவனைக் கண்ட நிகழ்ச்சியைக் கூறி அறி

விப்பர். நாம் காதலர் காட்சியில் குறிப்பிட்ட செய்திகள் அறத்தொடு நிற்றல் துறையில் கூறப்பட்டனவே.

இதனை அறிந்த தாயாரும் பிறரும் தலைவியை, அவள் உள்ளத்தைக் கவர்ந்த ஆடவனுக்கே மணம் செய்து கொடுக்க முயலுவர்.

இச் செய்திகளை எல்லாம் தெரிந்த தலைவன் இடையூறின்றி என்றும் ஒன்றுகூடி வாழ வரைவு மலிந்து வருவான்

வரைவு மலிதல் :—தலைவன் திருமணத்திற்கு வேண்டிய பொருளொடு தக்க சான்றோர் பலரைத் தனது கருத்தைத் தலைவியின் இல்லத்தார்க்கு அறிவிக்க அழைத்து வருவன். அச் செய்தி கேட்ட தலைவி அளவிலா மகிழ்ச்சி அடைவள். இதனை ஓர் ஆசிரியர் ஒப்பற்ற உவமையால் விளக்குகிறார். அவ் உவமை ஓவா இன்பத்தை ஊட்டவல்லது! என்னை?

நீண்டநாள் மழையே யில்லை. உயர்திணையே அன்றி அஃறிணைப் பொருள்களும் அலமந்து இருக்கின்றன. குளமெல்லாம் நீர் வற்றிவிட்டது. நாஞ்சில்களெல்லாம் தொழிலின்றித் தூஞ்சுகின்றன. இந்நிலையில் ஒருநாள் இரவு பெருங் குளம் நிறைய மழை பெய்ததாம். மழை பெய்த மறுநாட் காலை மக்களேயன்றி மாக்களும் மகிழ்ந்தனவாம். அம் மகிழ்ச்சியெலாம் ஒருங்கு திரண்டு அவள் உள்ளத்துக் குடிகொண்டது போன்று இருந்ததாம் தலைவன் வரைவொடு வந்த செய்தி கேட்ட தலைவிக்கு. (அகம் : கசஉ).

வேறொரு பாடலில் தலைவன் வரைவொடு வந்த செய்தி அறிந்து தோழி தலைவியை வாழ்த்துகிறாள். தலைவி! நீயும் நின்னொடு புணர்ந்த தலைவனும் கெடுதல் இல்லாத இவவுலகத்து என்றும் நிலைத்து வாழ்வீராக! தலைவன் கன

விலும் நின்னைப் பிரிவறியான். முதல்நாளில் கண்டதை விடத் தன் பண்பினுல் பேரன்புடையவனுக விளங்குவான். அவனோடு கூடி இனிதே வாழ்க. (அகம் : ௧௱௮)

இங்ஙனம் தலைவியும் தோழியும் மகிழ, வரைவொடு வந்த தலைவனுக்குத் தலைவியின் தாய்தந்தையரும் உடன்பட்டு வளர்பிறையில் ஒரு நாள் குறித்துக் கற்பிற் சிறந்த மங்கையர்களையும் மைந்தர்களையும் கூட்டிக் காதலிருவருக்கும் மணம் நடாத்தி மகிழ்வர். காதலர்களும் காகத் திரு கண்மணிபோன்று கலந்து வாழ்வர்.

மகிழ்ச்சி வாழ்க்கை :— ஒருநாள் இக் காதலரின் வாழ்க்கையைக் காணத் தோழி தலைவியின் இல்லத்திற்கு வந்தாள். வந்த தோழிக்குத் தலைவி தமது வாழ்க்கையைக் கூறுகின்றுள். அவள் கூறும் வாழ்க்கையைக் கூர்ந்து நோக்குங்கள்! இல்லறம் நல்லறம் எனப்படுவது எதனுல் என்பது நன்கு விளங்கும்.

“தோழீ! நீ அன்று நின் வல்லமையால் கண்டு கூறிய அருங் குணங்கள் பலவும் அவனிடை அழியாது இன்றும் இருந்து வளர்ந்து வருகின்றன. நற்குடிக்கேற்ற தன் பண்பில் சிறிதும் நழுவான்; கூடிய என்னைக் கணமும் பிரியான். பொய், குறளை முதலிய கொடுமொழிகளை நாவால் மறந்தும் மொழியான்; என்பால் அளவிலா அன்புகொண்டிருக்கிறுன். பாணர்களின் இனிய பாட்டினும், புதிதாக அவனைக் கண்டு மணந்த நாளினும் அளவிலா இன்பம் அளித்து வருகின்றுன். இதனைக் காண்!”

“குடிநன்கு உடையான் கூடுநர்ப் பிரியலன்
கெடுநா மொழியலன் அன்பினன் எனநீ
வல்லகூறி வாய்வதிற் புணர்த்தோய்
நல்லை காணில் காதலந் தோழீ!

கடும்பரிப் புரவி நெடுந்தேர் அஞ்சி
நல்லிசை நிறுத்த நயவரு பனுவல்
தொல்லிசை நிறீஇய உரைசால் பாண்மகன்
எண்ணுமுறை நிறுத்த பண்ணி னுள்ளும்
புதுவது புனைந்த திறத்தினும்
வதுவை (நா)ளினும் இனியனால் எமக்கே. (அகம்:௩௫௨)

இவ் வாழ்க்கையல்லவோ சீரிய வாழ்க்கை. இதனி னுஞ் சிறந்த வாழ்வும் உண்டுகொல்! இவ் வொன்றிய அன்பர்தம் வாழ்க்கையில் துன்பத்திற்கு இடன் உண்டோ? துயரத்திற்கு வழியுண்டோ? அவர் வாழ்நாள் முழுவதும் இன்பமன்றோ நுடிகொள்ளும்! இவ்வின்ப அன்பு வாழ்வின ரிடை, யாண்டு பலவாக நரையும் திரையும் நண்ணுமோ? அவர் என்றும் இளையராய் இன்பம் துய்த்து இறும்பூது எய்தி வாழ்வார்.

இருபத்துநான்கு வயதுக்குள் நரைதிரை நண்ணும் இக்கால உலகம் அவ்வாழ்வை அறியுங்கொல்!

## ௫. குறிஞ்சியிற் காணும் அரிய செய்திகள்

ஒரு தலைவி உரைக்கின்றாள்: "தோழீ! நேற்றுப் புனத்துள் போந்தவனைக் கண்டவள் யான் ஒருத்திதானா? இல்லையே. பலரும் அவனைப் பார்த்தனமே. அங்ஙனம் அவனைப் பார்த்த பலருள்ளும், யான் மட்டும் துயில்பெறாது வந்தவனை எண்ணி வருந்துகின்றேன். பிறரெல்லாம் நன்கு துயின்று நலமுறுகின்றனரே. ஈதென்ன விந்தை!" (அகம் - ௮௨).

தோழி தலைமகளைக் கேட்கின்றாள்: "பெண் ணணங்கே! நின் தலைவனைக் காணா வருத்தம் ஒன்று; அன்னையின் கடிய பார்வை ஒன்று; மாலைப்பொழுது ஒன்று;

அனைத்தும் நின்னை வருத்தவும் நீ எங்ஙனம் வாழ்கின்றனை?" என்றாள்.

அதற்குத் தலைவி அளிக்கின்றாள் அரியதோர் மறுமொழி. அவ்வொருமொழியில் எவ்வளவு உயர்ந்த பொருள் மிளிர்கின்றதென்பதைக் காணுங்கள்.

"தோழி! என்னைத் தலைவன் நினைக்காவிட்டாலும் அத் தலைவன் வாழும் மலையை நான் நாடொறும் தவறாது காணுவதால் வாழ்ந்து வருகின்றேன்," என்பதாம். (அக - ௩௭௮).

தோழியிடம் தலைவி மொழிவாளாய் "தோழீ தலைவன் இரவில் கல்லும் முள்ளும் நிறைந்த கடிய வழியில் வருகின்றான் என்பதைக் கண்டு, அவன் தளிரடி வருந்தா வண்ணம், அவ்வடியைத் தாங்க, என்னுள்ளம் அவன் வரும் வழியிற் சென்றது" என்று சொல்லும் அழகு அறிந்து வியத்தற்குரியதன்றோ! (அகம் - ௧௨௮).

'பிறருற்ற துன்பத்திற்குப் பிறர் வருந்துவர். யாமுற்ற துன்பத்திற்கு யாமல்லாது பிறர் வருந்துவரோ? அத் துன்பத்திற்குத் தஞ்சம் யாமே' என்ற நீதிக்கருத்தைப்,

"பிறருறு விழுமம் பிறரும் நோப
தம்முறு விழுமம் தமக்கோ தஞ்சம்" (அகம் : ௧௮௨)

என்றும்,

'நட்பினருடைய துன்பத்தைப் போக்கியருளலும் அறிவுடையோரின் சிறந்த குணத்துள் ஒன்றாகும்' என்ற கருத்தை,

"புணர்ந்தோர் புன்கண் அருளலு முணர்ந்தோர்க்
கொத்தன்று மன்றால்" (அகம் : ௧௦௮)

என்றும் கூறுவன அறிதற்பாற்று.

தலைவி தலைவனைக் காணுவிடத்து, அவன் மலையினின் றும் வரும் ஆற்றோடு புலந்து, 'தலைவன் மலையினின்றும் வரும் யாறே; சேர்ந்தாரை வருத்துதல் நின் நாடனுக்கு அடுக்குமோ? உரைப்பாயாக! யான் புலத்தற்கு அஞ்சி, அவன் மலையிலுள்ள பூவைப் போர்த்து, மறைந்து செல் லும் நீ யாதல் எந்தை கானத்தைச் சேர்ந்து செல்லுக. செல்லின் குறைவுண்டோ!' என்று கூறுகிறாள். (அக-நூஉ).

## ரு. களவொழுக்கம்

களவெனப்படுவது யாது? பிறர்க்குரிய பொருளை அவரறியா வண்ணம் கவருதல் "களவு" எனப்படும். அக்களவு பல திறத்தது. அவற்றுள் உள்ளத்தைக் களவாடுதலும் ஒன்று. "என் உள்ளம் கவர் கள்வன்" என வரூஉம் ஆன்றோர் மொழியை உன்னுக! அக் களவே அகத்திணையில் குறிப்பிடப்படுவதென அறிக தலைவன் தலைவி உள்ளத்தை அவளறியாமல் கொள்ளை கொள் கிறான். தலைவியும் தலைவன் நெஞ்சத்திடைக் குடி புகு கிறாள். இவை ஒருவரையொருவர் முன்பின் அறியாத நிலையில் தோன்றுவவாகும். அவ் விருவர் உள்ளத்தும் தோன்றியதோர் புத்துணர்ச்சியை, அவர் தமக்கேயன்றிப் பிறர்க்குப் புலனாகாது. அவர் தம் உள்ளத்தைப் பிறர் அறிதல் எளிதாகுங் கொல்!

தலைவி தலைவனைக் காணுதல் தொடங்கி மணந்து மனையில் வாழும் வரை நிகழும் செயல்களை எல்லாம் கள வொழுக்கத்தின்பாற்படுத்துக் கூறுவர் புலவர். கள வொழுக்கத்தின் பிறப்பிடம் குறிஞ்சியே. குறிஞ்சிப் பாடல்கள் பலவும் களவைக் கற்பாக்க முயலும். காதலர்

இருவர் கருத்தும் ஒன்றிய செய்தியை உலகறியச் செய்வது கற்பின் குறிக்கோளில் ஒன்றாகும்.

ஒரு சிலர் களவு என்ற சொல்லைக் கேட்டுக் கடிவர்! களவின் பெற்றிமையைக் காணார் அவர்.

"யாமே, பிரிவின் றியைந்த துவரா நட்பி
னிருதலைப் புள்ளி னோருயி ரம்மே." (அகம் : கஉ)

என்னும் இத்தகைய அன்புடைய காதலர் ஒழுக்கத்தையா கடிவது? இதனைக் கடிவது மடமையன்றோ? களவொழுக்கத்தில் கூறப்படும் தலைவனோ,

"குடிநன் குடையன் கூடுநர்ப் பிரியலன்
கெடுநா மொழியல னன்பினன்." (அகம் : க௫உ)

எனவும், தலைவியோ,

"ஆன்ற கற்பின் சான்ற பெரியள்" எனவும், அவர் தம் அன்போ,

"தண்டாக் காதலுந் தலைநாட் போன்மே." (அக. ௩௩உ)

"கனவிலும் பிரிவறி யலனே யதன்றலை
முற்றான் கண்ட ஞான்றினும்
பிற்பெரி தளிக்குந்தன் பண்பி னானே." (அக. கஎஅ)

என்றும் கூறும் குறிஞ்சிப் பாடல்கள் களவின் பெற்றிமையை நன்கு காட்டும்.

உள்ளன்பில்லாத, ஒரு சில நலம் பற்றிக் காலையில் கூடி மாலையில் பிரியும் கயவர்தம் ஒழுக்கத்தை அகத்திணையில் காணும் களவொழுக்கத்தோடு ஒப்பிடுவது மடையான் ஆட்டத்தை மயிலுக்குப், கோட்டான் பாட்டைக் குயிலுக்கும் ஒப்பிடுவதுபோன்றதென எண்ணி உலகம் சிரிக்கும்.

நாட்டிடைப் பழந்தமிழ் மணம் கால் கொள்ளல் வேண்டும். அம் மணம் தோன்றுமேல் நாடு நலனுறும்.

அஃதின்றித், தமிழ் நாட்டின் புகழ் மங்குகின்றது. இளந் தமிழர்காள்! எழுக! எழுக! நாட்டிடைப் பழந்தமிழ் மணத்தைப் பரப்புக!

உவமைகள் :—குறிஞ்சித் திணையில் கூறப்படும் உவமைகள் பல சிறந்தன. ஒவ்வொரு பொருளையும் ஊன்றி நோக்கி ஒப்புமை கூறும் நுண்ணறிவு பாராட்டுதற்குரியது. இவண் சிலவற்றை எடுத்துக் காட்டுவல். பலவற்றைப் படித்தறிக.

1. புலவர் பலர் பெண்கள் கைக்கு மூங்கிலை ஒப்புக் கூறுவர். ஆயின், மூங்கிலின் நீட்சியா, நிறமா, தோற்றமா, தூங்கும் தன்மையா எஃது இணையாவதென்பதை நன்கு தெரிவித்திலர். குறிஞ்சியில் மூங்கிலின் கணுக்களுக்கு இடையுள்ள பகுதியே தோளை ஒப்பது என்று கூறப்படுகின்றது. (அகம் - கஅ, கருஉ)

2. புலவர்கள் நாவிற்கு இலவம் பூ உவமை. (கசஉ)

3. பெண் புலியின் நகத்திற்கு முருக்கம் பூவின் அரும்பு உவமை. (கூசஉ)

4. சிறிய கரையையுடைய பெரிய குளத்துக் காவலன்போலத் தாய் தலைவிக்குக் காவல். (உருஉ)

5. காமம் நாணைக் கடத்தற்கு உப்பால் அணைகட்டிய வெள்ளம். (உ0அ)

6. பன்றியின் கொம்பிற்கு வயிரமும், மயிருக்கு மூங்கிலின் வேரும் ஒப்பு. (களஅ)

7. இரும்பு, கானவன் கைக்கு உவமை. (களஉ)

8. பெண்களின் கண்ணுக்கு ஒப்பு மழைக்காலத்திலே மலரும் பிச்சி அரும்பின் சிவந்த புறம். (சஉ)

9. மலை அருவிக்கு யானைமீது கட்டிய வெண்கொடி உவமை. (௩௫௮)

10 தலைவன் சென்று சென்று வருதற்கு ஊசற் கயிறு உவமை. (௩௭௨)

11. காவலர் கண்ணிற்படாது மறைந்து யானை செல்லல் தாயார் அறியாமல் தலைவன் வருதற்கு உவமை.(௩௦௮)

12. வேங்கைப் பூவிற்கு, புலியின் மேலுள்ள புள்ளிகள், மயில் கொண்டை; தளிருக்கு, ஞாயிற்றின் தோற்றம் ஒப்பு (௩௬௮, ௨௬௨)

13. தலைவன் தலைவியோடு கூடிக் களித்தற்குக் காவிரி யாடிக் களித்தல் ஒப்பு. (௬௨)

14. பல வரலாற்று உவமங்கள் உள. அவை வரலாற்றுப் பகுதியில் விளக்கப்படும்.

எழுத்தோவியம் :—பெண்களின் வடிவழகைப் பாடிய பாக்கள் பல. ஒன்று காட்டலாம்.

“ தாவில் நன்பொன் தைஇய பாவை
விண்டவழ் இளவெயிற் கொண்டுநின் றன்ன
மிகுகவி னெய்திய தொகுகுர லைம்பால்
கிளையரி நாணற் கிழங்குமணற் கீன்ற
முளையோ ரன்ன முள்ளெயிற்றுத் துவர்வாய்
நயவன் றைவருஞ் செவ்வழி நல்யாழ்
இசையோர்த் தன்ன இன்றீங் கிளவி
அணங்குசா லரிவையை நசைஇ.” (அகம் : ௨௧௨)

குற்றமற்ற பொன்னால் இயற்றப்பட்ட பாவையை யொத்ததாம் வடிவழகு. அப்பாவை இளவெயில் கொண்டு இலங்குவதுபோல் கூந்தல் பின்புறத்தே விளங்குகின்றதாம். கிழங்கினின்றும் மணலிடை முளைத்து வரும் நாணல் முளையை ஒப்ப ஈறும் பற்கள் ஒளிவிடுகின்றனவாம். மொழி யாழின் இன்னிசை போன்று இனிமை பயக்கின்றதாம்.

## கா. விலங்கு பறவை முதலியன

1. யானை :—இசை கேட்ட இளயானை.

ஒரு பாறைமீது கானவன் கள்ளுண்டு மகிழ்ந்து இருக்கின்றான். அவன் மனைவியின் சாந்து பூசிய கூந்தலைக் காற்று உலர்த்துகின்றது. அவள் கூந்தலைக் கையால் கோதிக் கொண்டு குறிஞ்சிப் பாடலைப் பாடுகின்றாள். அவள் பாடலின் இசையை ஆண்மை மிக்க ஓர் இளயானை கேட்டதாம். கேட்ட யானை இசை இன்பத்தால் உண்ணக் கவர்ந்த தினைகளை உண்ணவில்லையாம்; நின்ற நிலையினின்றும் அப்பால் பெயரவில்லையாம்; உறங்காத அதன் கண்களும் இசை கேட்டு உறங்கினவாம். (அகம் : ௧0௨)

## எ. செறுபகை வாட்டிய செம்மல் யானை

ஆண் யானையொன்று மூங்கிலின் முளைகளைக் கிளையோடு கூடித் தின்று நீர் அருந்தச் சென்றதாம். செல்வழியில் தன்னைக் கொல்லக் குறி பார்த்து நின்ற புலியைக் கொம்பால் குத்திப் பொங்கக் குத்திக் கொன்றது. புலி கொன்ற பெருமிதத்தால் செம்மாந்து சிறுநடை நடந்து தன் பிடியொடு கூடி வண்டின் பாட்டொலி கேட்டு வாழையின் கீழ் உறங்கியதாம். (கூகூ௨)

## அ. பெண் யானையின் பேரறிவு

வாழை புன்னைச் சென்ற ஓர் ஆண் யானை, கால் இடறி அருகிலுள்ள பெருங்குழியில் வீழ்ந்து வெளியேற மாட்டாமல் தத்தளித்தது. அதைக் கண்ட பெண் யானை அதனை வெளியேற்ற முயல்கின்றது. தன் கைகொடுத்து கரையேற்ற இயலாதெனக் கருதிக் கரையிலுள்ள மரங்களை

யெல்லாம் உள்ளே ஒடித்து ஒடித்துப் போட்டது. ஆண் யானை அதனைப் படியாகக் கொண்டு வெளியேறிப் பேருவகை எய்தியதாம். பெண் யானையின் பேரறிவு இருந்தவாறு என்னே! (அகம் : ௮)

## ௯. பிடி போற்றிய பெருந்தகை யானை

குன்றை ஈன்று களைத்த பெண்யானை உறங்க, ஆண் யானை அதன் உடலைத் துதிக்கையால் தடவிக் கொடுக்குமாம். (அகம்: ௧௦௮) ஒரு பெண் யானை இறக்க, அக் கவலையால் ஆண்யானை உண்ணுந் தொழிலை மறந்து உயங்கிற்றாம். உடன் இறக்க ஆண் யானை உண்ணுதலை வெறுத்து வருந்தியது போலும். என்னே ஆண் யானையின் கற்பு! (அகம் : ௧௬௨)

இவ்வாறாக, யானையைக் குறிக்க செய்திகளை முறையே அகம் ௧௬௮, ௧௦௨, ௨௨௮, ௩௬௮, ௩௦௨, ௭௬௮ முதலிய பாடல்களில் மற்றும் பல காணலாம்.

2. புலி:—குட்டி ஈன்று இளைத்த பெண் புலியின் பசி போக்க ஆண் புலி காட்டுப் பசுவைக் கொன்று இழுத்துச் செல்லும். மறப்புலியும் தன் காதல் துணைக்குத் தன் கடனை ஆற்றுவது வியப்பன்றோ! (அகம் : ௨௧௮) புலி தான் கொல்லும் விலங்குகள் வலப்பக்கமாக விழுந்தால் மட்டும் அதனை உண்ணுமாம். அதனைக் கருதியே புலவர்கள் "வலம்படத் தொலைச்சி" என்றும், "இடம்படு பறியா வலம்படும் வேட்டத்து, வாள வரி" என்றும் (அகம் : ௨௫௨) கூறுவர். அகம் ௩௯௨, ௩௩௮ முதலியவற்றிலும் புலியைப் பற்றிய செய்தி குறிப்பிடப்படுகின்றது.

3. கரடி:—புற்றாஞ் சோற்றை உணவாகக் கொள்ளும். புற்றில் வாழும் பாம்பு, அது கூரிய நகத்தால்

தோண்டுவதால் அழியுமாம். (அகம் : ௮) மின்மினிப் பூச்சிகள் பொற்கொடிபோல ஒளிபடக் கரடி புற்றுஞ் சோற்றைத் தோண்டி உண்பது, இரும்படிக்கும் கொல்லன் போன்று இருக்குமாம். அகம் ௭௨, ௮௮, ௧௧௨ ஆகிய பாடல்களில் இச் செய்தி கூறப்படுகின்றது.

4. பன்றி:—நான்கு முலைகளை உடைய தன் பெண் பன்றியின் பசி போக்கக் காட்டைவிட்டு மலை வழியில் போந்து, அவண் வரும் ஆட்களைக்கொல்லைக் குறி பார்த்து நிற்கும். (அகம் : ௨௪௮) இரவில் தினை கவரச் செல்லுங்கால் தனக்கு வேட்டம் வாய்ப்பது கருதிப் பல்லியின் சகுனத்தைக் கேட்டுப் புறப்படுமாம். (அகம் : ௮௮)

5. நாய்:—கானவர்களும் பிறரும் தாம் வளர்க்கும் நாய்களைத் தம்முடன் கூட்டி வருவர். அகம்: ௨௮, ௧௮௨. இவற்றில் "பரியல் நாயொடு", "வயநாய் பிற்பட" என வருஉம் தொடர்களைக் காண்க.

1. மயில்:—மயில் நாட்டியம்: மழை தவழும் மலை ஒரு பால் அண்ணாந்து நிற்கின்றது. மலையினை ஓங்கி வளர்ந்த மூங்கில்கள் கோடைக் காற்றால் ஆடி அசைந்து இசை எழுப்புகின்றன. பளிங்கனைத் தெளிந்த அருவிநீர் இழும் என ஒலித்து இழிந்து வருகின்றது. கலைக் கூட்டங்கள் கடிய குரல் எழுப்பிக் களித்து விளையாடுகின்றன. மலைச் சாரலில் மலர்ந்துள்ள பூக்களில் வண்டுகள் பண் மிழற்றுகின்றன. மரத்தின்மிசை இருக்கும் மந்திகள் மருண்டு பார்க்கின்றன. இவற்றினிடையே அழகிய மயில் ஆடுகின்றது.

அக் காட்சியைக் கபிலர் காண்கிறார். கண்டவுடன் அவர் உள்ளத்து வேறொரு நினைவு தோன்றுகின்றது. என்னை? கழைக்கூத்தன் மகளிர் வலித்த மூங்கிலின்மேல்

ஏறி நின்று ஆடுவாள். அவள் கணவன் மத்தளம் முழக்குவான்; பிள்ளைகள் உடன் நின்று குழலும் வங்கியமும் ஊதுவர். மக்கள் சூழ்ந்து நின்று அவ்வாடலைக் கண்டு களிப்பர்.

அவளைப்போல மயில் ஆடுகின்றது. ஓங்கி வளர்ந்த மூங்கில் குழல் ஊதுகின்றது; அருவிநீர் ஏற்ற இழிவுகளில் விழுந்து எழுந்து முழவு கொட்டுகின்றது. கலைக் கூட்டங்கள் வங்கியம் வாசிக்கின்றன.

(வங்கியம், யானைத் துதிக்கையைப் போன்றதொரு வாத்தியம்.)

வண்டுகளின் பாட்டொலி யாழ் ஒலி ஒப்ப இருக்கின்றது. இத் திறத்தவாய இசைக் கருவிகளைக் கொண்டு மயில் ஆடுகின்றதாம். மந்திக் கிரள் அதைக் கண்டு மகிழ்கின்றதாம். இந் நாட்டியத்தைக் கபிலர் நமக்குக் காட்டுகிறார். காணுங்கள்!

ஆடமைக் குயின்ற அவிர்துளை மருங்கிற்
கோடை யவ்வளி குழலிசை யாகப்
பாடின் அருவிப் பனிநீர் இன்னிசைத்
தோடமை முழவின் துதைகுர லாகக்
கணக்கலை இகுக்கும் கடுங்குரல் தூம்பொடு
மலைப்பூஞ் சாரல் வண்டியா ழாக
இன்பல் இமிழிசை கேட்டுக் கலிசிறந்து
மந்தி நல்லவை மருள்வன நோக்கக்
கழைவளர் அடுக்கத் தியலி, யாடும் மயில்
நனவுப்புகு விறலியில் தோன்றும் நாட! (அகம்: அஉ)

இக் கண்கொண்டே கம்பர் தமது காவியத்தில் காட்டும் வேறொரு நாட்டியத்தையும் காணுங்கள். காலத்திற் கேற்பக் கருத்துக்களும் பாடல்களும் மாறுவதை அறியலாம்

மாலைப்பொழுது: சோலையில் ஒரு மயில் ஆடுகிறது; தாமரை மலர்கள் விளக்கேந்தி நிற்கின்றன; கொண்டல்கள் முழவையொப்ப முழக்குகின்றன. குவளை மலர்கள் அதைக் காண்கின்றன. குளத்து அலைகள் திரைச்சீலையொப்ப மடிந்து மடிந்து விழுகின்றன. வண்டுகள் யாழ் வாசிக்கின்றன. இவற்றைக் கண்டு மருத அரசன் மகிழ்கின்றானாம். (கம்ப. நாட்டு. ௪)

"தண்டலை மயில்களாடத் தாமரை விளக்கந் தாங்கக்
கொண்டல்கள் முழவி னேங்கக் குவளைகண் விழித்து நோக்கத்
தெண்டிரை யெழினி காட்டத் தேம்பிழி மகர யாழின்
வண்டுகள் இனிது பாட மருதம்வீற் றிருக்கும் மாதோ."

மயில் ஆட்டத்தை அகம், ௯௬௮-லும் காணலாம்.

**வண்டின் கனவு**:—சுனைப் பூக்களின் மொட்டுக்களை மலர்வித்து, வேங்கையின் பூங்கொத்தின் தாதினை நுகர்ந்து, காந்தளின் பூவிலே உறங்கி, ஒரு வண்டு யானையின் கவுள் இடத்து ஒழுகும் மதநீரை உண்பதாகக் கனவு கண்டதாம். (அகம்: ௧௯௨)

**மந்தியும் கடுவனும்**:—மந்தி - இக் காலத்தவர் ஆண் குரங்கை மந்தி என்பர். பண்டு மந்தி என்பது பெண் குரங்கையே குறித்து வழங்கியது. கடுவன் என்பது ஆண் குரங்கின் பெயர். "பெண்" "ஆணா"க மாறிய விந்தை என்று தோன்றியதோ! "வானரமும்," "அநுமானும்" தமிழ் நாட்டிடைப புகுந்தபின் உண்டாய மாறுபாடு போலும்.

வாழைக் கனியோடு பலாச்சுளையை உண்ட ஒரு குரங்கு நீர் வேட்கையால் சுனையிடத்து உள்ள தேனை நீரென்று கருதி உண்டது. தேனுண்ட மயக்கத்தால் மரம்

ஏறமாட்டாது, வேறிடமும் செல்லாது சந்தனமரத்தின் கீழுள்ள பூப்படுக்கையில் உறங்கியதாம் (அகம் : உ). பெண் குரங்கின் பசிபோக்கப் பலாச்சுளை பறித்துக் கொடுத்ததும், பலாப் பழத்தைக் கையில் தாங்கி, ஆடும் மயிலுக்கு முன் முழவு முழக்குகின்றவனைப்போல வைத்திருந்ததும், அதனைத் தெப்பமாகக் கொண்டு அருவி பாய்ந்ததும் (முறையே அகம் : உ௪௨, ௩௩௨, ௩௪௨, ௩௭௨ ஆகிய பாடல்களில்) நன்கு அறியலாம்.

பாம்புச் செடி :—புதுமையாக இச் செடியை அகநானூற்றில் காண்கின்றோம். இஃது எப்பொழுதும் பாம்பைப்போல் சீறிக்கொண்டிருக்குமாம். காட்டுவழிச் செல்வோர் பகலிலும் இதைக் கண்டு அஞ்சுவராம். (அகம், சு௮).

பாம்பு :—பாம்பு மணியைக் கக்கி வைத்துவிட்டு இரை தேடும். ஒரு பாம்பு தன் மாணிக்கத்தை இழந்து, காந்தள் பூவிடைப் புகுந்து நிறம் மாறுபட்ட வண்டைத் தன் மணி என்று எண்ணி மயங்கியதாம். (அகம் : கூ௮)

வரலாற்றுச் செய்திகள் :—அகநானூற்றில் காணப்படும் சில வரலாற்றுச் செய்திகள் பொருளை விளக்க உவமையாக வந்தனவே. பரணரே மிகுதியாக வரலாற்றை உவமை கூறுபவர். இவண் இரண்டொன்று கூறுதும்

தலைவியின் நெற்றிக்கு மணம்மிக்க ஒரு சிறந்த மலரை உவமை கூறவந்த மதுரை நக்கீரனார் பாரி வரலாற்றைப் பகருகின்றார். பாரி எதிரியொடு போர் செய்யுங்கால், முற்றுகையிடப்பட்ட அவன் அரணில் வாழ்வார்க்கு, அவன் தோழர் கபிலர் கிளியினால் வெளியில் இருந்த நெற்கதிர்களைக் கொண்டுவரச் செய்து அனைவருக்கும் உணவூட்டிய பெருந்தன்மையைக் குறிப்பிடுகின்றார். (அகம் :

௭௮) அப் பாரியின் சுனையிற் பூத்த மலர் போன்றதாம் அவள் நெற்றி.

பரணர், தோழி தலைமகன்பால் தலைவியை அழைத்துச் செல்வதற்கு உவமையாக ஆதிமந்தியின் வரலாற்றை அறிவிக்கிறார். ஆதி மந்திக்குக் கடலிடைச் சென்ற தலைவனைக் காட்டிய மருதிபோல யான் புகழ் உறுவேனாக. (அகம், ௨௨௨) தலைவியைப் பெற்று மகிழ்ந்த தலைவன் தனது மகிழ்ச்சிக்கு மாந்தரன் மருகனாகிய பொறையன் கடுங்கோவைப் பாடிச் சென்றதினால் பெற்ற அணிகளைக் கொண்டு மகிழும் வறியவர் மகிழ்ச்சியை ஒப்பிடுகிறார். (௧௪௨) இங்ஙனே ௩௯௮, ௩௯௨, ௩௭௨, ௩௬௮, ௩௪௨, ௩௩௮, ௩௨௨, ௨௬௨, ௨௫௮, ௨௩௮, ௨௦௫, ௧௬௨, ௧௫௨, ௧௪௮, ௧௨௨) எண்களை உடைய பாடல்களில், பழந்தமிழ் நாட்டின் வேளிர்கள் வரலாற்றையும், சில ஊர்களின் சிறப்பையும், சில போர் நிகழ்ச்சிகளையும் பிறவற்றையும் புலவர்கள் குறிப்பிடுகின்றனர்.

பழக்க வழக்கங்கள்:—அகநானூற்றுள் அறியப்படும் பழக்க வழக்கங்கள் பலப்பல. அவற்றுள் சில காட்டுதும்.

1. ஆடவர் கொள்ளியைக் கையிலேந்தி உயர்ந்த பரண்மீது இருந்து தினைப்புனத்தைக் காத்தல்.

2. மார்பில் சந்தனம் பூசுதல். கழுத்தில் மாலையும் தலையில் கண்ணியும் சூடல்.

3. குறவர் தேன் கலந்த பலாச்சுளையொடு மாங்கனியுண்டு மூங்கிற்புட்டியில் அடைத்த கள்ளைக் குடித்தல்.

4. இடையூறின்றித் தன் ஊர் சென்றதற்கு அறிகுறியாகக் கொம்பு ஊதுதல்.

5. நாய் வளர்த்தல்.

6. பெண்கள் திணைப்புனத்திணைத் தட்டையெனும் கருவிகொண்டு கிளி யோட்டல்; வேலம் வெறியாட் டெடுத்தல்; இளம் பெண்கள் இல்லுறை கடவுளை வழி படல்.

7. வளர் பிறையில் திருமணம் கொள்ளல்.

8. குழியில் மணி அகழ்ந்தெடுத்தல்.

9. வீடுகளில் ஓவியம் வரைதல்.

10. காவிரி நீராடிக் களித்து மகிழ்தல்.

11. விழாக்கள்: உள்ளி விழா: இவ் விழாவில் கொங்கர் இடையில் மணிகட்டித் தெருக்கள்தோறும் ஆடிப் பாடுவர். (௩௬௮) குரவைக் கூத்து. (௨௩௨).

இறுவாய்:—'காதல்' என்ற சொல் இன்று தன்னுரிய பொருளை இழந்து தவறிய பொருளில் வழங்கப்பட்டு வருகின்றது. 'குறித்த ஓர் இன்பத்தை நிறைவேற்று வதே பழந்தமிழ்க் காதல்' எனக் கொண்டு, சில புதிய தமிழர்கள் அதனை இழித்துப் பழித்துரைக்கப் புறப்படு கின்றனர். அவர் குறிப்பிடுவது கூட்டத்தை. அக் கூட்டத் தைப் பழந் தமிழாசிரியர்கள் காதல் என்றிலர். "காமம்" எனக் கூறிப் போந்தனர்.

"காம நோயெனச் செப்பாதீமே!" (அகம்: ௫௨)

"காமங் கலந்த காத லுண்டெனின்!" (அகம்: ௨௧௮)

என வரும் தொடர்களைக் காண்க.

அவரொன்றுங் கூட்டமொன்றையே குறிக்கொண் டது பழந் தமிழ்க் காதல் அன்று. அது நாய்க்காதல்; பேய்க்காதல்; இன்றைய சில நாகரிகக் காதல்.

ஆண் பெண் வாழ்க்கைக்கு, இன்றைய 'பகுத்தறிவு' என்ன நிலை வேண்டுமென்று கூறுகின்றதோ, அதனினும் உயர்ந்த ஒரு நிலையையே பழந் தமிழர் கொண்டு வாழ்ந்தனர். அன்பர்காள்! அவ் வாழ்க்கை நாட்டிற் பரவ வேண்டும். அதனைப் பரப்ப "அகநானூறு" அனைய தமிழ்நூற் பயிற்சி நாட்டிடை மல்கவேண்டும். மல்கின் தமிழ்நாடு தனக் கிணையிலாப் புகழ்கொண்டு விளங்கும்!

வாழ்க! வளர்க! வெல்க!

